# கல்கியின் பார்த்திபன் கனவும் மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவும் ஒரு மதிப்பீட்டு ஒப்பீடு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு (Thesis)


ஆய்வாளர்

**மா.ரெத்தினேஸ்வரி**

(பதிவு எண்: 0177)

நெறியாளர்

பேரா.முனைவர் **மு. பாண்டி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத்தர நிர்ணயக் குழுவின் மறுதரமதிப்பீட்டில் ''A''மதிப்புப் பெற்றது)

**காரைக்குடி – 630 003**

**தமிழ்நாடு**


**நவம்பர் - 2013**

**பேரா. முனைவர் மு.பாண்டி,**

*பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,*

*அழகப்பா பல்கலைக்கழகம்,*

*காரைக்குடி - 630 003.*

நாள் :

# நெறியாளர் சான்றிதழ்

**"கல்கியின் பார்த்திபன் கனவும் மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவும்– ஒரு மதிப்பீட்டு ஒப்பீடு"** *என்னும் தலைப்பில்* **திருமதி மா.ரெத்தினேஸ்வரி** *அவர்கள் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னிச்சையாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

**(மு.பாண்டி)**

*நெறியாளர்*

**மா.ரெத்தினேஸ்வரி,**
*முனைவர் பட்ட ஆய்வாளர்,*
*பதிவு எண்.0177,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

*நாள் :*

# ஆய்வாளர் உறுதிமொழி

**"கல்கியின் பார்த்திபன் கனவும் மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவும்– ஒரு மதிப்பீட்டு ஒப்பீடு"** *என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.*

**(மா.ரெத்தினேஸ்வரி)**
ஆய்வாளர்

*நெறியாளர்*

**பேரா. முனைவர் மு.பாண்டி,**
*பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 630 003.*

# நன்றியுரை

"**கல்கியின் பார்த்திபன் கனவும் மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவும் ஒரு மதிப்பீட்டு ஒப்பீடு**" என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பாக அமைந்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், **துணைவேந்தர்** அவர்களுக்கும் எனது நன்றிகள்.

ஆய்வு செம்மையுற அமைய பல வழியிலும் உதவிபுரிந்து, நெறிப்படுத்தியும், ஊக்கப்படுத்தியும் வழிகாட்டிய எனது அன்பிற்குகந்த நெறியாளர் பேராசிரியர் முனைவர் **மு.பாண்டி** அவர்களுக்கு என் பலகோடி நன்றி உரியதாகும்.

எனது ஆய்விற்கு உதவித்தொகை வழங்கி, ஊக்கப்படுத்திய மைசூரிலுள்ள தேசியத் தேர்வுப் பணி மையத்திற்கு என் மனமார்ந்த நன்றிகள்.

நான் படித்துப் பட்டம்பெறவேண்டும் என கனவுகண்டுவந்த எனது மதிப்பிற்குரிய பெற்றோர்களான **திரு.மொ.மாரி - திருமதி மா.மாரிக்கண்ணு** அவர்களுக்கும், எனது பாசமிகு சகோதரர்களான ராஜ், ரமேஷ், தாஸ், சுரேஷ், இராஜேஷ் ஆகியோர்களுக்கும் நன்றி என்றும் உரியது.

என் வாழ்வில் பங்குகொண்டு, எனக்குப் பலவகையிலும் உறுதுணையாகவும், உதவியாகவும் இருந்துவரும் என் அன்புக் கணவர் திரு.இரா.பாண்டிச்செல்வம் அவர்களுக்கும், என் உயிரிலும் மேலான எனது அருமை மகள் ரெ.பா.ஹாசினிக்கும் என் வாழ்நாள் இறுதிவரை நன்றிசொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்விற்குப் பலவகை நூல்களை அளித்த அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கும் என்னுடன் ஆய்வு மேற்கொள்ளும் முனைவர்பட்ட ஆய்வாளர்களுக்கும் என் நன்றிகள்.

இவ்வாய்வினைச் செம்மையுற தட்டச்சு செய்து உதவிய காரைக்குடி மகேஷ் கணினி நிறுவனத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மா.ரெத்தினேஸ்வரி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| மேலது | - | மேலே குறிப்பிட்டுள்ளது |
| தொல். | - | தொல்காப்பியம் |
| மூ.நூ. | - | மூலநூல் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா.எண். | - | பாடல் எண் |
| பா.வரி. | - | பாடல் வரி |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| நூ.எ. | - | நூல் எண் |
| நன். | - | நன்னூல் |
| உவமை | - | உவமையியல் |
| தண்டி. | - | தண்டியலங்காரம் |
| செய். | - | செய்யுளியல் |
| குறள். | - | திருக்குறள் |

# பொருளடக்கம்

# முன்னுரை

*புதினம் இன்றைய இலக்கிய வளர்ச்சியில் நடப்பியலும், கற்பனையும் கொண்டு தமிழ்க் காப்பியம் போல விளங்குகிறது. படைப்பாளர்கள் மனித உறவுகளின் பல்வேறுபட்ட அனுபவங்களை இனிமையோடும், போராட்டப் பண்புகளோடும் உள்ளம் கொள்ளுமாறு பதிவு செய்பவர்கள். வரலாற்றுப் புதினங்கள் அவை தோன்றிய காலத்தின் தன்மைகளைப் பதிவு செய்கின்ற வரலாற்று ஆவணங்களாகவும் திகழ்கின்றன. இந்த வரிசையில் தமிழில் கல்கியும், கன்னடத்தில் மாஸ்தியும் குறிப்பிடத் தக்கவர்களாவர்.*

*தமிழிலுள்ள கல்கியின் படைப்பான பார்த்திபன் கனவினையும், கன்னடத்திலுள்ள மாஸ்தியின் படைப்பான சிக்கவீரஇராஜேந்திராவையும் மதிப்பிட்டு ஒப்பீடு செய்யும் நோக்கில் இத்தலைப்பு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.*

### ஆய்வுத் தலைப்பு

**“*கல்கியின் பார்த்திபன் கனவும் மாஸ்தியின் சிக்கவீர* இராஜேந்திராவும் ஒரு மதிப்பீட்டு ஒப்பீடு”** *என்பது இந்த ஆய்வின் தலைப்பாகும்.*

### ஆய்வு நோக்கம்

*புதினங்கள் பற்றிய ஒப்பீட்டாய்வுகள் பலவாறு நிகழ்ந்துள்ளன. இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இருவரும் தத்தம் காலம், சமூகம் சார்ந்த வரலாற்றினை, மாந்தர்களை, இலக்கியக் கூறுகளைத் தங்கள் படைப்புகளில் எவ்வாறு கையாண்டுள்ளார்கள் என்று மதிப்பிட்டு, ஒப்பிட்டு இவ்விரு படைப்பாளர்களின் சமூக, வரலாற்றுப் பதிவுகளைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.*

### ஆய்வு எல்லை

*வரலாற்றுப் புதினங்களைப் படைப்பதில் தமிழில் கல்கியும், கன்னடத்தில் மாஸ்தியும் தலைசிறந்தவர்கள். கல்கியின் பார்த்திபன் கனவு, மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திரா இரண்டும் ஆய்வு எல்லையாகக் கொள்ளப்பெற்றுள்ளது.*

## கருதுகோள்

மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவும், கல்கியின் பார்த்திபன் கனவும் வெவ்வேறு மொழிகளில் தோன்றிய சமகாலப் புதினங்களாகும். இவ்விரண்டும் மாந்தர் படைப்புகளில் மட்டுமல்லாது கால பண்பாட்டுச் சூழலுக்கேற்ற வரலாற்றுப் புதினங்கள் என்பதால், தத்தம் மரபுகளுடன் வரலாற்றுக் கூறுகளில் பொதுப்பண்புகள், தனிப்பண்புகள் இருக்க வேண்டும். கல்கி, மாஸ்தி இருவரும் அவரவர் காலச் சமுதாயம், மொழி, இனம், சாதி, பண்பாடு, அரசியல், தொழில்கள் போன்றவற்றைப் பதிவு செய்திருக்க வேண்டும். அவர்தம் கால வரலாற்று நாயகர்கள், வரலாற்று நிகழ்வுகளின் சான்றுகளாவர் என்னும் நிலையில் மாந்தர் படைப்பிலும் தனித்தன்மைகள் இருக்க வேண்டும் என்பது ஆய்வின் கருதுகோளாகும்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

கன்னடத்தில், சிக்கவீர இராஜேந்திராவிற்குச் சீனிவாசன் உரைப்பதிப்பும், ஹேமா ஆனந்த் தீர்த்தன் தமிழில் மொழி பெயர்த்து எழுதிய சிக்கவீர இராஜேந்திராவும், தமிழில் திருமதி கௌமாரீஸ்வரி பதிப்பித்த பார்த்திபன் கனவும் முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

புதினங்கள் பற்றி வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், இதழ்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள் முதலானவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

## ஆய்வு அணுகுமுறை

இரு புதினங்களையும் விளக்க விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive approach), இரு புதின ஆசிரியர்களின் படைப்புக்களையும் ஒப்பீடு செய்ய ஒப்பீட்டு அணுகுமுறையும் (Comparative approach), கால, மரபுச் சூழல்களின் அடிப்படையில் இரு புதினங்களில் காணலாகும் சமூகக் கூறுகளைக் கண்டறிய சமூகவியல் அணுகுமுறையும் (Socialogical approach), வரலாற்றுக் கூறுகள் பற்றி அறிய வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical approach) இவ்வாய்வில் மேற்கொள்ளப்படுகிறது.

**இயல் பகுப்புகள்**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை, நீங்களாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. அவை,

1. கல்கி - மாஸ்தி அறிமுகம்
2. சமூகக் கூறுகள்
3. வரலாற்றுக் கூறுகள்
4. மாந்தர் படைப்புக்கள்
5. உத்தியும் நடையும்

என்பனவாகும்.

**ஆய்வு முன்னுரை**

ஆய்வு முன்னுரையில், ஆய்வுத் தலைப்பு, நோக்கம், எல்லை, சான்றாதாரங்கள், கருதுகோள், அணுகுமுறைகள், இயல்பகுப்பு முதலானவை விளக்கப் பெற்றுள்ளன.

**இயல் ஒன்று**

'கல்கி - மாஸ்தி அறிமுகம்' என்னும் முதல் இயலில் இயற்பெயரே கல்கி என மயங்கும் வகையில் அப்பெயரிலேயே தமக்கெனத் தமிழ் இலக்கிய உலகில் ஒரு தனியிடத்தை ஏற்படுத்திக் கொண்ட கல்கி பற்றியும், இந்தியாவில் இலக்கிய மரியாதை பெற்றவரும், கன்னட நாட்டின் சொத்தாகக் கருதப்படுபவருமான மாஸ்தி பற்றியும் விளக்கப்பெற்றுள்ளன.

இருவரின் பிறப்பு, கல்வி, வேலை வாய்ப்பு, இலக்கியப்பணி, சமூகப்பணி, இருவரின் குடும்பங்கள், இறப்பு போன்ற பல்வேறு செய்திகள் இடம்பெறுகின்றன. ஒரே காலக்கட்டத்தைச் சேர்ந்த இரு வேறு மாநிலங்கள் மற்றும் மொழி ஆசிரியர்களின் படைக்கும் திறன், காலப் பின்னணி திறம்படத் தெரிகிறது.

கல்கி 55 வயது வரையிலும், மாஸ்தி 95 வயது வரையிலும் இலக்கியப்பணி ஆற்றியிருக்கின்றனர். இருவரும் நாட்டுப் பற்றுக் கொண்டவர்களாக இருந்தாலும் கல்கி சிறைவாசத்தை அனுபவித்திருக்கிறார். இருவரும் முற்பட்ட ஐயர், ஐயங்கார் வகுப்பைச் சார்ந்தவர்கள்.

கல்கியைப் பற்றி முருகு சுப்பிரமணியன், கா.பொ.இரத்தினம், தனிநாயக அடிகளார், வை.திருநாவுக்கரசு, க.நா.சுப்பிரமணியம், அ.ச.ஞானசம்பந்தன் போன்ற பல்வேறு அறிஞர்களும், மாஸ்தியைப் பற்றி க.நா.சுப்பிரமணியம், எல்.எஸ்.சேசகிரிராவ், இராஜகோபாலச்சாரியார், கொரூர் இராமலிங்க சுவாமி ஐயங்கார், கே.சிவராம ஐத்தாள் போன்றோரும் சிறப்பான முறையினில் தங்களின் கருத்துக்களைக் கூறியிருக்கின்றனர்.

இரு புதினங்களும், இரு புதின ஆசிரியர்களும் ஒரே காலக் கட்டத்தைச் சேர்ந்ததாக இருப்பதனால், இருவேறு மொழி ஆசிரியர்கள் ஒரே காலக்கட்டத்தைத் தங்கள் புதினங்களில் எவ்வாறு கூறியிருக்கின்றனர் என்பதை விளக்கும் விதமாக முதல் இயல் அமைந்துள்ளது.

### இயல் இரண்டு

'சமூகக் கூறுகள்' என்னும் இரண்டாம் இயலில், சமூகம் என்பது கூட்டு வாழ்க்கைமுறையினைக் குறிப்பதாகும். மனிதன் விலங்கின் நிலையிலிருந்து மாறி ஒருவரையொருவர் உறவு கொள்ளும் நிலையில் சமூகம் உருவாகின்றது எனக் கூறப்படுகிறது.

சமூகங்கள் பற்றிய பலரின் கருத்துக்களும், அகராதிகள் தரும் விளக்கங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

மக்கள் அனைவரும் ஒன்றுகூடி வாழும் ஓர் அமைப்பினைச் சமூகம் என்பர். இந்த சமூகத்தின் நிறுவனங்களான, தனி மனிதன், குடும்பம், சாதி, சமயம், அரசியல், தொழில்கள், தெய்வங்கள், விழாக்கள், வழிபாடுகள், அணிகலன்கள், உணவுமுறைகள், கால்நடைகள், கருவிகள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

குடும்பப் பண்பு சமுதாயப் பண்பாகப் பரவவில்லையானால் அது இன்பமாக வளரமுடியாது எனக் கூறப்படும். குடும்பத்திலுள்ள உறவுமுறைகளான, தந்தை மகன்; தந்தை மகள்; தாய் மகன்; தாய் மகள்; கணவன் மனைவி போன்ற உறவுமுறைகள் விளக்கப் பெற்றுள்ளன.

அரசியல் நிலையில், இளவரசர், அமைச்சர், பாதாளச் சிறைகள், சுரங்கவழிகள், குற்றவாளிகள் பெற்ற தண்டனைகள் போன்றவை இரண்டாம் இயலில் அமைந்துள்ளன.

**இயல் மூன்று**

'வரலாற்றுக் கூறுகள்' என்னும் மூன்றாம் இயலில், வரலாறு என்பது கடந்த காலத்தை மட்டும் கூறுவதன்று. இன்றைய செய்திகள் நாளைய வரலாறாக மாறிவிடும். வரலாறு என்றால் அது மன்னர்களையும் அவர்களது அந்தரங்கங்களையும், வெற்றி தோல்விகளையும் மட்டும் பேசுவதன்று. கடந்தகால மக்களின் பிரச்சினைகள், நிகழ்காலத்தில் நிரல்படுத்தப்பட்டு வருங்காலத்திற்கு இலட்சிய வாழ்க்கையை எடுத்தியம்புவதே வரலாற்றின் செயல்பாடாக இருக்க வேண்டும் என்று இரா.பாலசுப்பிரமணியன் அவர்கள் கூறியிருக்கின்றார்.

இத்தகைய வரலாற்றுப் புதினங்களில் வரலாற்று நிகழ்வுகள், இடங்கள், காலம் போன்றவை கூறப்பட்டுள்ளன.

கல்கியின் புதினத்தில் மூன்று வரலாற்று நிகழ்வுகளும், நிகழ்ச்சி நடந்த களங்களாக உறையூர், காஞ்சி, மாமல்லபுரம், திருச்சி, ஸ்ரீரங்கம் போன்ற இடங்களும் கூறப்படுகின்றன. மாஸ்தியின் புதினத்தில் ஒன்பது வரலாற்று நிகழ்வுகளும், நிகழ்ச்சி நடந்த களங்களாக மடிக்கேரி, பாகமண்டலம், மைசூர், பெங்களூர், மங்களூர், அப்பங்கொளம், இங்கிலாந்து போன்ற இடங்களும் சுட்டப்படுகின்றன.

கல்கி கி.பி.685 களில் ஆண்ட சோழமன்னர்களின் வரலாற்றைத் தம் புதினத்தில் கையாண்டிருக்கிறார். மாஸ்தி 1820லிருந்து 1834 வரை ஆட்சி புரிந்த குடகு மன்னன் பற்றிக் கூறியிருக்கிறார். கல்கியின் புதினம் 1943லும், மாஸ்தியின் புதினம் 1956லும் வெளிவந்தன.

பார்த்திபன் கனவு பத்தாண்டுகால நிகழ்வினையும், சிக்கவீர இராஜேந்திரா அறுபது ஆண்டுகளுக்கும் மேலான நிகழ்வுகளையும் கூறும் செய்திகளை இவ்வியல் தெளிவுபடுத்துகிறது.

### இயல் நான்கு

'மாந்தர் படைப்புகள்' என்னும் நான்காவது இயலில், ஒரு புதினம் சிறந்து விளங்க அடித்தளமாக அமைவது மாந்தர் படைப்பு. கருத்துப் பொருளாக இருக்கும் ஒன்றைக் காட்சிப் பொருளாகக் காட்டுவது அதில் உலாவரும் மாந்தர்களே ஆவர் எனக் கூறப்படுகிறது.

ஆசிரியன் தான் படைக்கும் புதினங்களில் கதைக்கருவுக்கு முக்கியத்துவம் கொடுப்பது போல், மாந்தர்களை உயிரோட்டமுடையதாகப் படைத்துப் புதினத்தைச் சிறப்படையச் செய்கிறான்.

மனித வாழ்க்கைச் சிக்கல் நிறைந்தது. அதைப்போன்றே மனிதரின் பண்பு நலன்களும் அமைகின்றன. அப்பண்புகளைப் பிரதிபலிப்பதாக மாந்தர் படைப்பு அமைய வேண்டும் என அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள் கூறியிருக்கிறார்.

மாந்தர்களை முன்புல மாந்தர்கள், பின்புல மாந்தர்கள் எனப் பிரித்து, இரண்டிலும், வரலாற்று மாந்தர்கள் யார், கற்பனை மாந்தர்கள் யார் என அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய மாந்தர்களை,

1) தலைமை மாந்தர்கள்
2) இணை மாந்தர்கள்
3) துணைமை மாந்தர்கள்
4) பிறநாட்டு மாந்தர்கள்
5) அஃறிணை மாந்தர்கள்
6) பிற மாந்தர்கள்

என இவற்றுள் அடக்கிக்கூறும் விதமாக நான்காவது இயல் அமைந்துள்ளது.

### இயல் ஐந்து

'உத்தியும் நடையும்' என்பது ஐந்தாம் இயலாகும். படைப்பாளனின் கலைத்திறனை எடுத்துக் காட்டுவது உத்தியும் நடையும் ஆகும். இலக்கியங்களில் பலதரப்பட்ட உத்திகளும், நடையும் பயன்படுத்தப் பட்டு, கலை செம்மையாக அமைய உதவுகின்றன. எந்தப் படைப்பிற்கும், உத்தியும், நடையும் இன்றியமையாததாகிறது.

படைப்பாளி என்ன சொல்கிறான் என்றறிவதில் அதன்பொருள் சிறந்து நிற்கிறது. அதையே படிப்போர் மனத்தில் படியும்படி சொல்வது மேலும் சிறப்பானதாகும். இவ்வாறு கதை சொல்லும் முறையே உத்தி ஆகும். உத்திகள் புதிது புதிதாகப் பிறக்கின்றன. ஒவ்வொரு படைப்பாளரையும் அர்த்தப்படுத்துவதும், கௌரவப்படுத்துவதும், படைப்பாளரை இன்னார் என இனங்காட்டுவதும் இவ்வுத்திகளும் நடையுமே ஆகும்.

கல்கி, மாஸ்தி இருவரும் தத்தம் புதினங்களில் உவமை, உருவகம், புராணக்குறிப்பு, கடிதம், கிளைக்கதை, கனவு, நனவோடை, வருணனை, முன்உணர்த்துதல், கற்பனை, பழமொழி என எண்ணற்ற உத்திகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

கல்கியின் நடை எதார்த்தமான இலக்கிய நடையைப் பெற்றதாகவும், மாஸ்தியின் நடையில் அதிகளவில் எதார்த்த சொற்கள், கொச்சைச் சொற்கள் இருப்பதையும் உத்தியும் நடையும் என்னும் ஐந்தாவது இயல் சுட்டிக்காட்டுகிறது.

**முடிவுரை**

இவ்வாய்வேட்டின் முடிவுரைப் பகுதியில் இயல்களில் கண்டறியப்பட்ட இரு படைப்பாளர்களின் கருத்தமைவுகள், வெளிப்பாடுகள் தொகுத்து அளிக்கப்பெறும். இவற்றின்வழி பெறப்படுகின்ற இரு ஆசிரியர்களது தனித்தன்மைகள், ஒற்றுமை, வேற்றுமைகள் மதிப்பீடு செய்து சுட்டப்பெறும்.

**துணைநூற்பட்டியல்**

முடிவுரையை அடுத்து ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் மற்றும் பிற சான்றுகள் துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படி சுட்டப்பெற்றுள்ளன.

**பின்னிணைப்பு**

கல்கியின் படைப்புக்களோடு, மாஸ்தியின் படைப்புக்களும் மொழி பெயர்க்கப்பட்டு, அட்டவணையாகப் பட்டியலிட்டுக் கொடுக்கப்பட்டுள்ளது.

# கல்கி - மாஸ்தி அறிமுகம்

## முன்னுரை

*புதினம் இன்று பெரும்பாண்மையோரால் விரும்பப்படும் இலக்கிய வகையாகும். "புதினம் என்பது நமக்குக் கிடைத்தப் புதிய வரவு."[1] பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கி இன்னும் வளர்ந்துகொண்டு செல்கிறது. சிற்றிலக்கியங்கள், பேரிலக்கியங்கள் பல தமிழ் மொழிக்கேற்ற அணிகலன்களாக உருவெடுத்தன. அவற்றின் உருவத்தையும், உள்ளடக்கத்தையும் அவ்வப்போது எழுந்த பெயரறியாத் திறனாய்வாளர்கள் செப்பம் செய்தனர். அதன் விளைவாகத் தமிழில் இன்றைய இலக்கியச் செல்வம் பரந்து கிடக்கிறது. அப்பரப்பின் ஒருபகுதியாக புதினம் ஒளிவிடுகிறது.*

*"புதினம் பலவகைகளைக் கொண்டதாகக் காணப்படுகிறது. அவற்றுள் ஒன்று வரலாற்றுப் புதினம். முதன் முதலாகத் தோன்றிய வரலாற்றுப் புதினம், சரவணமுத்துப்பிள்ளை எழுதிய 'மோகனாங்கி' (1895) எனக் குறிப்பர்."[2] பிற்கால நாயக்கர் ஆட்சியை அடிப்படையாகக் கொண்டு அது உருவாயிற்று.*

*நாட்டுப் போராட்டம் காந்தி அண்ணலின் தலைமைக்கு மாறிய பின் இலக்கிய உலகிலும் ஒரு மாற்றம் ஏற்படத் தொடங்கியது. பழைய வரலாற்று நிகழ்ச்சிகளைப் புதிய வரலாற்றுப் போக்கிற்கு உதவும் வகையில் புதிய எண்ணங்களைத் தூவ முனைந்தனர். இந்திய மொழிகளில் எல்லாம் இத்தகைய மறுமலர்ச்சிப் பரவத் தொடங்கியது. கன்னட மொழியில் மாஸ்தியும், தமிழில் கல்கியும் பழைய வரலாற்றைப் புதிய வரலாற்றுக்கு உரமாக்கினர்.*

*ரெனிவெல்லாக் கூறியதற்கேற்ப தேசிய - மாநில விருப்பு வெறுப்பைக் கடந்த நிலையில், பல்வேறு தேசிய இலக்கிய மரபுகளின் சிறப்பை மறவாமல், குறையாமல் மதிப்பிட உதவுவது ஒப்பிலக்கியம். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு மாஸ்தி - கல்கி புதினங்களை ஒப்பிட்டால் தமிழ், கன்னடம் ஆகிய இரு மொழிகளின் இடைப்பட்ட தேசிய ஒருமைப்பாடு, நீரோட்டம் எழுச்சி வெள்ளத்தை அளவிட்டுக் காண இயலும் என்னும் நோக்கில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது."[3]*

## வரலாற்றுப் புதினம்

புதினங்களைச் சமூகப் புதினங்கள், துப்பறியும் புதினங்கள், வட்டாரப் புதினங்கள், தலித்தியப் புதினங்கள், வரலாற்றுப் புதினங்கள் என வகைப்படுத்திக் கூறுவர். "புதினங்களைப் பலவகைகளாகப் பிரிப்பர் ஆய்வாளர்."[4] அவற்றுள் ஒன்று வரலாற்றுப் புதினம். "இறந்த காலத்தை மட்டுமே வரலாற்றுப் புதினமாக வடிவுகொள்ள வேண்டுமென்பதில்லை. வரலாற்று நிகழ்ச்சிகளைக் கதையுடன் பின்னிப் பிணைக்கும் பொழுதுதான் உண்மையான வரலாற்றுப் புதினம் வடிவு கொள்கிறது."[5]

"வரலாற்றுப் புதினாசிரியர் கூறும் வரலாற்று நிகழ்ச்சிகள் உலக வரலாற்றில் பெரும் சிறப்புப் பெற்றனவாக இருக்க வேண்டுமென்பதில்லை. புறநிலையில் தனிச்சிறப்பில்லா நிகழ்ச்சிகளும், சிறு உறவுகளும் உலக வரலாற்றுப் பெருநிகழ்ச்சிகளைவிட வரலாற்றுப் புதினத்திற்குப் பெரிதும் ஏற்புடையனவாக அமையும் என்பார் 'வரலாற்றுப் புதினம்' என்ற நூலின் ஆசிரியர் ஜார்ஜ் லூகாஸ்."[6]

"சில நேரங்களில் வரலாற்றைத் தேடிப் படிக்கத் தூண்டுகோலாகவும் அமையும் வரலாற்றுப் புதினம், புதின உலகின் ஒரு சிறந்த பயனுள்ள புதின வகையைச் சார்ந்ததே என அறிய முடிகிறது. எனவே வரலாற்று நூல்களிலேயே வரலாற்றுப் புதினங்கள் உள்ளன எனக் குறைத்து மதிப்பிடுவது"[7] பொருத்தமற்றதாகிறது.

## தமிழில் வரலாற்றுப் புதினம்

"1901 ஆம் ஆண்டிலிருந்தே தமிழில் வரலாற்றுப் புதினங்கள் எழுதப்பட்டன எனினும், கல்கிக்கு முன்னர் வரலாற்றுப் புதினத்தை எழுதவேண்டும் என்ற உணர்வு கொண்டவர் யார் என்பதைத் தெளிவாக உணரமுடியவில்லை"[8] என்பர்.

"தமிழில் எழுந்த முதல் வரலாற்றுப் புதினம் 'மோகனாங்கி' (1895) என்பர்"[9] "இராசபுரத்து வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு ஆர்.பி.குழந்தைச்சாமிப்பிள்ளை 'சத்தியவல்லி' (1910) என்றப் புதினத்தைப் படைத்தார். தமிழகத்துக்கு அப்பாலுள்ள மாநிலத்தைப்

*பற்றி எழுதப்பெற்ற முதல் வரலாற்றுப் புதினம் இது எனத் தமிழ் புதினாசிரியர்கள் குறிப்பிடுவர்.*"[10]

"*பாலாதித்யா* ***(1929)*** *என்ற வரலாற்றுப் புதினத்தை ஏ.எஸ்.பி. ஐயர் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார். ' இந்நூல் லண்டன் டைம்ஸ்' போன்ற பத்திரிகைகளின் பாராட்டைப் பெற்றது.*"[11]

"*இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் 'பிரிதுளை,' 'வித்யாரண்ய நகரம்' போன்ற வரலாற்றுப் புதினங்கள் வெளிவந்தன எனவும், அவற்றுள் வரலாறு இருந்ததேயன்றிப் புதினம் இல்லை எனவும் இரா.தண்டாயுதம் தம் நூலில் குறிப்பிடுகிறார்.*"[12] "*இடையே ஆங்கில வங்காள, மராத்திய மொழி வரலாற்றுப் புதினங்களின் மொழி பெயர்ப்புகள் வெளிவந்தன.*"[13]

"*தமிழில் சிறந்த வரலாற்றுப் புதினம் ஒன்றுகூட இல்லை என ஏக்கம் கொண்ட கல்கி,*"[14] *ஆனந்தவிகடனில் நடத்திய புதினப் போட்டியின் பயனாகக் கிடைத்த வரலாற்றுப் புதினம் மஞ்சுளா* ***(1934)*** *என்பது.*

*மதுரை அழகிய அம்பலவாணனார் எழுதிய 'எயினியும் நாகனும்' அல்லது 'இளந்தமிழ்க் காதலர்'* ***(1938)*** *ஓர் இன்பச்சுவை நிறைந்த புதினம். புறநானூற்றில் வந்துள்ள ஒரு சிறு வரலாற்றுப் பகுதியின் விளைவாயினும், தமிழ் இலக்கியங்களில் காணப்படும் பல அகத்துறைக் கருத்துக்களைக் கொண்டு வடிவம் பெற்றுள்ளது.* "*நாகன், எயினி, பெருஞ்சாத்தனார், பெருநற்கிள்ளி போன்ற வரலாற்று மாந்தர்களுடன் நாவலன், மழவர்பிரான், தாமரை, நங்கை, செந்தாமரைச் செல்வி, கருங்குழலி, வார்குழலி போன்ற பல கற்பனை மாந்தர்களையும் கொண்டுள்ளது.*"[15]

*இவை தவிர கல்கிக்கு முன் பல வரலாற்றுப் புதினங்கள் வடிவம் கொண்டிருக்கலாம். ஆனால் அவை கல்கியின் வரலாற்றுப் படைப்புக்களின் காரணமாய்ச் சிறப்பினை இழந்து விட்டனவோ என எண்ணத் தோன்றுகிறது. மேலும்,* "*கல்கியே தமிழ் வரலாற்றுப்*

*புதினத்தின் முன்னோடி என்பதை ஹஸனின் கூற்று வலியுறுத்தி மெய்ப்பிக்கிறது.”*[16]

## கன்னடத்தில் வரலாற்றுப் புதினம்

*தமிழுக்குப் பின் கன்னடத்தில் புதினம் தோன்றினாலும் விரைவில் அதிகமான எண்ணிக்கையில் கன்னடத்தில் வெளிவந்துள்ளன. கன்னடத்தில் புதின இலக்கியத்தின் தோற்றம் **1915**ல் தொடங்கியது. முதல் புதினம் “கன்னடப் புதினத்திற்கு ஏறக்குறைய நூற்றைம்பதாண்டு வரலாறு உண்டு.”*[17] *“முதல் புதினம் எம்.எஸ்.புட்டண்ண அவர்களின் ‘மாடித்துண்ணோ மகாராய’ **(1915)** என்பதாகும்.”*[18]

*“**1915** முதல் **1947** வரையிலான காலப்பகுதியில் ஏறக்குறைய நூறு மூலப் புதினங்கள் வெளிவந்தன.”*[19] *“வாழ்க்கையைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்வது எவ்வாறு, தனிமனிதன் சமூகத்தின் ஒரு பகுதியாகத் தன் தனித்தன்மையை வளர்த்துக்கொண்டு சமூகத்துக்குப் பயன்படுமாறு வாழ்வது எவ்வாறு என்பது போன்றப் பல அடிப்படைப் பிரச்சினைகளை அக்காலப் பகுதியைச் சேர்ந்த புதினங்கள் தம்முள் அடக்கிக் கொண்டிருந்தன.”*[20]

*தற்காலத்துக் கன்னட உரைநடையின் தோற்றக் காலத்திலேயே மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார் அவர்கள் “பேச்சு மொழிக்கு மிக நெருங்கிய, எளிய ஆனால் அழுத்தத்தைக் காட்டவல்ல நடையை எழுதிக் காட்டினார் என்பது வியப்பிற்குரியது.”*[21]

*“சிவராம காந்தரின் நூல்கள் கலைஞனின் உண்மை வடிவங்களாகும்”*[22] *“தேவுடு எழுதியது குறைவு என்றாலும் ஒவ்வொன்றுமே உள்ளத்தை ஈர்க்கும் எழுத்து.”*[23]

*‘குவெம்பு’ உள்ளத்தைப் பிணிக்கும் மற்றொரு புதினாசிரியர். “‘கானூரு சுப்பம்ம ஹெக்கடத்தி’ **(1936)** என்னும் புதினத்தில் உண்மை நிலையும் இலட்சியமும் முழுதும் விரவாது கதாநாயகன் பூவய்யனின் பாத்திரம் தளர்ந்துவிடுகிறது.”*[24]

*மேற்கூறிய எல்லா வகையிலும் புது யுகத்தின் முதல் வரிசையில் இடம் பெறுபவர் மாஸ்தியவர்கள். "இவர் மிகச் சிறந்த வரலாற்றுப் புதினங்களைப் படைத்து கன்னட உலகில் சிறப்புப் பெற்றவராகத் திகழ்ந்தார்."*[25]

**வாழ்க்கைச் சுருக்கம்**
**கல்கி இரா.கிருஷ்ணமூர்த்தி**

*வரலாற்றுப் புதினங்கள் படைப்பதில் தலைசிறந்தவராகத் திகழ்ந்தவர் கல்கி. "இயற்பெயரே 'கல்கி' என மயங்கும் வகையில் அப்பெயரிலேயே தமக்கெனத் தமிழ் இலக்கிய உலகில் ஒரு தனியிடத்தை ஏற்படுத்திக் கொண்டவர் இரா.கிருஷ்ணமூர்த்தி. 'கல்கிக்கு முன்' 'கல்கிக்குப் பின்' என வரலாற்றுப் புதின இலக்கியத்தின் காலக்கட்டத்தை வரையறை செய்யும் அளவுக்கு ஏற்றவராக வாழ்ந்தவர்."*[26]

**பிறப்பு**

*தஞ்சை மாவட்டத்தின் புத்தமங்கலம் என்ற சிற்றூரில் கணக்கப்பிள்ளை பொன்னுவையர் மகனாகக் கல்கி 09.09.1899 இல் பிறந்தார்.*

**கல்வி**

*ஏட்டுக்கல்வியினும் அனுபவக்கல்வி மிகுதியாகப் பெற்றவர். "கல்கி பெரிய படிப்பாளி அல்லர். எளியக் குடும்பத்துச் சூழ்நிலை அவரின் கல்வி வளர்ச்சிக்குத் தடையாக நின்றது. எனினும், அருகில் வசித்த அய்யாசாமி ஐயர் கல்கியிடம் கொண்ட பற்று, அவரது அறிவுப்பசிக்கு வேண்டிய உணவினை அளித்துக் கொண்டிருந்தது. இடையே தந்தையின் மறைவால் தடைப்பட்டப் பள்ளிப் படிப்பு திருச்சி தேசீயப் பள்ளியில் தொடர்ந்தது. இதற்குள் தமிழ், ஆங்கிலம் இரு மொழிகளிலும் வெளியான புதினங்களைக் கிடைத்த வரையில் தேடிச் சென்றும், இரவல் வாங்கியும் படித்து முடித்தார்."*[27] *இவையெல்லாம் உள்ளத்தில் படிந்து, கால வளர்ச்சியில் பண்பட்டுப் பின்னர் அவர் படைத்த எழுத்துக்களுக்கு எருவிட்டன எனலாம்.*

**சிறைவாசம்**

*சிறந்த நாட்டுப்பற்றும் சுதந்திரப் போராட்ட ஈடுபாடும் உடையவர். "கல்கி தம் எழுத்துமூலம் நாட்டில் தேசபக்தியை வளர்த்தார். இதற்கிடையே அவருள்ளத்தில் 'காந்திபக்தி' அளவற்றுப் பெருகியதால் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார். முதன் முதலாக 1922 இல் சிறைக்குச் சென்றார். அங்கேதான் அவருடைய முதல் புதினம் 'விமலா' வடிவம் கொண்டது."[28] அச்சிறைக் கூடத்தில் இராஜாஜி, சதாசிவம் போன்றவர்களுடன் தொடர்பு ஏற்பட்டது. அத்தொடர்பு வாழ்நாள் இறுதிவரை தொடர்ந்து பெருந்துணையும் ஆற்றிற்று.*

*கல்கி கூலி எழுத்தாளர் அன்று. தனக்கென சில குறிக்கோள்களை வாழ்க்கையில் அவர் பின்பற்றினார். அவர் எழுத்தில் இந்த இலட்சிய வெறியைக் காண முடிந்தது. "நாட்டுக்காக மூன்று முறை சிறை சென்ற கல்கி, 'மூன்று மாதக் கடுங்காவல்' என்னும் தலைப்பில் அவர்தம் சிறை அனுபவங்களைச் சுவைபடத் தீட்டியிருக்கிறார்"[29] என்பர்.*

**பணி**

*கல்கி பட்டதாரி அல்லர். உயர்நிலைப் பள்ளிப் படிப்பை அரைகுறையாக நிறுத்திவிட்டுக் காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தார். இராசாசியின் திருச்செங்கோடு ஆசிரமத்தில் இருந்த அவரை, டி.எஸ்.எஸ்.இராசனின் சிபாரிசுக் கடிதம், 'நவசக்தி'யில் சேர்த்தது. "நவசக்தி'யில் கல்கி நான்கு ஆண்டுகள் பணிபுரிந்தார். அங்கு திரு.வி.க.வுடன் இணைந்து பணியாற்றும் வாய்ப்புக் கிட்டியது."[30]*

*நவசக்தி இதழில் 'அகஸ்திய'ராய் அறிமுகமாகிச் சாரதையின் தந்திரம், ஒன்பது குழி நிலம் போன்ற சிறுகதைகளை ஆக்கித் தந்தார். 'தமிழ்த் தேனீ'யாய் 'ஊர்வம்பை'த் திரட்டித் தந்தார். அண்ணல் காந்தியடிகளின் தன் வரலாறாம் சத்தியசோதனையைத் தமிழில் மொழிபெயர்த்தார். தமது படைப்பிலக்கிய ஆற்றிலின் வேகத்திற்கு நவசக்தி இதழில் இடம் இல்லையென உணர்ந்து அதிலிருந்து விலகினார்.*

**இலக்கியப் பணி**

இவருடைய இலக்கியப் பணி இதழியலிலிருந்து தொடங்குகிறது. "கல்கி என்ற புனைப்பெயரில் 'ஆனந்தவிகடன்' இதழில் வெளியான அவருடைய முதல் கட்டுரை 'ஏட்டிக்குப்போட்டி.' நகைச்சுவை மிகுந்த அக்கட்டுரை பலரும் அவ்வழியில் எழுத வழிகாட்டியாய் அமைந்தது."[31] கல்கி அவதாரத்தின் அடிப்படையில் புனைந்துகொண்ட அப்புனைப்பெயருடன் தாம் எழுதும் கட்டுரையின் தலைப்புக்கு ஏற்பத் 'தமிழ் மகன்,' 'கர்நாடகம்,' 'இரா.கி.,' 'ஒரு பிராமண இளைஞன்' போன்ற பல பெயர்களையும் புனைந்து கொண்டார்.

ஆனந்த விகடனில் கட்டுரைகள் வெளிவந்துகொண்டிருந்த நேரத்தில் இராசாசிக்குத் துணையாக, 'விமோசனம்' இதழின் துணையாசிரியராகப் பணியாற்றிச் சீர்திருத்தக் கதைகளையும் படைத்தார். குடியின் கொடுமையைக் கூறும் 'தெய்வ யானை,' 'அரசூர் பஞ்சாயத்து' என்பன அக்கதைகளுள் சில.

நவசக்தி, ஆனந்தவிகடன், கல்கி, குமுதம் ஆகிய நான்கு பத்திரிகைகளில் மூன்று இதழ்களுடன் கல்கி தொடர்பு கொண்டவர். திரு.எஸ்.எஸ்.வாசனின் பத்திரிகையான 'ஆனந்த விகடனை' உயர்ந்த நிலைக்கு ஏற்றியவர் கல்கி. பிறகு அவர் தம் பெயரிலேயே 'கல்கி' என்ற பத்திரிகையை நடத்திவந்தார்.

ஆங்கிலம் படித்த பண்டிதர்களும், வழக்கறிஞர்களும், ஆசிரியர்களும் அரசாங்க அதிகாரிகளும் தமிழை மதிப்பதில்லை, தமிழைப் பேசுவதில்லை, தாங்கள் தமிழர் என்று உணர்ந்து நடப்பதில்லை என்று சுப்பிரமணிய பாரதி கண்ணீர் விட்டிருக்கிறார். இவர்கள் அத்துணை பேரும் தமிழ்ப் பத்திரிகை வாங்கிப் படிக்க வேண்டும் என்று அவர் ஆசைக் கனவு கண்டார். அந்த ஆசைக் கனவை நனவாக்கியவர் கல்கி. ஆங்கிலம் படித்தக் குடும்பங்களிளெல்லாம் தமிழ்ப் பத்திரிகைப் படிக்கும் பழக்கம் கல்கியின் எழுத்தினாலேயே நிறைவேறியது. இவர் தமிழ் எழுத்தாளர்களின் தலைவராகவும் பணியாற்றி இருந்திருக்கின்றார்.

**சமுதாயப் பணி**

பத்து இதழ்களுடன் ‘விமோசனம்’ நின்றுவிட்டப் பின்னர் ‘ஆனந்தவிகடன்’ ஆசிரியர் பதவியில் அமர்ந்த கல்கி, இரண்டாவது முறையாக ஆறுமாதச் சிறைவாசத்தை அனுபவித்தார். அதனடிப்படையில் கட்டுரைகள் சில வெளிவந்தன. சமுதாயக் குறைகளை நீக்கும் வகையில் மேலும் பல சிறுகதைகளும் எழுந்தன. இளம் விதவை படும் துன்பம், தீண்டாமை ஒழிப்பு, பெண் கல்வியின் இன்றியமையாமை எனச் சமூக நிலையை ஒட்டியே அக்கதைகள் அமைந்தன.

ஆனந்த விகடனில் எழுத்துத் தொண்டாற்றிய போது, நாட்டுப் பற்றெனும் தீப்பற்றியதன் விளைவால் போராட்டத்தில் ஈடுபட்டு ‘மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை’ பெற்றார். சிறையினின்று விடுதலையாகி வந்தவுடன் சதாசிவத்தின் துணையுடன் தம் புனைப்பெயரையே இதழுக்கமைத்து, ‘கல்கி’ வார இதழைத் தொடங்கினார். அவருடைய எழுத்து வன்மையையும், ஆற்றலையும் வெளிப்படுத்த இவ்விதழ் களமாக அமைந்தது.

‘பார்த்திபன் கனவு,’ ‘சிவகாமியின் சபதம்,’ ‘பொன்னியின் செல்வன்’ ஆகிய கல்கியின் முப்பெரும் வரலாற்றுப் புதினங்களும் வடிவம் கொண்டமை ‘கல்கி’ இதழ்களில்தாம். ‘அலை ஓசை’ கல்கிக்கு மிகவும் பிடித்த படைப்பு. அது ஒலித்ததும் இவ்விதழில்தான். தமிழிசை இயக்கம் பற்றி விளக்கக் கட்டுரைகள், நம் கல்வித் திட்டத்தில் உள்ள குறைகளைச் சுட்டும் சிந்தனைக் கட்டுரைகள், திரைப்படங்களைப் பற்றியத் திறனாய்வுக் கட்டுரைகள் ஆகியவையும், ‘கல்கி’யில் வெளிவந்தன. இராஜாஜியின் கொள்கையை முழுக்க முழுக்க ஆதரித்தவர் கல்கி. அந்நிலையில் இராஜாஜியின் கருத்தக்களை ஆதரித்து எழுதக் ‘கல்கி’ இதழில் இடம் இல்லாது போகவே, ‘துணைக் கல்கி’ இதழைத் தொடங்கினார்.

‘கல்கி’ இதழின் தொடக்கக் காலத்தில் மிகுதியாகச் சிறுகதைகளை எழுதினார். பின்னர்த் தொடர்கதைகள் (புதினம்) இடம்பெற்றன. சிறுகதைகள் குறைந்தன. அவற்றின் இடத்தில் அட்டைப்பட

*விளக்கமாய்ப் பண்புடையோரின் ஆற்றல்களுக்குப் புகழாரமும், மாண்புடையோரின் மறைவுக்கு அஞ்சலியும் இடம்பெற்றன.*

*கல்கியின் மொழியாக்கத் திறமைக்குச் சான்றாகச் சத்திய சோதனை, யுவபாரதம், நமது தாய்நாடு, கைராட்டைப் போன்ற நூல்கள் விளங்குகின்றன. இக்காலத்தில் எழுத்துப் பணியுடன் நிதி திரட்டும் பணியிலும் ஈடுபட்டுப் 'பாரதி மண்டபம்,' 'காந்தி மண்டபம்' போன்ற அழியாத நினைவுச் சின்னங்கள் எழக் காரணமாயிருந்தார். நாமக்கல் கவிஞர், புதுமைப்பித்தன் குடும்பத்தினர் போன்றவர்களுக்காக நிதி திரட்டினார். எழுத்தாளர் சங்கத் தலைவராகவும் கல்கி பணிபுரிந்தார்.*

**வரலாற்றுப் பயணம்**

*வரலாற்றுப் புதினம் எழுதுவதற்கு மிகுந்த ஈடுபாடும் உழைப்பும் தேவை. கல்கி தகவல் திரட்ட பல காலம், பல இடங்களுக்கு அலைந்துள்ளார். "மாமல்லபுரம், தஞ்சை, மைசூர், இலங்கையிலுள்ள பல நகரங்கள் எனக் கல்கி நேரில் சென்று கண்ட வரலாற்றுப் புகழ்வாய்ந்த இடங்கள் அவருடைய வரலாற்றுப் புதினங்களுக்குப் படிக்கற்களாய் அமைந்தன. 'கல் சொன்ன கதை,' 'வாழ்வும் தாழ்வும்,' 'இலங்கைப் பயணம்' எனப் பல பயணக் கட்டுரைகளும் கிடைத்தன."*[32]

**இறப்பு**

*'அமரதாரா' என்ற புதினம் வெளிவரத் தொடங்கிய சிறிது காலத்திலேயே கல்கி, **4.12.1954** அன்று மறைந்தார். இதனால் முற்றுப் பெறாதப் புதினமாக இருந்த 'அமரதாரா'வை அவர் மகள் ஆனந்தி நிறைவு செய்தார்.*

**மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார்**

*இந்திய, இலக்கியங்களுள் கன்னட இலக்கியத்திற்கென மிகப் பெரிய செல்வாக்குள்ளது. மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார் கன்னட இலக்கியத்தில் புகழ்பெற்ற சிறந்த எழுத்தாளர். இந்தியாவில் இலக்கிய மரியாதை பெற்றவரான மாஸ்தி கன்னட நாட்டின் 'கருவூலமாகக்' கருதப்படுகிறார். இதனை "மாஸ்தி கன்னட நாட்டின் சொத்து" என்றுக்*

*கூறப்படும் வரியின் மூலம் அறியமுடிகிறது. இதனைக் கன்னடத்தில், "மாஸ்தி கன்னடத ஆஸ்தி" என்று குறிப்பிடுவர்.*

**பிறப்பு**

*இவர் கர்நாடக மாநிலம் கோலார் மாவட்டத்தில், ஹெங்கெனஹள்ளி என்னும் சிற்றூரில் இராமசுவாமி ஐயங்கார், திருமலம்மன் தம்பதியருக்கு மகனாக **1891** ஆம் ஆண்டு, ஜூன் **6** ஆம் நாள் பிறந்தார். இவர் தமிழ்ப் பேசும் ஐயங்கார் குடும்பத்தைச் சார்ந்தவர். இது கன்னடத்தில் 'பெரியாத்துக் குடும்பம்' என அழைக்கப்படுகிறது.*

*இவரது இயற்பெயர் வெங்கடேஷ ஐயங்கார், புனைப்பெயர் மாஸ்தி, இரண்டினையும் சேர்த்து மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார் என அழைக்கப்படுகிறார். இவர் தனதுக் குழந்தைப் பருவத்தினைத் தனது சொந்த ஊரான ஹெங்கெனஹள்ளியிலேயே செலவிட்டார்.*

**கல்வி**

*கல்வியில் மாஸ்தி சிறந்து விளங்கினார். "மாஸ்தியவர்கள் **1907** இல் தனது பள்ளிப் படிப்பை முடித்தார். **1912** இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி.ஏ., பட்டமும் அதே பல்கலைக் கழகத்தில் **1914** இல் எம்.ஏ., பட்டமும் பெற்றார். **1913** ஆம் ஆண்டு மைசூரில் நடைபெற்ற சிவில் சர்வீஸ் தேர்வில் முதலிடம் பெற்று, கர்நாடக மாநிலத்தின் பல்வேறு பகுதிகளில், பல்வேறு பதவிகளை வகித்தார். இவரது பதவி மாவட்ட ஆணையர் பதவிவரை உயர்ந்தது. இவர் **1943** இல் ஓய்வுபெற்றார். பின்னர் **3.12.1956** இல் கர்நாடகப் பல்கலைக்கழகத்தில் 'முனைவர்' பட்டம் பெற்றார்."[33]*

**குடும்பம்**

*மாஸ்தியின் குடும்பம் சற்று பெரியது. இவர், "கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்களின் மகள் பங்கஜம்மாவை **1910** இல் ஜூலை **15** ஆம் தேதியில் திருமணம் செய்து கொண்டார். இவர்களுக்கு ஆறு பெண்குழந்தைகள் பிறந்தனர். **1916** இல் முதல் மகள் இந்திரம்மாவும், **1917** இல் இரண்டாவது மகள் விஜயவள்ளியும், **1919** இல் மூன்றாவது*

மகள் பத்மம்மாவும், 1921 இல் நான்காவது மகள் அரவிந்தம்மாவும், 1923 இல் ஐந்தாவது மகள் இரங்கநாயகியும், 1924 இல் கடைசி மகள் சாந்தாவும் பிறந்தனர்."[34]

## பணிகளும் சாதனைகளும்

மாஸ்தி வெங்கடேஷ ஐயங்காரின் குறிப்பிடத்தக்கப் படைப்பு சிறுகதைகள். 'கெலவு சன்ன கதேகளு' என்று இது கன்னடத்தில் அழைக்கப்படுகிறது. கன்னட உலகில் இது மிகவும் தரமாக்கப்பட்ட, அங்கீகரிக்கப்பட்ட ஒரு படைப்பாகக் கூறப்படுகிறது. மாஸ்தியவர்கள் சமூகம், தத்துவம் பற்றியப் பாடல்களை எழுதுவதில் மிகவும் புகழ்பெற்றவர். இவர் இத்தகையப் பாடல்களுக்குத் தானே இசையும் அமைத்திருக்கின்றார்.

1944 முதல் 1965 வரை வெளிவந்த 'ஜீவனா' என்ற மாதப்பத்திரிகையில் எழுத்தாளராகப் பணியாற்றியது இவரை பிரபலமாக்கியது. இவர் 120 கன்னடப் புத்தகங்கள் 17 ஆங்கிலமொழிப் புத்தகங்கள் என 70 ஆண்டுகளுக்கும் மேலாகப் புத்தகங்களை எழுதியுள்ளார்.

1983 இல் சிக்கவீர இராஜேந்திரா என்னும் வரலாற்றுப் புதினத்திற்கு ஞானபீடம் விருது பெற்றார். இது குடவ அரசுமுறைப் பற்றியப் புதினமாகும். கன்னட உலகில் ஞானபீட விருது பெற்ற ஏழு பேரில் நான்காவது நபர் மாஸ்தி வெங்கடேஷ ஐயங்காரவர்கள். இவர் அப்போதைய மைசூரின் மகாராஜாவான நால்வடி கிருஷ்ணராஜ உடையார் மூலம் 'இராஜசேவசக்தா' என்னும் பட்டம் வழங்கப்பெற்றுச் சிறப்பிக்கப்பெற்றார்.

## சமூகப் பணி

கன்னட மக்களிடம் இவர் மிகவும் பிரபலமானவர். 'நவோதயா லிட்டரேரி' என்ற அமைப்பில் முக்கியப் பங்குகொண்டு, இவர் ஆற்றிய செயல்பாடுகள் கன்னட இலக்கியத்தில் ஒரு மிகப்பெரும் மாற்றத்தைக் கொண்டுவந்தன.

*மாஸ்தியவர்கள் ஒரு துணிச்சல்மிக்க எழுத்தாளர். கடைசி குடவ அரசு பற்றிக் கூறும் சிக்கவீர இராஜேந்திராப் புதினத்திற்கு இவர் பெற்ற விருது இவருடைய தன்னம்பிக்கை மற்றும் விடாமுயற்சியினைப் பிரதிபலிப்பதாக விளங்குகிறது. இப்புதினம் குடவ சமூகத்தில் ஒரு மென்மையான தாக்கத்தை ஏற்படுத்தியது.*

## வகித்த பதவிகள்

*1914 - மைசூர் அரசின் உதவி ஆணையர்*

*1923 - மதுகிரிக்கு உட்பிரிவு அதிகாரி*

*1924 - பெங்களூர் உதவிச் செயலாளர்*

*1927 - மைசூருக்கு உட்பிரிவு அதிகாரி ஆனார்*

*1930 - பெங்களூருக்கு நீதிபதி மற்றும் முதன்மையர் ஆனார்.*

## பெற்ற விருதுகள்

*1977 - மைசூர் பல்கலைக்கழகம் கௌரவ டாக்டர் பட்டம் கொடுத்து கவுரவித்தது.*

*1980 - கர்நாடக சாகித்ய அகாடமி விருது வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றார்.*

*1983 - தான் இயற்றிய காளிதாசா புத்தகத்திற்கு 'வர்த்தமான ப்ரசஸ்தி' விருது பெற்றார்.*

*1983 - சிக்கவீர இராஜேந்திரா என்னும் வரலாற்றுப் புதினத்திற்கு தேசிய அளவில் 'ஞானபீடம்' விருது பெற்றார்.*

## இறப்பு

*மாஸ்தியவர்கள் தனது 95ஆவது வயதில் 1986 ஆம் ஆண்டு ஜுன் 7 ஆம் தேதி மரணமடைந்தார். அவர் இறந்தாலும், இன்றைய தலைமுறை மற்றும் வாசகர்களுக்கு இவருடையப் படைப்புகள் பயன்படும் விதத்தில் சிறப்பாக அமைந்துள்ளன. இவ்வாறு மாஸ்தியவர்கள் கன்னட இலக்கியம் நோக்கி தனது மகத்தான பங்களிப்பை ஆற்றியதால், இவர் கன்னட நாட்டின் சொத்தாகக் கருதப்படுகிறார்.*

## மாஸ்தி - கல்கி படைப்புக்கள்

மாஸ்தி, கல்கி ஆகிய இருவரும் சிறுகதைகள், நெடுங்கதைகள், புதினங்கள், வரலாற்றுப் புதினங்கள், நாடகங்கள், கட்டுரைகள் என பல்வேறுப் படைப்புக்களைச் சிறப்பான முறையினில் படைத்திருக்கின்றனர்.

மாஸ்தி தன்னுடைய நூறு சிறுகதைகளையும் பதினைந்து தலைப்புக்களில் அடக்கிக் 'கெலவு சன்ன கதேகளு' எனப் பெயரிட்டுக் கொடுத்துள்ளார். இவர் இதனைச் சீனிவாசன் என்ற பெயரில் எழுதினார்.

இவ்விருவரின் படைப்புக்கள் பின்வருமாறு:

| வ. எண். | படைப்புக்கள் | எண்ணிக்கை | |
|---|---|---|---|
| | | மாஸ்தி | கல்கி |
| 1. | வரலாற்றுப் புதினங்கள் | 3 | 3 |
| 2. | புதினங்கள் | 13 | 6 |
| 3. | நாடகங்கள் | 16 | 9 |
| 4. | சிறுகதைகள் | 100 | 119 |
| 5. | நெடுங்கதைகள் | 2 | 10 |
| | | **134** | **147** |

## கல்கி பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள்

தமிழ்ச் செய்தித்தாள் உலகில் ஒரு புரட்சியினையும், புதுமையினையும் ஏற்படுத்தி, 'கல்கி' என்ற புனைப்பெயரையும் தாங்கிப் புகழ்பெற்ற இரா.கிருஷ்ணமூர்த்தி அவர்களைப் பற்றிப் பலர் தங்களின் கருத்துக்களைப் பாராட்டியும், சீறாட்டியும், சொற்பொழிவு ஆற்றியும் கூறியிருக்கின்றனர்.

மலாய்ப் பல்கலைக் கழகத்தில், நடந்த கருத்தரங்கில் 'எழுத்தாளர் கல்கி' என்னும் தலைப்பில் நடந்தச் சொற்பொழிவில், முருகுசுப்பிரமணியன், கா.பொ.இரத்தினம், தனிநாயக அடிகளார், வை.திருநாவுக்கரசு போன்றோர் கல்கியைப் பற்றிச் சிறப்பானக் கருத்துக்களை எடுத்துரைத்து அவருக்குப் பெருமை சேர்த்தனர்.

**முருகு சுப்பிரமணியன் - கல்கியின் பத்திரிகை உலகப் பணி**

தமிழ்ப் பத்திரிகை உலகின் வளர்ச்சிக்குத் தினத்தாள்களைப் பொறுத்தவரையில், திரு.வி.க., வரதராஜிலுநாயுடு, டி.எஸ்.சொக்கலிங்கம் போன்றவர்கள் அடிப்படைப் பணியைச் செய்துவிட்ட போதும், வாரப்பத்திரிகை, மாதப் பத்திரிகை முதலிய இதழ்களின் வளர்ச்சியில் முழுப் பெரும் பங்கு கல்கிக்கு உரியது.

கல்கியின் படைப்பான, 'ஏட்டிக்குப் போட்டி,' கல்கி என்ற பெயரில் முதன் முதலில், ஆனந்தவிகடனில் வெளிவந்தது.

இவரின் எழுத்துக்கள் குழந்தைகளுக்கும் புரியக்கூடியதாக இருந்தன. இவர் நடையை எளிதில் படிக்க முடிந்தது. படிக்கும்போதே சிரிப்பு வந்தது. அடிப்படைக் கருத்தும் ஆழமானதாக இருந்தது. பத்திரிகைகளில் தலைவலியை ஏற்படுத்தும் கடுமையான கட்டுரைகள் மட்டுமே வெளிவந்துகொண்டிருந்த நேரத்தில், புகைவண்டியிலும், பேருந்திலும் படித்து முடித்துவிடக்கூடிய ஒரு புதுமையான பத்திரிகை அமைப்பைக் கல்கி தோற்றுவித்தார்.

இறப்பதற்கு முன் என் சக்தி முழுவதையும் உபயோகித்துவிட விரும்புகிறேன். வாழ்க்கையை ஒரு சிறு மெழுகுவர்த்தியாக நான் கருதவில்லை. அதை ஓர் அற்புத சோதியாக மதிக்கிறேன். அதை எதிர்காலச் சந்ததியருக்குக் கொடுப்பதற்கு முன், எவ்வளவு பிரகாசமாக எரியவைக்க முடியுமோ, அவ்வளவு பிரகாசமாக எரியவைக்க விரும்புகிறேன் என்ற கல்கி, அதை அப்படியே வாழ்க்கையில் கடைபிடித்தார். "அவர் தொடாதது எதுவுமே இல்லை. தொட்டுப் பொன் ஆகாதது எதுவுமே இல்லை."

கல்கியின் புனைப்பெயர் கர்நாடகம், தமிழ்மகன், விவசாயி, தமிழ்த்தேனீ, எமன், இரா.கி., அகஸ்தியர், லாங்குவன் முதலியன ஆகும். இவரின் விமர்சனத்திற்கு நாட்டு மக்களிடமும், கலைஞர்கள் கூட்டத்திலும், அத்துணை மதிப்பு இருந்தது. கல்கியின் தொடர்கதைகளுக்குக் கிடைத்தது போன்று இலட்சக்கணக்கான வாசகர்கள் வேறு எந்த எழுத்தாளர்களுக்கும் கிட்டவில்லை என்றே

கூறவேண்டும். விறுவிறுப்பான நிகழ்ச்சிகள் நிறைந்த தொடர்கதைகள் மூலம் பத்திரிகை விற்பனையை அதிகரிக்க முடியும் என்பதை நடைமுறையில் காட்டியவர் கல்கி. இவருக்குத் தன்னம்பிக்கை அதிகம். எழுத்தாளர்கள் பிறரிடம் கைகட்டிச் சேவகம் புரியக் கூடாது, மானத்தோடு வாழவேண்டும் என்ற குறிக்கோள் உடையவர்.

பல எழுத்தாளர்களைத் தமிழ்ப் பத்திரிகை உலகுக்கு அறிமுகப்படுத்தியவர் கல்கி. ஆங்கிலத்தில் எழுதிவந்த எஸ்.வி.வி. போன்ற எழுத்தாளர்களைத் தமிழில் எழுதவைத்தவர் இவரே. யாருடைய பேச்சும், தொந்தரவும், தலையீடும் கல்கியின் பேனா ஓட்டத்தையோ, சிந்தனையையோ தடைபடுத்துவதில்லை.

தமிழ்நாட்டில் நடந்த முக்கிய விழாக்களிலெல்லாம் கல்கி பங்கேற்றார். எட்டையபுரம் பாரதிவிழா போன்றவற்றை அவரே முன்னின்று நடத்தினார். அரசியலிலும், சமூகப் பணியிலும், மொழித்தொண்டிலும் அவர் தீவிரமாக உழைத்தார். தான் மேற்கொண்டக் குறிக்கோள்களுக்காக அவர் பத்திரிகையை நன்குப் பயன்படுத்திக் கொண்டார். பத்திரிகை என்பது சமுதாயச் சேவைக்குரிய சாதனமென்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். அந்த அற்புத சாதனத்தை அருமையாகப் பயன்படுத்தி, பிரமிக்கத்தக்க எத்தனையோ காரியங்களைக் கல்கி சாதித்திருக்கிறார்.

கல்கியின் தமிழ்நடை தனித்தமிழ் நடையென்று குறிப்பிடத்தக்கச் சிறப்புடையது அல்ல என்றாலும், கூடுமானவரை வேற்றுமொழிக் கலப்பில்லாமல் அது அமைந்திருந்தது. சொல்வதைத் தெளிவாகச் சொல்ல வேண்டும், சிக்கலின்றி சொல்ல வேண்டும், படிக்கிறவர்களுக்கு மயக்கம் வராமல் சொல்ல வேண்டும் என்பதிலே கல்கி மகத்தான வெற்றி கண்டிருக்கிறார் என கல்கியின் பத்திரிகை உலகப் பணிப் பற்றி முருகு சுப்பிரமணியன் அவர்கள் கூறியிருக்கின்றார்.

**கா.பொ.இரத்தினம் - கல்கியின் சிறுகதைகள்**

மனித இன வளர்ச்சியில் கதைகள் நிலைத்த முதன்மையான இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு இன மக்களும் பண்டைக் காலத்

தொடக்கம் முதல் கதை சொல்லுதலை ஒரு கலையாக வளர்த்து வந்துள்ளனர். இத்தகையக் கதைகளைப் படைப்பதில் வல்லவர் கல்கி இரா.கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

இந்தியாவின் வரலாற்றில் பெருந்திருப்பங்கள் நிறைந்த காலம் கல்கி வாழ்ந்த காலம். பாரத நாட்டின் பண்பட்ட மொழிகளினைப் பேசுவோரிடைப் பல எழுத்தாளர்கள் தோன்றி தாய்மொழியில் ஆர்வமூட்டும் பணியினை நன்கு செய்து புகழ்பெற்றனர். இந்தச் சூழலில், தமிழ் எழுத்துலகில் தோன்றி வளர்ந்து புகழ் பெற்றவர்களுள் கல்கி முன்னிலையில் விளங்குகிறார்.

தமிழ்ப் பாடல்களை மிகுதியாகப் பாடிய புலவர்களுள் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிடம் பெறுவதைப் போலத் தமிழ் உரைநடை நூல்களை மிகுதியாக எழுதியவர்களுள் கல்கி முதலிடம் பெறுகிறார்.

தாம் எழுதியவற்றை எல்லாம் வெளியிடுவதற்குக் கல்கிக்குப் பெருவாய்ப்புக்கள் செய்தித்தாள், இதழ்கள் வழிக் கிடைத்தன. எழுத்தாளர் உலகில் செல்வாக்கு நிறைந்த இரு ஏடுகளில் ஒன்றின் ஆசிரியராகவும், மற்றையதன் உரிமையாளராகவும் இருந்தார்.

கல்கி எழுதியவற்றில் பெரும்பாலானவை இப்பொழுது நூல்களாக வெளிவந்துள்ளன. நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் அவரின் பெயரைக் கொண்டு உலாவுகின்றன. "பழைய காலத்து மகாமேதைகள் எழுதிய சிரஞ்சீவிக் காவியங்களுக்கும், இந்த நாளைய ஆசிரியர்கள் எழுதும் அன்றலர்ந்த வாடிப்போகும் நூல்களுக்குமுள்ள வித்தியாசம் நன்றாகத் தெரியவந்தது"[35] என்று கல்கி கூறியிருக்கிறார்.

"ஏதாவது புதிய கதை எழுதிவரும் போது, இது எத்தனை நாளைக்கு உயிரோடிருக்கும்? எத்தனை தடவைப் படிப்பதற்குத் தகுதியுடையதாயிருக்கும்? என்று எண்ணம் தோன்றிவிடும். பிறகு எழுதுவதற்கே ஓடாது."[36] இதுவும் கல்கி அவர்களின் கூற்றாகும்.

கல்கி எழுதிய சிறுகதைகளின் தொகையினை அவருக்கு முன்னிருந்த தமிழ் எழுத்தாளர்கள் எழுதிய கதைகளின் தொகையுடன் ஒப்பிடும்பொழுது, அத்தொகைப் பெரியதாகக் காணப்படுகிறது. கல்கியின் சிறுகதைகள் மிக நீளமானவை. பொங்குமாக்கடல், சாரதையின் தந்திரம், கமலாவின் கல்யாணம், சுபத்திரையின் சகோதரன், அமரவாழ்வு, மயில்விழிமான், நாடகக்காரி, மாடத்தேவன் சுனை, மாலதியின் தந்தை முதலியவற்றை இக்காலப் பத்திரிகை ஆசிரியர்கள் தம் பத்திரிகைகளில் வெளியிடுவதற்கு 'மிக நீண்டுவிட்டன' என்று கருதுவார்கள். சில சிறுகதைகளைக் கல்கி அவர்கள் துணைத் தலைப்புகள் இட்டும் எழுதியிருக்கிறார்.

சிறுகதைகளை எழுதுவோர் தம்மை உட்படுத்தித் தன்மையிடத்தில் வைத்துக் கதையை எழுதுதலுமுண்டு, படர்க்கை இடத்தில் வைத்து எழுதுதலுமுண்டு. கல்கியின் சிறுகதைகளில் பெரும்பாலானவை தன்மையிடத்தில் வைத்து எழுதப்பட்டுள்ளன. (எ.கா.) "ஆண்டவன் திருவருளினால் இப்போது எங்கள் வாழ்க்கையில் அமைதி குடிகொண்டிருக்கிறது. இன்பம் நிலவுகிறது. நானும் என் மனைவியும் அளவிறந்த அன்பு வெள்ளத்தில் மூழ்கியிருக்கிறோம்..." சுபத்திரையின் சகோதரன் எனும் சிறுகதை இவ்வாறு தொடங்குகிறது. இது தன்மையிடத்தில் வைத்து எழுதுவதற்கு உதாரணம்.

கல்கியின் சிறுகதைகள் பலவற்றில் தொடக்கம், முடிவு முதலியன வியத்தகு முறையில் அமைந்திருப்பினும், சிலவற்றின் முதலும், முடிவும் சிறப்பாக அமையவில்லை என்று இரத்தினம் அவர்கள் கூறுகின்றார்.

வாழ்க்கையில் உள்ள குறைகளை எடுத்துக்காட்டி அவற்றை நீக்கும் வழிவகைகளைக் கற்பிப்பது இலக்கியம் படைக்கும் ஆசிரியர்களின் கடமையன்று என எண்ணும் எழுத்தாளர்களுக்கு 'சோமசொற்றுமாம்' என்பவர், "கதை ஆசிரியன் கற்பிப்பவன் அல்லன் இன்பமூட்டுபவன். எனவே வாழ்விலுள்ள மேடு பள்ளங்களையும், மூடநம்பிக்கைகளையும், மக்களின் இயல்புகளிலுள்ள ஏற்றத் தாழ்வுகளையும், சமுதாய வாழ்வைக் கெடுக்கும் பழக்கவழக்கங்களையும்

*சுட்டாமற் சுட்டிக்காட்டுதலே இலக்கிய ஆசிரியர் செய்யத்தக்கப் பணியாகும்”*[37] *என்று கூறுகிறார்.*

*கல்கியின் காலத்தில் காந்தியடிகளின் விடுதலைப் போராட்டம் மக்கள் உள்ளத்தினைக் கவர்ந்திருந்தது. தீண்டாமை ஒழிப்புப் போன்ற சமூகச் சீர்திருத்தப் பணிகள் சிறந்தோங்கின. கல்கி விடுதலை இயக்கத்திலும், தமிழ் மொழியின் ஆக்கப் பணியிலும், சமுதாய மறுமலர்ச்சியிலும் பெரிதும் ஈடுபட்டுப் பணி ஆற்றினவராகையால் அவருடைய சிறுகதைகள் பலவற்றின் பின்னணியும், கருவும் இவற்றின் தாக்கத்தை நன்கு புலப்படுத்துகின்றன.*

*கல்கியின் உரைநடையைச் செந்தமிழ் உரைநடை எனக் கூறமுடியாது. இதை அவரே கூறியிருக்கிறார். “நவசக்தி ஆசிரியர் எங்கே? நம்முடைய சாமான்யத் தமிழ் எங்கே?”*[38] *இவைக் கல்கியின் வார்த்தைகளாகும். நல்லத் தூயத் தமிழிலே எழுத வேண்டுமெனுங் கருத்துக் கல்கியின் அடிமனத்தில் இருந்தது.*

*கல்கி வளரவளர அவருடைய உரைநடையும் வளர்ந்தது. அதில் தமிழ் மனமும் மிகுந்தது. ஒருமுறை வாசித்தால் மீண்டும் வாசிக்கத் தூண்டும் பண்புமிக்க கதைகளையும், வாசிப்போர் உள்ளத்தோடு கலந்து இன்பமூட்டும் உணர்ச்சி மிக்கக் கதைகளையும், உள்ளச் சோர்வையும் கவலையையும் மாற்றிப் புதியதோர் உலகில் புகுத்தி மயக்கும் உயிர்ப்பு மிக்கக் கதைகளையும், மீண்டும் மீண்டும் எண்ணிச் சுவைக்கத்தக்க நயமிக்கக் கதைகளையும் கல்கி அவர்கள் தமிழுலகுக்குத் தந்தருளியுள்ளார். இதனால் அவர் தமிழ்ச் சிறுகதைத் துறையில் தனிச்சிறப்பு வாய்ந்த ஓரிடத்தைத் தமக்குரியதாக்கிக் கொண்டார். இவ்வாறு கல்கியின் சிறுகதைகளைப் பற்றி கா.பொ.இரத்தினம் அவர்கள் சிறப்பான முறையினில் விளக்கியிருக்கின்றார்.*

**தனிநாயக அடிகளார் - கல்கியின் வரலாற்றுப் புதினங்கள்**

*கல்கி பல துறைகளில் எழுத்தாளராக விளங்கும் சிறப்பாக வரலாற்றுக் கதைத்துறையில் காலத்தாலும், சிறப்பாலும், முதல்*

ஆசிரியர் ஆவர். வரலாற்றுப் புதினத்துறையில் கல்கியின் காலத்திற்கு முன், கல்கி எழுதியவை போன்ற வரலாற்றுப் புதினங்கள் தோன்றவில்லை.

கல்கி தாம் வாழ்ந்தக் காலத்தை அடிப்படையாக வைத்துச் சிறந்த சிறுகதைகளையும், தொடர்கதைகளையும் எழுதியதோடு, வரலாற்றுப் புதினத் துறையில் முதன்மை பெற்று விளங்குவது அவரின் கற்பனைத் திறனையும், ஆக்கப் பண்பினையும், வரலாற்று உணர்வினையும் நன்கு புலப்படுத்துகின்றது.

இவர் தமிழரின் பொற்காலங்களாகிய பல்லவர் காலத்தையும், சோழர் காலத்தையும் தம் கதைகளின் களங்களாகத் தெரிந்தெடுத்தார். சிவகாமியின் சபதத்தில் கல்கி பெருங்காப்பிய ஆசிரியரைப்போல, பாத்திரங்களையும், நிகழ்ச்சிகளையும், தம் சொந்த வாழ்க்கையின் பட்டறிவுடன் சேர்த்து அமைத்துள்ளார். இந்நூல் செந்தமிழ் நாட்டின் பதின்மூன்று ஆண்டுகளின் புகழ்சிறந்த வரலாற்றைப் (கி.பி.629-641) படம் பிடித்துக் காட்ட முயல்கின்றது. புதினத்தின் மாந்தர்களையும், வரலாற்றுக் கூறுகளையும், நிகழ்ச்சிகளையும் காட்டுமாறு அமைக்கின்றார். அக்காலத்தின் ஆடை அலங்காரங்களையும், படைக்கலங்களையும், போர்க்கோலத்தையும் கல்கி பெரிதும் வருணிப்பதில்லை.

கல்கி தம்முடைய பட்டறிவைக் கொண்டு உணர்ச்சிகளையும், காட்சிகளையும், விளக்க முயல்வது இயல்பேயாம். போரால் விளையும் தீமைகளை வெளிப்படையாகக் கூறுகின்றார் ஆசிரியர். அத்துடன் எதற்காகப் போர் நிகழ்ந்தது என்பதையும் நம்மைச் சிந்திக்கச் செய்கின்றார். போரால் விளைந்த சலிப்பையும் புலப்படுத்துகின்றார்.

சிதம்பரநாத முதலியாரின் கலைப்பற்றிலும், திறனாய்வுக் கருத்திலும், அவர் தலைவராக உள்ள கலைஞர் கூட்டத்தின் கலந்துரையாடலிலும் பங்கு பெற்றவர்.

பாலசரஸ்வதியையும், எம்.எஸ்.சுப்புலட்சுமியையும், இராசாசியையும் டி.கே.சி.யையும் இன்னும் கவிஞர் பலரையும், சுவைஞர் பலரையும்,

அரசியல் வல்லுநர் பலரையும் நன்கு அறிந்தமையால் கல்கி, ஏழாம் நூற்றாண்டின் கலைஞரை வருணிப்பதற்கும், அரசியல்வாதிகளை வருணிப்பதற்கும் பெருந்தகுதி பெற்றார்.

கல்கியின் நடையைப் பற்றி, கல்கியின் நடை ஐம்பொறிகளுக்கும், இயல்புக்களுக்கும், அடி உள்ளத்துக்கும் விருந்தாகும் நடை. ஏட்டு நடையைக் கைவிட்டுச் சொல்லாடல் மொழியை மிருதுவாக்கும் நல்ல மெல்லிய நடை, உணர்ச்சியைத் தெளிவாக்கும் நடை. உள்ளத்தை வெளியாக்கும் நடை, உலகில் உழைப்போர்க்குச் செல்வம் பயக்கும் கற்பனை நடை, காட்சிகள் சில காளிதாசரின் காட்சிகள் போன்றவை. இந்நடையில் நனவு உலகிலிருந்து தப்பியோடும் ஆற்றலுண்டு. அவர் மொழியில் மனத்திற்கும் மெய்யிற்கும் இனிமையுண்டு. அவர் கையாளும் சொற்கள் நிறங்களையும், ஒலிகளையும் நுட்பமான கவின்கலை இயற்கை அனுபவங்களையும் தெளிவுறச் செய்யும் சொற்கள் என கல்கியின் வரலாற்றுப் புதினங்களைப் பற்றி தனிநாயக அடிகளார் வெளிப்படுத்தியிருக்கின்றார்.

### வை.திருநாவுக்கரசு - கல்கியின் சமூகப் புதினங்கள்

கல்கியின் எழுத்துப்பணி 1923 இல் தொடங்கி, முப்பதாண்டு காலம் இடையறாது நீடித்தது. கல்கி எழுதிய சமூக நெடுங்கதைகளுள் நிறைவு பெற்ற கடைசி நூலும் சிறப்பு மிக்கதும் ‘அலை ஓசை’ என்று கூற வேண்டும். ஆசிரியர் இந்நூலுக்கு எழுதிய முன்னுரையில் தாம் “முப்பது ஆண்டுகளாகத் தமிழ்த் தாய்க்குப் பயபக்தியுடன் இயற்றி வந்திருக்கும் பணிகளுக்குள்ளே இதுவே சிறந்தது,” என்று நம்பிக்கையுடன் கூறுகிறார். தம் புதினங்களிலேயே ஐம்பது, நூறு ஆண்டுகள் நிலைத்து நிற்கும் தன்மையுடையது ‘அலை ஓசை’யே என்கிறார்.

கல்கி கதைமாந்தர்க்கேற்ற உரையாடலைச் சூழ்நிலைக்கேற்பக் கையாள்வதில் வல்லவர். இவர் நகைச்சுவையை மிகவும் விரும்புபவர். “ஒரு புதினத்தைச் சீர்தூக்கிப் பார்க்கும்பொழுது, கதை மாந்தரைப் படைக்கும் ஆசிரியரின் ஆற்றலை மட்டுமின்றி, கதைமாந்தரின் பண்பு

நலனையும், நடத்தையையும் கூட மதிப்பிட வேண்டியிருக்கிறது”[39] என்று ஆங்கிலத் திறனாய்வாளர் ஒருவர் குறிப்பிடுகிறார்.

புதினம் ஒன்றைப் படிக்கிறவர்கள், அது கற்பனைப் புதினம் என்பதை மறந்து உண்மை நிகழ்ச்சியென எண்ணி ஈடுபாடு கொள்ளுமாறு கதை அமைக்கும் திறம் கல்கியிடம் இருந்தது.

இந்தியச் சமுதாயத்தில் வேகமான மாறுதல்கள் நிகழ்ந்த காலத்தைப் பின்னணியாகக் கொண்டு எழுதப்பட்ட ‘அலை ஓசை’யில் சமுதாய நல்வாழ்விற்கேற்ற கருத்துக்கள் நிறைந்திருக்கின்றன. சீர்திருத்த எண்ணங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. “காந்தீயத் தத்துவத்தையும், சமூக மாறுதல்களையும் கதைக்குக் கருவாக அமைத்து எழுதிய ‘கல்கி’யின் முயற்சியும், ஆற்றலும் பாராட்டிற்குரியன.

அதே நேரத்தில் இத்தகைய முயற்சியை இந்திய எழுத்தாளர்கள் பலர் செய்திருக்கிறார்கள். குறிப்பாக “ஆங்கிலத்தில் ஆர்.கே.நாராயணன், முல்க்ராஜ் ஆனந்த், கே.எ.அப்பாஸ், கமலா மார்க்கண்டேயா, கே.எஸ்.வேங்கடரமணி ஆகியோர் எழுதியுள்ள புதினங்கள் இவ்வகையில் சிறப்பானவை.”[40]

ஆசிரியர் கல்கியின் சமூகப் புதினங்களை நோக்கினால், அவை அனைத்தும், வாசிக்கத் தூண்டும் இயல்புடையனவாய் அமைந்திருப்பதை உணரலாம். அவருடைய நடை இனிமையும், அழகும் நிறைந்தது. எவரும் புரிந்துகொள்ளும் எளிமை அவருடைய நடையின் சிறப்பு.

கல்கி தம் கதைகளைப் படிப்போரையும், தாம் படைத்தக் கதைமாந்தரின் நிலையையும் மனத்தில் கொண்டே எழுதினார். அவர்களுக்குப் புரியுமாறும், பொருந்துமாறும் தம் நடையை அமைத்துக் கொண்டார்.

இருபதாம் நூற்றாண்டில், குறிப்பாகக் கடந்த முப்பதாண்டுகளில் தமிழ்மொழி பல துறைகளில் முன்னேற்றம் கண்டிருக்கிறது. புதுப்புதுத் துறைகள் தமிழில் தோன்றி வளர்ந்திருக்கின்றன. இவ்வளர்ச்சிக்கு

உறுதுணையாய் நின்ற அறிஞர்கள், எழுத்தாளர்கள் வரிசையில் 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு நிலையான இடமுண்டு.

கல்கி தமிழில் புதினம் என்னும் இலக்கியத்துறை வளர்ந்தோங்க உரமிட்டவர் என்பதில் ஐயமில்லை. இவர் புதுமைத் தமிழ் இலக்கியத்திற்கு ஒரு சக்தியைக் கொடுத்தவர். தமிழ்த்துறையில் எவரும் ஒதுக்கமுடியாத சக்தியாக விளங்கியவரும் இவர் எனக் கல்கியின் சிறப்புக்களை வை.திருநாவுக்கரசு எடுத்துரைக்கின்றார்.

**க.நா.சுப்பிரமணியம் - கல்கி என்று ஒரு பத்திரிகாசிரியர்**

தமிழில் வாசிப்பவர்களின் எண்ணிக்கை கணிசமான அளவு உயர்வதற்குப் பலர் உதவியிருக்கிறார்கள். அவர்களில் யாரும் கல்கி என்கிற இரா.கிருஷ்ணமூர்த்தி உதவிய அளவிற்கு உதவியதில்லை என்று சொல்ல வேண்டும்.

இன்று தமிழில் சில பத்திரிகைகள் நாலைந்து இலட்சம் பிரதிகள் விற்கின்றன என்றால், அதற்குப் பலமான அடித்தளம் அமைத்துத் தந்தவர் கல்கி என்கிற பத்திரிகாசிரியர்தான். மகாவிட்ணுவின் பத்தாவது அவதாரத்தின் பெயரைக் கொண்ட கல்கியை ஒரு இலட்சிய பத்திரிகாசிரியராக எண்ணுவதில் தவறில்லை.

பெருமளவில் தமிழர்களையும், தமிழையும் பாதித்த பத்திரிகையாசிரியர் கல்கிதான் என்று சொல்லவேண்டும். அவருக்குமுன் சுப்ரமணியபாரதி ஒருவர்தான். அப்படித் தமிழையும், தமிழர்களையும் பாதித்திருக்கிறார். எஸ்.எஸ்.வாசன் ஒருமுறை கல்கியைப் பற்றிப் பேசுகிற பொழுது, "வெறும் வியாபாரியாக இருந்த என்னை தேச உணர்ச்சியையும், தேசியத்தையும் நன்கு அறியச் செய்தவர், கல்கிதான்," என்று கூறினார்.

எஸ்.எஸ்.வாசனை மட்டுமல்ல, பலரையும் தற்காலத்தை உணரச்செய்தவர் கல்கி என்று சொன்னால் அது மிகையாகாது என கல்கியைப் பற்றி கா.நா.சுப்ரமணியம் அவர்கள் கூறியிருக்கின்றார்.

### அ.ச.ஞானசம்பந்தன் - கல்கி நினைவுச் சொற்பொழிவு

*தமிழ் இலக்கிய உலகில் தமக்கென ஒரு தனி இடத்தைத் தேடிக்கொண்ட பெருமையுடையவர் கல்கியாவார். தெளிவான நடைச் சிறப்புடன் எத்தகைய ஆழ்ந்த கருத்தையும் மிக எளிய நடையில் விளக்கும் திறம் பெற்றுத் திகழ்ந்தார்.*

*திரு.வி.க. என்ற ஊற்றுக்காலிலிருந்து தெளிந்த தமிழ்நடை என்ற ஆறு பல கால்களாக ஓடியது. அக்கால்களுள் ஒருவர் கல்கியாவார். புதினம், சிறுகதை, கட்டுரை முதலிய துறைகளிலும் கல்கி சிறந்த முறையில் எழுதினார் எனக் கல்கி நினைவுச் சொற்பொழிவுகள் என்னும் நூலில் அ.ச.ஞானசம்பந்தன் கூறியிருக்கிறார்.*

*இதேபோல, பகீரதன் அவர்கள், "என் வாழ்நாளின் முற்பகுதியில் எனக்குக் குருவாகவே வாய்த்து என்னை ஆட்கொண்டு, என்னைப் பல விதத்திலும் தட்டிக் கொட்டிப் பொன்னாக்கியவர் பேராசிரியர் கல்கியவர்கள்" எனக் கூறியிருக்கிறார்.*

*இவ்வாறு கல்கியின் தமிழ்த் தொண்டினைப் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் தங்களின் சிறப்பானக் கருத்துக்களைச் சுவைபட வழங்கியிருக்கிறார்கள். இவர்கள் மட்டுமின்றி மேலும் பல்வேறு அறிஞர்களும் கல்கியைப் பற்றித் தங்களின் கருத்துக்களைக் கூறியிருக்கின்றார்கள்.*

*இதன்மூலம் கல்கி தமிழுக்கு ஆற்றியத் தொண்டானது எட்டுத்திக்கும் பரவி நிற்கும். இன்றையத் தலைமுறையினரும் கல்கியைப் பற்றி அறிந்துகொள்ளும் வகையினில் இது அமைந்திருப்பது சிறப்பானதாகும்.*

### மாஸ்தி பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள்

*மாஸ்தி வெங்கடேஷ ஐயங்காரைப் பற்றிக் கன்னடம், தமிழ் என இரு மொழியிலுள்ள ஆசிரியர்களும், அறிஞர்களும் தங்களின் மேலான கருத்துக்களை வழங்கியிருக்கின்றனர். இதன் மூலம் மாஸ்தியின் படைப்புக்கள் மேலும் வலுப்பெற்று நிற்கின்றன.*

## க.நா.சுப்ரமணியம் - மாஸ்தி என்று ஒரு தமிழர்

*மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார் கன்னடத்தில் சிறுகதைகள், புதினங்கள், கவிதைகள், விமர்சனம் என்றெல்லாம் எழுதிப் புகழ் பெற்றவர். ஆனால் இல்லத்தில் தமிழ் மொழி பேசுபவர்.*

*இந்திய இலக்கியத்தின் மரபுத் தளங்களில் சிறந்த உருவம் என்று தெரிந்த ஒருவரைச் சொல்ல வேண்டுமானால் மாஸ்தி வெங்கடேஷ ஐயங்காரைச் சொல்லவேண்டும். 94 வயதான இவரை இன்று இந்தியாவின் முதுபெரும் இலக்கியாசிரியர் என்று சொல்லலாம். அவர் எழுத்துக்களில் இந்திய இலக்கிய மரபு அம்சங்கள் எதுவும் வழுவாமல் இருப்பது அவருடைய தனிச் சிறப்புக்களில் ஒன்று.*

*அண்மையில் கன்னடச் சிறுகதையின் பிதாமகனாகக் கருதப்பெறும் மாஸ்திக்கு ஒரு சரித்திரப் புதினத்திற்கு ஞானபீடப் பரிசு கிடைத்தது. அப்போது 'பரிசுக்காக யாரும் நூல்கள் எழுதுவதில்லை' என்று சொன்னார். மேலும் 'பரிசு பெறுவதினால் நூல் சிறப்படைவதில்லை.' சிறப்பான நூல் பரிசு பெற வேண்டும் என்றார்.*

*மாஸ்திக்குத் தாகூரிடமும், வால்மீகியிடமும் மிகவும் ஈடுபாடு உண்டு. இராமாயணத்தைப் பற்றிக் கவிதையாகவும், நாடகமாகவும், விமர்சனமாகவும், குழந்தைகளுக்கு விளங்கும்படியும் எழுதியிருக்கிறார். குறைத் தொனிக்கும்படியாகத் தாகூரைப் பற்றி ஏதாவது சொன்னால் அவருக்குச் சினம் வந்துவிடும். அவரின் சிறுகதைகளையும், புதினங்களையும் அவரே மொழிபெயர்த்து ஆங்கிலத்திலும் வெளியிட்டிருக்கிறார்.*

*பல இலக்கியக் கூட்டங்களில் ஆங்கிலத்தில் ஆணித்தரமாகப் பேசி, தான் சொல்லவந்த செய்தியை எடுத்துச் சொல்லி வாதாடுவதில் மிகவும் வல்லவர்.*

*பெங்களூரில் மொழிக்கலகங்கள் தலைகாட்டித் தமிழர்களைப் பற்றி ஏளனமாகச் சில கன்னடக்காரர்கள் பேசியபோது பூ.ஆர்.ஆனந்தமூர்த்தி என்கிற இளைய தலைமுறையைச் சேர்ந்தப்*

*புதினாசிரியர், சிறுகதையாசிரியர், "மாஸ்தி என்கிற தமிழர் கன்னட இலக்கியத்திற்கு என்ன சேவை செய்திருக்கிறார் என்று யோசித்துப் பாருங்கள்" என்று சொல்லி கூச்சல் போட்டவர்களை அடக்கினார்.*

*ஆனால் மாஸ்தியின் சேவை கன்னட இலக்கியத்திற்கு மட்டுமல்ல, இந்திய இலக்கியத்திற்கும், உலக இலக்கியத்திற்கும்தான் என மாஸ்தியைப் பற்றி க.நா.சுப்பிரமணியம் அவர்கள் தம் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்.*

**எல்.எஸ்.சேசகிரிராவ்**

*கன்னட ஆசிரியரான எல்.எஸ்.சேசகிரிராவ் மாஸ்தியவர்களின் படைப்புக்களில் பாத்திரங்கள் இடம்பெறும் விதத்தினைச் சிறப்பாகக் கூறியிருக்கின்றார். அவரின் படைப்பான சிக்கவீரஇராஜேந்திராவில் உள்ள கதாப்பாத்திரங்களில், இயற்கைவளம், ஆளுமை இவையெல்லாம் எதிர்ப்புறமாக நீடித்தாலும், அதற்கு ஒரு சிறப்பான நெருக்கத்தைத் தந்துள்ளார்.*

*இப்புதினத்தில், "மனிதனை மீறிய சக்தி ஒன்று இருக்கிறது. உலகம் அதன் விளையாட்டுப் பொருள்" என்னும் ஒரு வாசகம் கூறப்படுகிறது. இப்பதினம் கன்னட உலகத்தில் ஒரு மிகப்பெரியப் படைப்பு என்று கருதலாம். வரலாற்று மாந்தர்களுடன் கற்பனைப் பாத்திரங்களும் உயிர்பெற்றிருக்கின்றன. இது மாஸ்தியவர்களின் சிறப்புக்களுள் ஒன்று எனலாம்.*

*இவர் பாத்திரங்களைச் சித்திரிக்கும் விதத்தை நோக்கும்போது, எந்தக் கெட்ட எண்ணங்களும், எவ்வித வன்முறையும் இல்லாத ஒரு மனிதனாகவே தோன்றுகிறார். அந்த அளவிற்குப் பாத்திரங்களுக்குச் சிறப்பினைக் கொடுத்துள்ளார்.*

*அசம்பாவிதஙக்ளை அதிக அளவில் கூறும் ஆசிரியர்கள் மத்தியில் இவருடையப் புதினத்தில் இவை போன்று எதுவும் இடம்பெறுவதில்லை. இவருடையப் புதினத்தைப் பகுதிப்பகுதியாகப் படிக்கும் பொழுது,*

அவரின் அனுபவங்கள், அவரின் சிந்தனையின் பூரிப்பு இவையெல்லாம் நமக்கு ஆச்சரியத்திற்குரியதாகும்.

மாஸ்தியவர்கள் பாத்திரங்களுடன் ஒன்றிவிடுவார். பாத்திரங்களை அனுதாப நிலை, தொலை நோக்குப் பார்வையில் பார்க்கும் தன்மை கொண்டதால், அவரின் படைப்பு ஒரு சிறப்பானப் படைப்பாக இருக்கும்.

அவர் தன் புதினமான சிக்கவீர இராஜேந்திராவில் காட்சிகளை மற்ற ஆசிரியர்களைப் போலவே முதலில் வெளிப்படையாகக் கூறிவிட்டு, பின் உள்ளே சென்று காட்சிகளைப் பெரிய அளவில் விளக்குகிறார். இதனால் படித்த பின்னும் அக் காட்சிகள் நம் கண்ணை விட்டு அகலுவதில்லை.

ஒரு காட்சிக்கும், மற்றொரு காட்சிக்குமான தொடர்பு அவருடையப் புதினங்களில் இடம்பெறுவதில்லை. காட்சிகளைச் சித்திரிக்கும் பொழுது மிகவும் கவனம் செலுத்தக்கூடியவர். காட்சிகளை விரிவுபடுத்தும் பொழுது அவர் பயன்படுத்தும் வார்த்தைகளில் உயிர்நாடி இருக்கும். ஒரு சந்தர்ப்பத்தைப் படிப்படியாகப் படிப்பவர்க்கு அறியவைத்து, ஒரே நேரத்தில் புரிந்துகொள்ள செய்வதுடன், அப்பாத்திரங்களின் ஆளுமையைச் சித்திரிக்கும் ஒரு முயற்சியையும் மேற்கொள்ளுபவர். இவை அனைத்தையும் ஒரு சிறப்பான அமைப்புடன் குளறுபடியின்றி கூறியிருப்பார் என எல்.எஸ்.சேசகிரிராவ் மாஸ்தியைப் பற்றிக் கூறியிருக்கிறார்.

### இராஜகோபாலச்சாரியார்

சக்கரவர்த்தி இராசகோபாலச்சாரியாரின் நண்பர் திரு.நவரத்ன ராமராயர் என்பவர் திரிவேணி என்னும் நாளேட்டில் மாஸ்தியின் 'மசுமத்தி' என்னும் கன்னடக் கதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருந்தார். இதனைப் படித்த இராசாசி இது யாருடைய கதை எனப் பார்க்கும் பொழுது, அப்போது கன்னட இலக்கியத்திற்குப் புதிய தோற்றம் கொடுத்துக் கொண்டிருக்கும் என் ஆருயிர் நண்பர்

மாஸ்தியினுடையது என்றும், அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த திரு.நவரத்ன இராமராயர் தன்னுடன் பயின்றவர் என்பதையும் அறிந்து மிகவும் பெருமகிழ்ச்சி அடைந்தார்.

இராசாசி இக்கதையிலிருக்கும் நாட்டுப்பற்று, மொழிப்பற்று, தெய்வப்பற்று, கலைஞானம் இவையெல்லாம் தமிழர்க்கும் சேரவேண்டும் என எண்ணி ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்தார். மாஸ்தியின் 'மசுமத்தி'யை 'வேணுகானம்' என மாற்றித் தமிழ் நாளேட்டில் அச்சிட்டு வர இவர் முன்னுரை எழுதிக் கொடுத்தார். முன்னுரையில், "கலை ஒரு நாட்டின் உயிர்நாடி," இத்தத்துவத்தைப் பொருளாகக் கொண்டு, மிகப் பெரியத் தத்துவங்களையெல்லால்லாம் ஒன்று கூட்டி, மிகப்பெரிய கற்பனையில் இருந்து இந்தக் கதை உருவாக்கப்பட்டிருக்கிறது.

மாஸ்தி என்னும் மகான் எழுதிய இக்கதையைச் சுருக்கப்படுத்தி, வாசகர்களுக்குக் கொடுப்பதற்கு எனக்கு மனது கேட்கவில்லை. கதை கொஞ்சம் நீளமாயிற்று, ஆனாலும் அதனுடைய சுவாரசியத் தன்மையைச் சுவாசிக்கக் கூடிய வாசகர்களுக்கு அது கொஞ்சம்கூட கடினமே ஆகாது என்பது என்னுடையக் கருத்து எனக் கூறி மாஸ்திக்குப் பெருமை சேர்த்து அவரின் கதையைத் தமிழில் மொழிபெயர்த்து வாசகர்களுக்கு விருந்தாக்கினார்.

**கொளுர் இராமசுவாமி ஐயங்கார்**

மாஸ்தியவர்களின் கதையைப் படித்தப் பிறகு ஒரு வகையான கம்பீரமான, சாந்தமான நிலை நம்மைக் கவர்ந்து கொள்ளும். அவர்தம் புத்தகங்களில் கதைகளை எழுதினாலும், முடிந்து போகாதத் தத்துவங்களை மிக நாசுக்காக அடக்கிக் கொடுத்திருக்கிறார்.

அவருடையக் கதைகளில் நம்நாடு நன்றாக இருக்கவேண்டும், நம் வாழ்வு வெளிச்சம் பெறவேண்டும், இதனால் நம்நாடு பெரியதாக அமைய வேண்டும், நம் நாட்டுப் பண்பாடு மூலம் நமக்கு மதிப்பு வரவேண்டும், நம் நாகரிகம், நம் தாயின் மார்புப் பால்போல் பரிசுத்தமானது என்றெல்லாம் அவர் குறிப்பிட்டுள்ள அம்சங்கள் நம்

‘தேசியக்கவி’ அவர்தான் என்று எண்ணத் தோன்றும். இப்படியொரு கவிஞர் நமக்கெல்லாம் அவருடையப் புலமையைக் கொடுத்துக் கொண்டிருப்பது நம் பாக்கியம்.

கன்னட நாட்டிற்கு அவருடைய சேவை நிலையூன்றி நிற்கட்டும். இந்த சேவையைப் பெற்றுக் கொள்ளும் அருகதை கன்னடர்களுக்குக் கிடைக்கட்டும் என மாஸ்தியவர்களின் பெருமைகளைத் திறம்பட எடுத்துரைக்கின்றார் கொரூர் இராமசுவாமி ஐயங்கார்.

**கே.சிவராம ஐத்தாள்**

மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார் அவர்கள், காளிதாசனைப் போல, அந்தந்தச் சமயத்திற்கு ஏற்ப, நோக்கத்திற்கு ஏற்ப எழுதக்கூடியவர். காளிதாசனுக்கு எழுத்தைவிட, வர்ணனை அதிகம் பேசும். அதேபோல, மாஸ்தியவர்களின் எழுத்திலும் இருந்தது.

“எந்த நகையும் இல்லாமல் அழகாகத் தோற்றமளிப்பது போலுள்ளது மாஸ்தியின் படைப்பு” என்கிறார் ஐத்தாள். மாஸ்தி எவ்வாறு வாசகர்களுக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தக்கூடியவர் என்று சொல்லும்பொழுது, அவர் குழந்தைகளுக்கு மிட்டாய் கொடுக்கிறேன் என்று ஏமாற்றி ஆனந்தப்படுத்துவது போல, வாசகர்களுக்குப் படைப்பைக் கொண்டு சேர்ப்பவர்.

அவருடையக் கதைகளின் சிறப்பு சரளமாக ஆரம்பித்து, மிகப் பெரியதாக அவதாரம் எடுத்துக் கொடுப்பது. இந்த மாதிரி இலட்சணங்கள் வேறு எந்த எழுத்தாளரிடமும் நாம் கண்டதில்லை. இவரின் படைப்புக்கள் நூற்றாண்டுக் காலம் வாழக்கூடியவை. இவ்வாறாக, ஐந்தாள் அவர்கள் மாஸ்தியின் சிறப்புக்களைக் கூறுகின்றார்.

இவர்களைப் போலவே, பேரா.எ.என்.மூர்த்திராவ், எம்.ஜி. கிருஷ்ணமூர்த்தி, பேரா.கீர்த்திநாதகுர்தகோட்டா, தே.ஜவரேகௌடா, டாக்டர்.ஜி.வரதராஜராவ், பேரா.எச்.எம்.சங்கரநாராயணராவ், கெ.எஸ்.நரசிம்மசுவாமி, எ.ஆர்.கிருஷ்ணசாஸ்திரி, டி.எல்.நரசிம்மாச்சார்யா,

ஜி.வெங்கடசுப்பையா போன்றோரும், இன்னும் பல்வேறு ஆசிரியர்களும், அறிஞர் பெருமக்களும் மாஸ்திப் பற்றித் தங்களின் கருத்துக்களைக் கூறி, அவரின் பெருமையையும், சாதனையையும் நிலைநாட்டச் செய்துள்ளனர்.

## ஒப்பீடு

ஆய்வில் ஒரே வடிவுடைய இரண்டு படைப்புக்களை, ஒத்த சிந்தனை கொண்ட இரண்டு படைப்பாளர்களை ஒப்பிடுவது ஒரு பார்வையாகும். "ஒரு பொருளின் தன்மையினை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் இயல்பு மக்களிடையே இயற்கையாகக் காணப்படுகிறது. ஒப்பியல் நோக்கு, தமிழுக்குப் புதிய துறையன்று. இவ்வொப்பியல் கூறு தமிழில் இலக்கணம், நீதி நூல் காப்பியம் எனப் பல்வேறு களங்களிலும் விரவிக் கிடக்கிறது."[41]

"இலக்கிய அமைப்பினைப் பொது இலக்கியம், ஒப்பிலக்கியம், தேச இலக்கியம் என மூன்று பிரிவாக்கிக் காட்டுவார்கள், இலக்கியக் கொள்கை ஆசிரியர்களான ரெனிவெல்லாக்கும், ஆஸ்டிவ்வாரனும்."[42]

இனமான பொருள்களுக்கிடையே உள்ள உண்மைகள் தெளிவு பெறுவதற்கு ஒப்புநோக்கு ஒரு சாலச்சிறந்த துறையாக அமைகிறது. இவ்வாறு ஒப்பிடும் பொழுது, முற்றிலும் ஒப்புமை அமைந்த பொருட்களை ஒத்திட்டுக் காணல் பொருளற்றது. மாறாக "அடிப்படையில் ஒற்றுமையும், கூறுபாட்டில் வேற்றுமையும் உடையன ஒத்தும், உறழ்ந்தும் காண்பதற்குப் பொருட்களாய் அமைகின்றன என்பார் வ.சுப.மாணிக்கம்."[43]

"தேசிய, மாநில விருப்பு வெறுப்புக்களைக் கடந்த நிலையையே ஒப்பிலக்கியம் உறுதியாக விரும்புகிறது. ஆனால், அதற்காகப் பல்வேறு தேசிய இலக்கிய மரபுகளின் இருப்பையும் சிறப்பையும் மறக்கவோ குறைத்து மதிப்பிடவோ அது விரும்பவில்லை"[44] என்று ஒப்பீட்டு அறிஞர் ரெனிவெல்லாக் கூறுகிறார்.

மொழி வேறுபாட்டால் விளையும் இலக்கியத்தின் சிறப்பியல்புகள் எளிதாக ஒதுக்கத்தக்கன அல்ல. எனவேதான் கைலாசபதி "இவ்வொப்பியல் ஆய்வு தற்சார்பற்ற முறையில் அமையவேண்டும் என்பார்."[45]

ஒப்பீட்டிற்காகவே ஒப்பீடு என்பது போன்று அமைதல் கூடாது. இலக்கியத்தைப் புரிந்துகொள்ளவும், அதனுள் இன்பம் துய்க்கவும் இவ்வொப்பீடு பயன்படத்தக்கதாக அமைதல் வேண்டும்.

அவ்வகையில் பலமொழி இலக்கியங்களுக்கிடையே ஓரினப் பண்புகளையும் காணக்கூடும். வகை (gendre), வடிவம் (form), அடிக்கருத்து (theme), உத்தி (technique) என்பனவற்றுள் ஒற்றுமைகளைக் கொண்டு அவற்றை விளங்கக் காணலாம். மேலும், "இவ்விலக்கிய ஒப்பீடு, இலக்கியத்தில் காணும் முருகுணர்ச்சியைப் (Aesthetic pleasure) பெற்று இன்பம் துய்க்கவும் வழி செய்கிறது என்பர் தமிழண்ணல்."[46]

"இவ்வகையில் தமிழில் பல ஒப்பீட்டுக் கட்டுரைகள், ஒப்பியல் நூல்கள் வெளிவந்துள்ளமை வரவேற்கத்தக்கதாகும்."[47] அவ்வகையில் மாஸ்தி, கல்கி ஆகிய இருவரின் வரலாற்றுப் புதினங்களை ஒப்பிட்டு ஆராயும் முதல் முயற்சி இதுவாகும்.

மாஸ்தியின் வரலாற்றுப் புதினத்தினால் குடகு, மடிக்கேரி, பாகமண்டலம், மைசூர், தலைக்காவேரி, பெங்களூர், மங்களூர் போன்ற வரலாற்று நிகழிடங்கள் குறித்தும், குறிப்பாக வீரராஜனின் முறையற்ற ஆட்சியினால் ஏற்பட்ட விளைவும் அறியமுடிகிறது. கல்கியின் படைப்பினால், தமிழகத்தில் உருவாகியிருந்த சோழ நாட்டின் வளர்ச்சியினையும், பல்லவர் காலத்தில் வளர்ந்தோங்கிய கலைச் செல்வங்களையும், பண்பாட்டு வளர்ச்சியினையும் உணரமுடிகிறது.

கல்கியின் மூன்று வரலாற்றுப் புதினங்களில் பார்த்திபன் கனவினையும், மாஸ்தியின் மூன்று வரலாற்றுப் புதினங்களில் சிக்கவீர இராஜேந்திராவும், ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

*பார்த்திபன் கனவில், பல்லவ அரசனுக்குக் கப்பம்கட்டும் அரசனாக இருக்கும் பார்த்திப மகாராஜா, அவ்வாறு கப்பம் கட்டாமல் தான் ஒரு தனி சுதந்திர நாட்டிற்கு அரசனாக இருக்க வேண்டும் என எண்ணுகிறான். தான் ஆசைப்பட்ட எல்லாவற்றையும் ஒரு சித்திர மண்டபத்தில் ஓவியமாக வரைந்துவைத்து, அதனைத் தன் மகனுக்குக் காண்பிக்கின்றான்.*

*பின்னர் நரசிம்ம சக்கரவர்த்தியுடன் போரிட்டு, வீரமரணம் அடைகின்றான். பார்த்திப மகாராஜாவின் மகன் விக்கிரமன் தன் தந்தையின் கனவை நிறைவேற்றப் போராடும் விதமாக இப்புதினம் அமைந்துள்ளது.*

*இதேபோல, சிக்கவீர இராஜேந்திராவில், வீர இராஜேந்திரன் தன் சிறுவயது முதலே தன் நண்பனான நொண்டி பசவன் மூலம் பல்வேறு தீய பழக்கங்களுக்கு ஆளாகித் தன்னையே அழித்துக்கொள்கிறான். தன் பரம்பரைச் சொத்து தன் தங்கைக்கும் செல்வதை விரும்பாத வீரராஜன் அவளைச் சிறையிலடைத்துப் பல இன்னல்களுக்கு ஆளாக்குகிறான். தங்கையின் மகனைக் கொலைசெய்து விடுகிறான். ஆங்கிலேயரின் உதவியுடன் தப்பிய தங்கை அவன் மீது புகார்செய்கிறாள். இறுதியில் ஆங்கிலேயர்களினால் வீரராஜன் சிறைபிடிக்கப்பட்டு, தன் மகளுடன் இங்கிலாந்து சென்றதாகக் கதைக் கூறப்படுகிறது.*

*"மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திரா வெளிவந்த ஆண்டு 1956. கல்கியின் பார்த்திபன் கனவு வெளிவந்த ஆண்டு 1943." இவற்றை நோக்கும்போது, இரண்டு புதினங்களும் ஒரேக் காலக்கட்டத்தைச் சார்ந்தவை என்பது தெரியவருகிறது.*

*"மாஸ்தி பிறந்தது, 1891. கல்கி பிறந்தது 1899." இரு புதின ஆசிரியர்களும் ஒரேக் காலக்கட்டத்தைச் சேர்ந்தவர்கள்.*

*இவ்விருபுதின ஆசிரியர்களின் வரலாற்றுப் புதினப் படைப்புக்களுள் மிகச் சிறப்பானதாகக் கருதப்படும் இவ்விருப் புதினங்களும் ஆசிரியர்களின் உள்ளக் களத்தில், ஆழத்தில் பல ஆண்டுகள்*

கருக்கொண்டிருந்து, பின்னரே வடிவம் பெற்றவை என்பது நோக்கத்தக்கது.

மாஸ்தி - கல்கி இருவரும் முற்பட்ட ஐயங்கார், ஐயர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஆவர். மேலும், இருவரும் படித்தப் பின்புலமுள்ள குடும்பங்களைச் சார்ந்தவர்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

மாஸ்தி கன்னட இலக்கியங்களைப் படைத்தாலும் வீட்டில் தமிழ் பேசும் குடும்பத்தைச் சார்ந்தவர். இவற்றை நோக்கும் போது மாஸ்தி, கல்கி "இருவரும் தமிழர்கள்" என்பது புலனாகின்றது.

இருவரும் அரசப் பரம்பரையை மையமிட்டுப் புதினத்தைப் படைத்துள்ளனர். மாஸ்தி 'குடவ அரசமுறைப்' பற்றியும், கல்கி 'சோழர்களின் அரசமுறைப்' பற்றியும் படைத்துள்ளார்.

ஒன்றுபட்ட சென்னை இராசதானியில் இவர்கள் இருவரும் ஒரே காலக்கட்டத்தில் வாழ்ந்திருக்கின்றனர்.

மாஸ்தி 95 வயது வரையிலும், கல்கி 55 வயது வரையிலும் வாழ்ந்து பல்வேறு படைப்புக்களைத் தந்துள்ளனர். இவர்கள் இருவரும் மூன்று, மூன்று வரலாற்றுப் புதினங்களைப் படைத்திருக்கின்றனர்.

மாஸ்தியின் புதினத்தில் யதார்த்தம் அதிக அளவினில் இடம்பெற்றுள்ளது. இவர் வரலாற்று நிகழ்வுகளுக்கு அதிக அளவினில் முக்கியத்துவம் கொடுத்துள்ளார். தம் புதினமான சிக்கவீர இராஜேந்திராவில், 'ஏழு' வரலாற்று நிகழ்வுகளைக் கூறி சிறப்பான முறையினில் படைத்துள்ளார். கல்கியின் புதினத்தில் கற்பனை அதிகளவினில் இடம்பெற்றுள்ளது. அவரின் பார்த்திபன் கனவினை 'மூன்று' வரலாற்று நிகழ்வுகளைக் கூறி கற்பனைக் கலந்துப் படைத்துள்ளார்.

"*1820*-லிருந்து *1834* வரை என *14* ஆண்டுகள் ஆட்சிபுரிந்த குடவ வம்சத்தின் கடைசி அரசரான சிக்கவீர இராஜேந்திரனின் ஆட்சி பற்றி மாஸ்தியும், இராஜராஜ சோழன் வாழ்ந்த காலத்திற்கு *300*

ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த சோழர்களின் அரசாட்சிப் பற்றி கல்கியும் தத்தம் புதினங்களில் கூறியிருக்கின்றனர்.

இவ்விருப் புதினங்களிலும், வரலாற்று மாந்தர்களின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

மாஸ்தி சுதந்திரப் போராட்ட வீரர் அன்று. கல்கி ஒரு சுதந்திரப் போராட்ட வீரர். தம் எழுத்து மூலம் விடுதலை உணர்வைத் தூண்டியவர். இதனால் சிறைக்கும் சென்றிருக்கின்றார்.

மாஸ்தி தம் புதினத்தில் அதிக அளவினில் ஆங்கிலேயர்களைப் பற்றிக் கூறியிருக்கின்றார். கல்கி அந்நியர்களைப் பற்றி எங்கும் கூறவில்லை. ஒரே ஒரு இடத்தில் மட்டும் சீன வழிப்போக்கன் யுவான் சுவாங் பற்றிக் கூறியிருக்கின்றார்.

மாஸ்தியின் கல்வி முனைவர் பட்டம் வரை சென்றது. ஆனால் கல்கி பட்டதாரி அல்லர். அவரின் படிப்பு உயர்நிலைப் பள்ளியிலேயே நின்றுவிட்டது.

மாஸ்தி மத்திய அரசின் பணியிலும், கல்கி பத்திரிகைத் துறையிலும் பணியாற்றினர்.

**தொகுப்புரை**

- தமிழ் இலக்கியத்தில் புதினம் என்பது நமக்குக் கிடைத்தப் புது வரவு. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கிய தொடக்கம் இன்னும் வளர்ந்துகொண்டே செல்கிறது.
- முதன் முதலாகத் தமிழில் தோன்றிய வரலாற்றுப் புதினம். சரவணமுத்துப்பிள்ளை எழுதிய மோகனாங்கி (1895).
- இந்திய மக்கள் புதினம் என்ற இலக்கிய வடிவினை ஆங்கிலப் புதினங்களைக் கற்றுணர்ந்த பின்னர் அறிந்தனர்.
- தமிழ் வரலாற்றுப் புதினம் எனின் உடனே நினைவிற்கு வருபவர் கல்கி. அவரைத் தொடர்ந்துப் பல வரலாற்றாசிரியர்கள் தோன்றி எழுதி வருகின்றனர்.

♦ கன்னடப் புதினத்திற்கு ஏறக்குறைய நூற்றைம்பதாண்டு கால வரலாறு உண்டு.

♦ இயற்பெயரே 'கல்கி' என மயங்கும் வகையில் அப்பெயரிலேயே தமக்கெனத் தமிழ் இலக்கிய உலகில் ஒரு தனியிடத்தை ஏற்படுத்திக் கொண்டவர் இரா.கிருஷ்ணமூர்த்தி.

♦ இந்தியாவில் இலக்கிய மரியாதை பெற்றவரான மாஸ்தி கன்னட நாட்டின் கருவூலமாகக் கருதப்படுகிறார்.

♦ மாஸ்தி - கல்கி இருவரும், சிறுகதைகள், நெடுங்கதைகள், புதினங்கள், வரலாற்றுப் புதினங்கள், நாடகங்கள், கட்டுரைகள் எனப் பலவற்றையும் எழுதியுள்ளனர்.

♦ முருகு சுப்பிரமணியம் கல்கியின் பத்திரிகை உலகப் பணிப் பற்றியும், கா.பொ.இரத்தினம் கல்கியின் சிறுகதைகள் பற்றியும், தனிநாயக அடிகளார் கல்கியின் வரலாற்றுப் புதினங்கள் பற்றியும், வை.திருநாவுக்கரசு கல்கியின் சமூகப் புதினங்கள் பற்றியும், க.நா.சுப்பிரமணியம் கல்கி எனும் பத்திரிகாசிரியர் என்னும் தலைப்பிலும், அ.ச.ஞானசம்பந்தன் கல்கியின் நினைவுச் சொற்பொழிவுப் பற்றியும் தங்களின் மேலான கருத்துக்களைத் தெரிவித்திருக்கின்றனர்.

♦ மாஸ்தியைப் பற்றி, க.நா.சுப்பிரமணியம் 'மாஸ்தி என்கிற ஒரு தமிழர்' என்னும் தலைப்பிலும், எல்.எஸ்.சேசகிரிராவ், இராஜகோபாலச்சாரியார், கொரூர் இராமலிங்கசுவாமி ஐயங்கார், கே.சிவராம ஐந்தாள் போன்றோரும் பல்வேறு விதங்களில் தங்களின் மேலானக் கருத்துக்களைக் கூறியிருக்கின்றனர்.

♦ ஒரு பொருளின் தன்மையினை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் இயல்பு மக்களிடையே இயல்பாகக் காணப்படுகிறது.

♦ இரு புதின ஆசிரியர்களும் 19, 20 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர்களாகவும், இரு புதினங்களும் 20ம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகவும் காணப்படுகின்றன.

♦ மாஸ்தி 95 வயது வரையிலும், கல்கி 55 வயது வரையிலும் படைப்புக்களைப் படைத்துள்ளனர்.

♦ இரு புதின ஆசிரியர்களுமே தமிழர்கள். இவர்கள் ஒன்றுபட்ட இராசதானியில் ஒரே காலக்கட்டத்தில் வாழ்ந்திருக்கின்றனர்.

♦ மாஸ்தி குடவ அரசமுறைப் பற்றியும், கல்கி சோழர்களின் அரசமுறைப் பற்றியும் தத்தம் புதினங்களில் படைத்துள்ளனர்.

♦ மாஸ்தியின் புதினம் யதார்த்தமாகவும், கல்கியின் புதினம் கற்பனை மிகுந்தும் காணப்படுகிறது. மாஸ்தி 'ஒன்பது' வரலாற்று நிகழ்வுகளையும், கல்கி 'மூன்று' வரலாற்று நிகழ்வுகளையும் கூறியிருக்கின்றனர்.

♦ கல்கி சுதந்திரப் போராட்ட வீரர். மாஸ்தி ஆங்கிலேயர்களைப் பற்றியும், கல்கி சீனர்களைப் பற்றியும் கூறியிருக்கின்றனர். மாஸ்தி மத்திய அரசுப் பணியிலும், கல்கி பத்திரிகைத் துறையிலும் பணியாற்றினர்.

♦ மாஸ்தி முனைவர்பட்டம் பெற்றவர். கல்கி உயர்நிலைப் பள்ளிப் படிப்பைப் பாதியில் விட்டவர்.

## சான்றெண் விளக்கம்


1. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.2
2. மேலது, ப.2
3. மேலது, ப.3
4. இரா.தண்டாயுதம், நாவல்வளம், ப.139
5. Edward Hallelt care, what is history? P.3-16
6. Maurice - Z - Shrude, The Novel as a genre, P.21
7. பெ.கோ.சுந்தரராஜன், சோ.சிவபாதசுந்தரம், ப.க்27-29
8. Asher, R.E. The Beginning of Tamil Novel, Clark, T.W. P.203
9. மேலது, ப.9
10. விந்தன், முல்லைக் கொடியாள், முன்னுரை
11. Point of view, P.150
12. கல்கி, பாரதி பிறந்தார், ப.49
13. சிவகாமியின் சபதம், ப.6

*14.* மேலது, ப.*126*

*15.* மேலது, ப.*269*

*16.* மேலது, ப.*940*

*17.* மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார், தமிழாக்கம் ஹேமா ஆனந்த தீர்த்தன், சிக்கவீர இராஜேந்திரன், முன்னுரை, ப.vii

*18.* மேலது, ப.vii

*19.* மேலது, ப.*8*

*20.* மேலது, ப.*8*

*21.* மேலது, ப.*8*

*22.* மேலது, ப.ix

*23.* மேலது, ப.ix

*24.* மேலது, ப.ix

*25.* மேலது, ப.xii

*26.* கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.*24*

*27.* மேலது, ப.*25*

*28.* மேலது, ப.*25*

*29.* மேலது, ப.*26*

*30.* மேலது, ப.*26*

*31.* மேலது, ப.*25*

*32.* மேலது, ப.*26*

*33.* மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார், சிக்கவீர இராஜேந்திரன், ப.*446*

*34.* மேலது, ப.*446*

*35.* கல்கி, அலைஓசை, முன்னுரை, ப.*8*

*36.* மேலது, ப.*9*

*37.* கல்கி, பாரதி பிறந்தார், ப.*49*

*38.* சிவகாமியின் சபதம், ப.*653*

39. R.K.Narayan : Waiting for the mahatma.

*40.* தொல், களவியல் - *1*

*41.* ரெனிவெல்லாக், ஆஸ்டின் வாரன் இலக்கியக் கொள்கை, மொழி பெயர்ப்பு, ப.*56-65*

*42. வ.சுப.மாணிக்கம், ஒப்பியல் நோக்கு, ப.21*

43. Rene welleck, Discriminations, P.36

*44. க.கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.21*

*45. தமிழண்ணல், மு.நூ. ப.21*

*46. க.கைலாசபதி, இரு மகாகவிகள், ப.4*

*47. மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார், சிக்கவீர இராஜேந்திரன், ப.438.*

# சமூகக் கூறுகள்

## முன்னுரை

புதினம் உரைநடையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த இக்கால இலக்கியங்களுள் இன்றியமையாத கலை வடிவமாகவும், மக்கள் இலக்கியமாகவும் விளங்குகிறது. முதல் தமிழ்ப் புதினம் கி.பி.1879 இல் வெளிவந்ததிலிருந்து இன்றுவரை புதின இலக்கியம் கண்ட வளர்ச்சியும், எழுச்சியும் ஆய்வாளர்களால் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன. குறிப்பாகப் புதின இலக்கியம் கருதத்தக்க நிலையில் வளர்ச்சியடைந்துள்ளது.

தமிழ்க் காப்பியங்கள் போல பிற்காலத்தில் புதினங்கள் விரிவாக, சமுதாயத்தைப் புலப்படுத்தின. இவற்றுள் பலவகைப் புதினங்கள் உள்ளன. அதில் வரலாற்றுப் புதினங்களுக்குச் சிறப்பான இடமுண்டு. இத்தகைய வரலாற்றுப் புதினங்களைப் படைப்பதில் தமிழில் கல்கியும், கன்னடத்தில் மாஸ்தியும் வல்லவர்கள். இவ்விருவரின் வரலாற்றுப் படைப்புக்களான, பார்த்திபன் கனவிலும், சிக்கவீர இராஜேந்திராவிலும் பதிவாகியுள்ள சமூகக் கூறுகளைப் பற்றி ஒப்பீடு செய்யும் வகையில் இவ்வியல் அமைகின்றது.

## சமூகம் - விளக்கம்

சமூகம் என்பது ஒரு கூட்டு வாழ்க்கை முறையினைக் குறிப்பதாகும். மனிதன் விலங்கின் நிலையிலிருந்து மாறி ஒருவரை ஒருவர் உறவுகொள்ளும் நிலையில் சமூகம் உருவாகின்றது. அரசியல், நாட்டுப்பற்று, சமயம், பண்பாடு, தொழில், கலாச்சாரம் முதலியவற்றின் அடிப்படையில் சேர்ந்து வாழும் மக்கள் கூட்டம் சமூகம் எனப்படும்.

சமூகம் என்பது பல்வேறு வகைப்பட்ட மனித இனங்கள் ஏற்படுத்திக் கொண்ட வாழ்க்கை அமைப்புமுறையாகும். இவ்வாழ்க்கை அமைப்பில் மேல்மட்டத்தில் வாழும் மக்கள் முதல் கீழ்மட்டத்தில் வாழும் மக்கள் வரை அனைவருக்கும் தீராத பிரச்சினைகள் இருப்பதைக் காணமுடிகிறது.

*ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்றுசேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பு சமூகம் என்று கூறப்படுகிறது.*

**சமூகம் பற்றிய கருத்துக்கள்**

*பலதரப்பட்ட மக்களைக் கொண்ட ஓர் அமைப்பிற்குச் சமூகம் என்று பெயர். பல்வேறு குடும்பங்களைச் சேர்ந்த ஓர் அமைப்பிற்கும் சமூகம் என்று பெயர். இது தனிமனிதன், குடும்பம், சாதி, சமயம், அரசியல், தொழில்கள், தெய்வங்கள், வழிபாடுகள், விழாக்கள், அணிகலன்கள், உணவுமுறை, புழங்குபொருட்கள், கால்நடைகள், கருவிகள் போன்றவற்றை உள்ளடக்கியதாகும். இதனைப் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன.*

*“சமூகம், சமுதாயம், குமுகாயம் ஆகிய சொற்கள் ஒரு பொருளைக் குறிக்கின்றன. மக்கள் குழுக்களைக் குறிக்க ‘கம்யுனிட்டி’* (Community), *சொசைட்டி* (Society) *என்ற இரு ஆங்கிலச் சொற்கள் இருக்கின்றன. ‘கம்யுனிட்டி’ என்பது ஒரே குலத்தைச் சேர்ந்த மக்கள் குழுக்களைக் குறிப்பது. சொசைட்டி என்பது பல்வேறு குலத்தைச் சார்ந்த மக்கள் குழுவை உள்ளடக்கியது என்கிறார் நா.பிச்சமூர்த்தி.”*[1]

*சமூகம், சமுதாயம் என்னும் ஒரு பொருளுடைய வடசொற்கள் குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் மக்களின் வாழ்வியலைக் குறிப்பதாகும். குமுகாயம் என்பது இதன் தமிழ் வடிவமாகும்.*

*“சமூகம் என்பது ஒரு வரையறுத்த தொடர்ச்சியான வாழ்க்கைமுறை அல்லது பண்பாட்டைப் பெற்றத் தமக்குள் ஒற்றுமை உடையவராக வாழும் மக்களைக் கொண்டது”*[2] *என்று டேவிட் டிரஸ்லர் கூறுகிறார்.*

*“மனிதர்களின் கூட்டமே சமூகம் என்பதாகும். அச் சமூகத்தில் நல்லவர்கள், கெட்டவர்கள் என்று பலதரப்பட்டவர்கள் காணப் பெறுகின்றனர்”*[3] *என்கிறார் மாலினி. சமூகம் என்பது பல குழுக்களின் பிணைப்பால் இணைந்திருப்பதாகும்.*

“மனித உறவுகளாலும், உணர்வுகளாலும் ஒருங்கமைக்கப்பட்ட நிலையில் சமுதாயம் என்பது பல்வேறு நிறுவனங்களின் ஒருங்கிணைப்பாக விளங்கும் சமூகக் கட்டமைப்பு”[4] ஆகும் என சி.இ.மறைமலை சுட்டுகின்றார்.

“ஒரு சிறிய நிலப்பரப்பில் பொது வாழ்க்கை விதிமுறையைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதியைச் சமூகம் என்று அ.குழந்தைசாமி தெரிவிக்கின்றார்.”[5]

“தாம் அறிந்த, தாம் பழகிய சமூகத்தையும் அவற்றோடு தொடர்புகொண்ட செய்திகளையும், கற்பனையோடு இணைத்துப் படைக்கும் போதுதான் அப்படைப்பு வெற்றிபெறுகிறது. தன் பார்வையின் எல்லைக்கும், அனுபவ உணர்வின் எல்லைக்கும் உட்படாத செய்திகளை இணைத்து இலக்கியம் படைக்க முயலும் போது அப்படைப்பு மதிப்பிழக்க நேரலாம், அல்லது வரவேற்பைப் பெறாமல் போகலாம். நடைமுறை வாழ்க்கையினின்றும் பெறப்படும் அனுபவங்கள் கதைமாந்தரின் வாயிலாக வெளிப்படுத்தப்படும்போது ஒவ்வொரு புதினமும் ஒரு நிகழ்வு ஆராய்ச்சியாகவே (case History) விளங்குகிறது”[6] என்று சமுதாயம் பற்றி ‘மு.வ.வின் புதினங்களில் சமுதாயச் சிக்கல்கள்,’ என்ற நூலில் அ.சிவக்கண்ணன் கூறுவதைக் காணலாம்.

“ஒரு வட்டாரத்தில் ஒரு பொது வாழ்க்கை நெறியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதியைச் சமூகம் என்று அழைப்பர்”[7] என்கிறார் அர்னால்டு கிரீன்.

சமூகம் என்பது பலதரப்பட்ட மக்களைக் கொண்ட ஒரு குழு ஆகும். “சமூகம் கல், மண், சுண்ணாம்பு முதலியவற்றால் உருவாக்கப்பட்ட ஓர் இல்லம் போல் பலதரப்பட்ட மக்களால் உருவாக்கப்பட்டது”[8] என்கிறார் அகிலன்.

சமூகத்தின் விளைபொருளே இலக்கியம். “இலக்கியம் சமுதாயத்தையும், சமூகம் இலக்கியத்தையும் பாதித்தே வளர்ந்துள்ளன.

எழுத்தாளன் சமுதாயத்தைச் சேர்ந்தவன். தான் வாழும் இனத்தைச் சுற்றியே அவனுடைய எண்ணங்கள் படர்கின்றன. இதனால் சமூகத்திலுள்ள சீர்கேடுகள் பெரும்பாலும் அவனது எண்ணத்தைத் தைக்கின்றன"[9] என்று கோ.வை.கீதா கூறியுள்ளார்.

"சமூகத்தால் எழுத்தாளன் பாதிக்கப்படுகிறான். அதோடு சமூகமும் அவனால் பாதிக்கப்படுகிறது. இலக்கிய வாழ்வை உருவாக்கி அளிப்பதோடு அதைச் சீரமைக்கவும் செய்கிறது"[10] என்று மா.செல்வராசன் சமூகத்திற்கும், எழுத்தாளனுக்கும் உள்ள உறவைக் குறிப்பிட்டுள்ளார்.

"வாழ்வில் எதிர்ப்படும் சமூகம் குறைமிக்கதாக இருக்கும்போது கற்பனையில் தக்க சமூகத்தைப் படைத்துக் காட்டும் உரிமை கலைஞனுக்கு உண்டு" என்கிறார் இரா.மோகன்.

"சமூகம் என்பது மனித இனத்தின் சமூகப் பொருளாதார அரசியல் ஈடுபாடுகளின் தொடர்புகளினால் இயைந்துவரும் ஓர் அமைப்பாகும். இவ்வமைப்பு ஒரு குறிப்பிட்ட நாகரிக அமைப்பிற்குள் இயங்கி வருகின்றது"[12] என்கிறார் சு.சக்திவேல்.

"ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதனுடன் கொண்டிருக்கும் சமூக உறவுமுறைத் தொடர்புகளைத்தான் சமூகம் என்கிறோம். சமூகவியல் அல்லது சமூகம் என்பது புலனாகா உளச்சார்புடையக் கருத்தியல் பொருள் ஆகும் என்கிறார் மு.வ."[13]

"சமூகம் என்பது ஒரே மாதிரியான அல்லது சீரான அமைப்பு கொண்டதல்ல அது வேறுபாடுகளாலும், முரண்பாடுகளாலும் ஆனது. புறவயத்தாக்கங்கள் பெறுவது"[14] என்பர் தா.ஏ.ஞானமூர்த்தி.

"கூடிவாழும் இயல்புடைய மனித இனத்தின் பட்டறிவின் தன்மைக்குத் தக்கவாறு சமூக அமைப்பு உருவாகிறது. அது இடத்திற்கு இடமும், காலத்துக்குக் காலமும் மாறும் தன்மையுடையதாகக் காணப்பெறுகிறது. அமைதிக்கும், அமைதி இழப்பிற்கும் சமுதாயமே பாசறையாக அமைகின்றது"[15] என்கிறார் வெ.கனகசுந்தரம். இவ்வாறு

சமூகம் பற்றி பல்வேறு கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. எனவே ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் பொதுவான வாழ்வியல் முறைகளைக் கொண்ட மக்களின் கூட்டத்தைச் சமுதாயம் எனலாம்.

## சமூகம் - அகராதிகள் தரும் விளக்கம்

ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக்கொள்ளும் அமைப்பைச் சமூகம் என்று கூறுகின்றனர். இச்சமூகத்திற்கு அகராதிகள் சிறப்பான முறையினில் விளக்கம் கூறுகின்றன.

"கூட்டு வாழ்வுக்குழு, மன்னாயம், நட்புக்குழு, சேர்க்கை, தோழமை, தொகுதி, குடிமைப் பண்புடையோர்குழு"[16] என்று ஆங்கில தமிழகராதி விளக்கம் தருகிறது. தமிழ்ச் சொல்லகராதி சமூகம் என்றச் சொல்லுக்கு "மக்கள் திரள்"[17] என்று பொருள் தருகிறது.

"பெரிய லிப்கோ அகராதி சமுதாயம் பொதுநல நிறுவனம், சங்கம், சமூகம், சமூகத்தில் வசதிமிக்கவர்கள்"[18] என்ற விளக்கத்தைத் தருகிறது.

பாவானந்தர் தமிழச்சொல்லகராதி சமூகம் என்பதற்கு "கூட்டம், சபை, முன்னிலை எனப் பொருள் தருகிறது."[19] இவ்வாறு சமூகம் என்பதற்கு அகராதிகள் விளக்கம் தருகின்றன. இவைபோன்று மேலும் பல்வேறு அகராதிகள் சமூகத்திற்கு விளக்கம் அளித்துள்ளன.

## சமூக நிறுவனங்கள்

ஒரு நல்ல இலக்கியம் என்பது சமூக மேம்பாட்டிற்காகவும், சிந்தனையைத் தட்டி எழுப்புவதாகவும் இருக்க வேண்டும். ஓர் இலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளன் அடிப்படையில் சாதாரண மனிதனாக இருக்கிறான். அவனுக்குள்ளும் சிக்கல்களும், பிரச்சினைகளும் இருக்கின்றன. தனிமனிதன் பிரச்சினைகள் வரும்போது, எதிர்கொள்ளவும், எதிர்கொள்ள முடியாமல் வீழவும், தவிக்கவும் செய்கிறான்.

இந்நிலையில் படைப்பாளன் பிரச்சினைகளை எதிர்கொண்டு அதனையே படைப்பாகக் கொண்டு தீர்வுகாண முயல்கிறான்.

படைப்பாளனுக்கு ஏற்பட்டச் சிக்கல்கள் எல்லோருடைய பொதுச் சிக்கலாகவும், தீர்வாகவும் அமைகின்றன. இதனை, "மனிதனுக்கு ஆத்மா ஒன்று இருப்பது போல், சமுதாயத்திற்கும் ஓர் ஆத்மா உண்டு. அந்த ஆத்மாவின் துடிப்பை அதன் இரசபேதம் மிக்க இராகங்களைக் கண்டறிந்து அவற்றை எழுத்தில் வடிப்பவன் உண்மைக் கலைஞன் ஆவான். தான் வாழும் சமுதாயத்தைப் புதியதொரு சிந்தனை ஒளியில் நின்று தான் கண்டதை எழுத்தில் பிரதிபலிக்கிறான். அது கலைப்படைப்பாக மாறுகிறது"[20] என மா.இராமலிங்கம் குறிப்பிடுகிறார்.

சமூகம் என்ற சொல் ஆறறிவு படைத்த மக்களினத்தோடு தொடர்புடையதாகும். இத்தகைய சமூகத்தின் நிறுவனங்களாகத் தனிமனிதன், குடும்பம், சாதி, சமயம், அரசியல், தொழில்கள், தெய்வங்கள், வழிபாடுகள், விழாக்கள், அணிகலன்கள், உணவுமுறை, புழங்குபொருட்கள், கால்நடைகள், கருவிகள் ஆகியவை இடம்பெறுகின்றன.

**தனிமனிதன்**

சமூகத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட, சமூகம் அங்கீகரிக்கின்ற செயல்பாடுகளை ஏற்று, இயற்கை முதல் சமூகம் உள்ளிட்ட பல்வேறு நிலைகளுக்கும் தீங்கிழைக்காத உண்மையான மனிதனே சிறந்த மனிதனாவான்.

உண்மை நிலையோடு சமூகத்திற்குத் தீங்கு விளைவிக்காத வண்ணம் மனிதன் இருக்கின்றபொழுது, சமூகமும் அத்தகைய போக்கில் அமையும். அதற்கு அடிப்படையாய் தனிமனித ஒழுக்கம் முதன்மையாகின்றது.

தனிமனிதனின் நல்லொழுக்கமானது, மக்களிடத்தில் நன்மதிப்பை உருவாக்குவதோடு, சமூகத்தில் தனித்துவ மதிப்புகளையும் தருகின்றது. அவற்றில் மிகவும் முக்கியமானது மக்களோடு இணைந்து பழகுவது, உதவுவது போன்றனவாகும். இத்தகையத் தனிமனிதன் பற்றி இரண்டு புதினங்களிலும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

*பார்த்திபன் கனவில் வரும் நரசிம்மபல்லவசக்கரவர்த்தி, சிவனடியார் வேடமிட்டுக் கொண்டு, பார்த்திபனுக்கும், அவனுடைய குடும்பத்திற்கும் பல்வேறு உதவிகளைச் செய்கின்றான். பார்த்திபன் போரில் காயங்களுடன் இருந்த நிலையில் அவனைச் சந்தித்த சிவனடியார், "பார்த்திபா! உன்னைப் போன்ற சுத்த வீரர்களுக்குத் தொண்டு செய்வதையே தர்மமாகக் கொண்டவன் நான். உன் மனத்தில் ஏதாவது குறை இருந்தால் சொல்லு; பூர்த்தியாகாத மனோரதம் ஏதாவது இருந்தால் தெரிவி ; நான் நிறைவேற்றி வைக்கிறேன்"[21] என்றார்.*

*அதற்குப் பார்த்திபன், "என் மனத்தில் ஒரு குறை இருக்கிறது. சோழநாடு தன் புராதானப் பெருமையை இழந்து இப்படிப் பராதீன மடைந்திருக்கிறதே என்பதுதான் அந்தக் குறை. சோழநாடு முன்னைப் போல் சுதந்திர நாடாக வேண்டும். மகோன்னதமடைய வேண்டும். தூர தூர தேசங்களிலெல்லாம் புலிக்கொடி பறக்க வேண்டும் என்று கனவு கண்டு வந்தேன். என்னுடைய வாழ்க்கையில் அது கனவாகவே முடிந்தது. என்னுடைய மகன் காலத்திலாவது அது நனவாக வேண்டுமென்பதுதான் என் மனோரதம். விக்கிரமன் வீரமகனாய் வளர வேண்டும். சோழநாட்டின் மேன்மையே அவன் இலட்சியமாயிருக்க வேண்டும். சுகம் பெரிதல்ல, உயிர் பெரிதல்ல, மானமும் வீரமுமே பெரியவை என்று அவனுக்குப் போதிக்க வேண்டும். அன்னியருக்குப் பயந்து வாழும் வாழ்க்கையை அவன் வெறுக்க வேண்டும் சுவாமி! இந்த வரந்தான் தங்களிடம் கேட்கிறேன் தருவீர்களா? என்றான்."[22] இதனைக் கேட்ட சிவனடியார், "உன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றுவேன் நான் உயிரோடிருந்தால்"[23] என்றார். இவ்வாறு பார்த்திபனுக்குப் போர்க்களத்தில் வரங்கொடுத்து, அதனை நிறைவேற்றப் பாடுபட்டார் சிவனடியார் வேடத்திலிருந்த நரசிம்மர்.*

*அருள்மொழியைச் சந்தித்து இளவரசர் விக்கிரமனுக்கு எவ்வித ஆபத்தும் நேராமல் பார்த்துக் கொள்வதாக உறுதிகூறுகிறார்.*

*சிராப்பள்ளி மலைமீது பறந்து கொண்டிருந்த பல்லவர் கொடியை எடுத்தெறிந்துவிட்டு அங்கே புலிக்கொடியைப் பறக்க விடுவதற்காகச்*

சென்ற விக்கிரமன். பல்லவத் தளபதி அச்சுதவர்மனால் கைது செய்யப்பட்டு நரசிம்ம வர்மனிடம் கொண்டு சொல்லப்பட்டான். அப்போது, நரசிம்ம பல்லவன் கப்பம் கட்டிக்கொண்டு நாட்டை ஆளுமாறு விக்கிரமனிடம் கூற, அதற்கு மறுப்புத் தெரிவித்தான்.

இதனால் செண்பகத் தீவிற்கு நாடுகடத்தப்பட்டான். செண்பகத் தீவில் அரசன் இல்லாததால், நரசிம்மர் விக்கிரமனுக்குத் தண்டனைக் கொடுப்பது போல் கொடுத்து, அவனை அத்தீவிற்கு அரசனாக அனுப்பி வைத்து நாடாளச் செய்தார்.

செண்பகத்தீவிலிருந்து அம்மாவைக் காணும் பொருட்டு வந்த விக்கிரமன் உறையூர் செல்லும் வழியில் கொள்ளையர்களிடம் மாட்டிக் கொள்ளும் போது, ஒற்றர் படைத் தலைவனாக வேடமிட்டுக் கொண்டு வந்த நரசிம்மர் அவனைக் காப்பாற்றி உடன் தன் குதிரையையும் கொடுத்து அனுப்பி வைக்கிறார்.

கபால பைரவனால் கடத்திச் செல்லப்பட்ட ராணி அருள்மொழியைத் தேடி காட்டுக்குள், தனியே செல்கிறார் சிவனடியார் வேடத்தில் இருக்கும் நரசிம்மர். அங்குக் கபால பைரவனால் சிறைபிடிக்கப்பட்டுப் பலியிடுவதற்காகப் பலிபீடத்தின் மீது அமர்த்தப்பட்டார்.

அப்போது, திடீரென வந்த சிறுத்தொண்டர் மற்றும் அவரது ஆட்கள் கபால பைரவனைச் சிறைப்பிடித்து, சிவனடியாரையும், அருள்மொழியையும் காப்பாற்றினர்.

மறுநாள் நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் திரும்பிவந்ததற்கு அவனுக்குத் தண்டனைக் கொடுப்பதற்காகச் சபைகூட்டப்பட்டது. அப்போது, சிறுத்தொண்டர், சிவனடியாரைப் பார்த்து, "போர்க்களத்தில் பார்த்திப மகாராஜாவுக்கு வாக்குறுதிக் கொடுத்த பிறகு, மகாராஜா இவரைப் பார்த்து 'சுவாமி! தாங்கள் யார்?' என்று கேட்டார். அப்போது இந்த சிவனடியார், தமது பொய் சடாமகுடத்தை நீக்கிவிட்டு உண்மை ரூபத்துடன் தோன்றினார்.

அதனைக் கண்ட மகாராஜா தனது மனோரதம் நிறைவேறும் என்ற பூரண நம்பிக்கையில் வீர சொர்க்கம் அடைந்தார்"[24] என்று கூறினார்.

பின்னர், "ஒரு நொடியில் சிவனடியாரின் ஜடாமகுடத்தையும், தாடி மீசையையும் தமது இரண்டு கையினாலும் நீக்கிவிடவே, மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தியின் தேஜாமயமான கம்பீர முகத்தை எல்லாரும் கண்டார்கள்."[25]

நரசிம்மப் பல்லவர் அரியணையில் அமர்ந்து "நாடு கடத்தப்பட்டவர் திரும்பிவந்தால், அதற்குத் தண்டனை சிரசாக்கினையாகும். எனவே, புராதனமான சோழ மன்னர்களின் மணிமகுடத்தை விக்கிரம சோழர் இனிமேல் தனியாகவே தலைமேல் தாங்க வேண்டுமென்னும் சிரசாக்கினையை விதிக்கிறேன்! இன்று முதல் சோழ நாடு சுதந்திர ராஜ்யமாகிவிட்டது. இதன் பாரம் முழுவதையும் விக்கிரம சோழரும் அவருடைய சந்ததிகளும்தான் இனிமேல் தாங்கியாக வேண்டும்"[26] எனக் கூறினார். இவ்வாறு போர்க்களத்தில் பார்த்திப மகாராஜாவுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிய நரசிம்மப் பல்லவச் சக்கரவர்த்தி, தனிமனித ஒழுக்கத்திற்கு சிறந்த உதாரணமாகத் திகழ்ந்தார்.

சிக்கவீர இராஜேந்திராவில், வீரராஜனின் நண்பனாக வரும் நொண்டி பசவன் தொடக்கம் முதல் இறுதிவரை வீரராஜனுக்காகவே வாழ்ந்ததாகக் கூறப்படுகிறான். வீரராஜனைப் பல்வேறு தீயப் பழக்கவழக்கங்களுக்கு உள்ளாக்கினாலும் அவன் மேல் உண்மையான அன்பு கொண்டவனாகவும், சொல்வதை எல்லாம் செய்பவனாகவும் திகழ்ந்தான்.

ஒவ்வொரு தண்டனையையும் பசவன் மூலமாகததான் நிறைவேற்றுவான் அரசன். ஆங்கிலேயர் வந்தபொழுது அவர்களுக்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளையும் பசவனே செய்தான். அரசனுக்கு உடல்நிலை சரியில்லாதபோது, பகவதியை அழைத்துவந்து வைத்தியம் பார்க்கச் செய்தான். அரசனுக்குச் சித்தபிரமை உண்டான போது,

அதனை வெளியிடாமல், உடல்நிலை சரியில்லை என்று கூறி அவனுக்குப் பல்வேறு சிகிச்சைகள் அளிக்கச் செய்தான்.

அரசன் ஆங்கிலேயர்களை அலட்சியப்படுத்தும்பொழுது போர் ஏதும் வந்துவிடக்கூடாது என்பதற்காக இவன் ஆங்கிலேயர்களிடம் கரிசனத்துடன் நடந்துகொண்டு, ஆங்கிலேயருக்கு அரசன்பால் இருக்கும் கோபத்தைத் தணிக்கச் செய்தான்.

போரின் போது, எல்லா அமைச்சர்களும் ஆங்கிலேயரின் வசம் சென்றபோது, பசவன் மட்டும் அரசனுடனே இருந்தான். அரண்மனை வாயிலில் சண்டை வலுத்தது. "இனி அரசர் இங்கே இருக்க வேண்டாம். சுரங்க வழியாக ஓடிவிடுங்கள்," என்று அரசனை வேண்டினான் பசவன். அரசன் சுரங்கப் பாதை வழியாகத் தப்பிச் செல்ல, அங்கு ஆங்கிலேயப் படையினால் கைது செய்யப்படுகிறான். இதெல்லாம் பசவனின் செயலா என சந்தேகம் கொண்டான் அரசன். பின்னர், "அரசே! இவர்களிடம் மாட்டிக்கொண்டுவிட்டீர்களா என ஓடிவந்தவனை, அரசன் நீயே பிடித்துக் கொடுத்துவிட்டு, அகப்பட்டுக் கொண்டுவிட்டாயா, என்கிறாயா எனக் கூறி இடுப்பிலிருந்த கைத் துப்பாக்கியினால் பசவனைச் சுட்டான்."[27]

"தனது அரசன் தன்னைச் சுடுகிறான் என்பதைக் கண்டு ஆச்சரியம் கொண்ட பசவன் 'ஐயோ அரசே' என்று கதறிய வண்ணம் அங்கேயே விழுந்து இறந்தான்."[28] இவ்வாறு, பசவன் தொடக்கம் முதல் இறுதி வரை தனது அரசருக்காகவே வாழ்ந்ததாகப் படைக்கப் பட்டுள்ளான்.

இதன்மூலம், தனிமனித இயல்புகள் இரண்டு புதினங்களிலும் சிறப்பாக எடுத்தாளப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

### குடும்பம்

தனிமனிதன் திருமணம் என்ற அமைப்பின் வழி குடும்பமாகிறான். அவன் மனைவி, மக்கள் அடங்கியது தனிக்குடும்பமாகிறது. "இன வாழ்வின் அடிப்படைக் கூறு குடும்பம், குடும்பத்தின் கூட்டே

சமுதாயம். குடும்பப் பண்பு சமுதாயப் பண்பாகப் பரவவில்லையானால் அது இன்பமாக வளர முடியாது"[29] என கா.அப்பாத்துரை குடும்பம் பற்றிக் கூறியிருக்கிறார்.

சமுதாய அமைப்புகளுக்கு அடித்தளமாக விளங்குவதில் முதன்மையிடம் பெறுபவை தனிமனிதனும், குடும்பமும் ஆகும். சமூகம் தன் நிலைப்பாடுகளை வகுத்துக் கொள்வதற்கும், சமூகம் மேம்படுவதற்கும், 'குடும்ப அமைப்பு' சிறந்த அமைப்பாய் நிற்கின்றது. சமூக நிறுவனங்களில் முதன்மையானது குடும்பமாகும்.

குடும்பம் தலைமுறை தலைமுறையாய்ப் பண்பாட்டு மரபுரிமையைக் கொண்டு செல்லும் ஒரு செயல் என்றும் இதனைப் புலப்படுத்துவர். "நவீன கால குடும்பம் அடிமை முறையை மட்டுமின்றிப் பண்ணையடிமை முறையையும் கரு அளவில் தன்னுள் கொண்டிருக்கிறது"[30] என வர்க்கக் கண்ணோட்டத்தோடுக் குடும்பத்தை வரையறுக்கிறார் மார்க்ஸ்.

சமூகத்தில் குழுவாக இணைந்து வெளிப்படும் அமைப்பு குடும்பமாகும். சிலர் குடும்பம் ஒரு நிறுவனம் என்றும், ஒரு சிலர் அதனை நிலையம் என்றும், வேறு சிலர் அதனை ஒரு குழு என்றும் குறிப்பிடுவர். இதனைப் பாஸ்கல் கிஸ்பர்ட் என்பவர், "குடும்பம் ஒரு நிலையம் அல்லது இயைபுக் குழு மடடுமல்ல, அது ஒரு நிறுவனமும் கூட, அதை நிறுவனங்களின் தொகுதி என்று சொல்வதுகூட தவறாகாது"[31] எனக் கூறுகின்றார்.

வள்ளுவர் குடும்பம் பற்றி,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கைப்
பண்பும் பயனும் அது"[32]

எனக் கூறியிருக்கின்றார். இவ்வாறு குடும்பம் பற்றிப் பல்வேறு செய்திகள் கூறப்படுகின்றன. இத்தகையக் குடும்பத்தின் உறுப்பினர்களாகத் தந்தை - மகன் உறவுமுறை, தந்தை - மகள் உறவுமுறை, தாய் - மகன் உறவுமுறை, தாய்-மகள் உறவுமுறை, கணவன்-மனைவி உறவுமுறை போன்ற உறவு முறைகள் கூறப்படுகின்றன. இத்தகைய உறவு முறைகள்

யாவும், கல்கியின் பார்த்திபன் கனவிலும், மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவிலும் சிறப்பான முறையில் இடம்பெற்றுள்ளன.

**தந்தை - மகன் உறவு**

சமூகத்தில் தந்தை - மகன் உறவு என்பது சிறப்பான ஒன்றாகக் கருதப்படுகிறது. இதனைத் திருவள்ளுவர்,

"தந்தை மகற்காற்றும்உதவி இவன்தந்தை என்னோற்றான்
கொல் என்னும் சொல்"[33]

என்னும் குறள் மூலம் விளக்குகிறார். இத்தகைய உறவுமுறைப் பார்த்திபன் கனவிலும், சிக்கவீர இராஜேந்திராவிலும் திறம்படக் கூறப்பட்டுள்ளது.

பார்த்திபன் கனவில், பார்த்திபன் தன் மகன் விக்கிரமனை மிகுந்த வீரமும், மானமும் உடையவனாக வளர்க்கிறான். விக்கிரமனும் தன் தந்தையின்பால் மிகுந்த அன்பும், மரியாதையும் கொண்டவனாய்த் திகழ்ந்தான்.

ஒருநாள் பார்த்திபன் தன் மகனைச் சித்திர மண்டபத்திற்கு அழைத்துச் சென்று, அங்குள்ளச் சித்திரங்களைக் காண்பித்து விளக்கினார். பின்னர் தனியே உள்ள ஒரு சித்திர அறைக்கு அழைத்துச் சென்று தான் வரைந்த சித்திரங்களைக் காண்பித்தபோது தந்தை - மகனுக்கான உரையாடல் பின்வருமாறு நிகழ்ந்தது.

"அதோ அந்த முதல் சித்திரத்தைப் பார்! குழந்தாய் அதில் என்ன தெரிகிறது?"[34] என்று மகாராஜா கேட்டார். போருக்குப் படைக் கிளம்புகிறது. ஆஹா எவ்வளவு பெரிய படை! எவ்வளவு யானைகள், தேர், குதிரைகள், காலாட்படைகள்! என்று விக்கிரமன் வியப்புடன் கூறி, ஒரு சித்திரத்தைப் பார்த்து இவ்வளவு கம்பீரமாக நடந்துபோகும் அந்தப் பட்டத்து யானையின் மேல் யானைப்பாகன் மட்டுந்தானே இருக்கிறான், அம்பாரியில் யாரும் இல்லையே என்று வினவ, பார்த்திபன், "இந்தச் சோழ வம்சத்திலே எந்தத் தீரன் இம்மாதிரி பெரிய படையைத்திரட்டிக்கொண்டு போருக்குப் போகிறானோ அவனுடைய உருவத்தை அந்த யானையின் மேல் எழுத வேண்டும். நீ உன்

மூதாதையர் கரிகால் வளவன், நெடுமுடிக் கிள்ளி போல வரவேண்டும் என்று கூறினான்."[35] இதன் மூலம் பார்த்திபன் தன் மகன் மேல் வைத்திருக்கும் நம்பிக்கை வெளிப்படுகிறது.

விக்கிரமன் தன் தந்தையின் சித்திரத் திறமையைப் பாராட்டியபோது, பார்த்திபன் அவனைக் கட்டி அணைத்துக் கொண்டு, "என் கண்ணே என்னுடையச் சித்திரத் திறமையை நீ ஒருவன் பாராட்டியதே எனக்குப் போதும், வேறு யாரும் பாராட்ட வேண்டியதில்லை. என் மனத்திலிருந்த ஏக்கம் இன்று தீர்ந்தது"[36] என்றதன் மூலம், பார்த்திபன் தன் மகன் மீது வைத்திருக்கும் அன்பும் வெளிப்பட்டு நிற்கிறது.

"விக்கிரமன் வீரமகனாய் வளர வேண்டும். சோழ நாட்டின் மேன்மையே அவன் வாழ்க்கையின் இலட்சியமாயிருக்க வேண்டும். உயிர் பெரிதல்ல, சுகம் பெரிதல்ல, மானமும் வீரமுமே பெரியவை என்று அவனுக்குப் போதிக்க வேண்டும். அன்னியருக்குப் பயந்து வாழும் வாழ்க்கையை அவன் வெறுக்க வேண்டும்"[37] என பார்த்திபன் எண்ணினான்.

விக்கிரமன் சிவனடியாரிடம், "சுவாமி! நேற்றிரவு கனவில் என் தந்தை என்னை அழைத்துக் கொண்டு சிராப்பள்ளி மலைக்குச் சென்று, அங்கேப் பறந்து கொண்டிருந்த பல்லவர்களின் சிங்கக் கொடியைக் காட்டினார். சுவாமி! இனிமேல் என்னால் பொறுத்திருக்க முடியாது, தந்தையின் கனவை நிறைவேற்ற வேண்டும் என்றான்."[38] இதன்மூலம் மகன் தந்தை மீது வைத்திருக்கும் அன்பும், மரியாதையும் வெளிப்படுகின்றன.

ஒரு சிறிய நாடாக இருந்தாலும், தன் மகன் சுதந்திர மன்னனாக இருக்க வேண்டும் என பார்த்திபன் விரும்பினான். அதனை நிறைவேற்ற வேண்டும் என விக்கிரமன் போராடினான். இவ்வாறாக, பார்த்திபன் தன் மகன் மீது வைத்திருக்கும் அன்பையும், மரியாதையையும் இப்புதினம் சிறப்பாக விளக்குகிறது.

*சிக்கவீர இராஜேந்திராவில், வீரராஜனின் தந்தை லிங்கராஜன் தன் மகனின் துர்நடத்தைகளினால், அவனிடம் கோபமாக நடந்து கொண்டாலும், மனத்திற்குள் அவன்பால் மிகுந்த அன்பும், அக்கறையும் கொண்டிருந்தான். வீரராஜன் மது, மாது என அனைத்துக் கெட்டப் பழக்க வழக்கங்களும் கொண்டவனாய்த் திகழ்ந்ததினால், லிங்கராஜன் தன் மகனை அயோக்கியன், துஷ்டன், முரடன் என்றெல்லாம் திட்டுவான். சில சமயம் லிங்கராஜனிடம் "பார் அவரை அரண்மனையில் பிறந்தவரல்ல மருமகப்பிள்ளை. ஆனாலும் எவ்வளவு கம்பீரமாக நடந்துகொள்கிறார்" என தன் மருமகனான சென்ன பசவனை உயர்த்திப் பேசி வீரராஜனை இகழ்ந்து பேசுவான்."*[39] *ஆனாலும், லிங்கராஜன் தன் அரசபதவியை மருமகனுக்கோ, மகளுக்கோ கொடுக்காமல் தன் மகனுக்கேக் கொடுத்தான். இதன்மூலம் கெட்டக் குணங்கள் இருந்தாலும் தனக்குப் பின் தன் மகனே நாட்டை ஆள வேண்டும் என லிங்கராஜன் விரும்பினான்.*

*இவ்வாறாக இரு புதினங்களிலும் கூறப்படும் தந்தைமார்கள் தனக்குப் பின் தன் மகனே சுதந்திரமாக நாட்டை ஆளவேண்டும் என எண்ணுகின்றனர்.*

**தந்தை - மகள் உறவு**

*பொதுவாக ஆண்பிள்ளைகள் தாய்ப் பிள்ளைகளாகவும், பெண் பிள்ளைகள் தந்தைப் பிள்ளையாகவும் இருப்பர். இதனை இவ்விரு புதினங்களும் உறுதிபடுத்துகின்றன.*

*பார்த்திபன் கனவில், நரசிம்மப் பல்லவ சக்கரவர்த்திக்கும், அவருடைய மகள் குந்தவி தேவிக்கும் இடையிலான உறவுநிலைப் பற்றித் திறம்படக் காட்டப்படுகிறது.*

*குந்தவி சிறுவயதில் தாயை இழந்தவள். அதனால் தந்தை மகளுக்கான உறவுநிலை இன்னும் பலப்பட்டது. "அப்பாவுடன் இருக்கும் போதுதான் அவளுக்குக் குதூகலம். அவருடன் சண்டை பிடிப்பதில் தான் அவளுக்கு ஆனந்தம். அவர் தன்னை உடன் அழைத்துப் போகாமல் இராசரீகக் காரியங்களுக்காக வெளியூர்களுக்குப்*

போயிருந்தால், அவளுக்கு ஒருநாள் போவது, ஒரு யுகம் போவது போலிருக்கும்."[40]

அதேபோல, நரசிம்மர் குந்தவியிடம் மட்டும் மிகுந்த அன்புகாட்டி வந்தார். "தன்னுடைய பிராணனே குந்தவியாக உருக்கொண்டு வெளியில் நடமாடுகிறது எனக் கருதினார். அவருடைய விசாலமான இருதயமானது சில காரணத்தினால் பல ஆண்டு காலம் வறண்டு பசையற்றுப் பாலைவனமாயிருந்தது. அப்படிப்பட்ட இருதயத்தில் குந்தவியின் காரணமாக மீண்டும் அன்பு துளிர்த்து, ஆனந்தம் பொங்கத் தொடங்கியது. குந்தவியின் ஒவ்வொரு சொல்லும், செயலும், நோக்கும், சமிக்ஞையும், சக்கரவர்த்திக்குப் புளகாங்கிதம் உண்டாக்கியது."[41]

ஒருமுறை, தனது தந்தைக்குக் கப்பம் கட்ட மறுக்கும் சோழ இராஜகுமாரனைத்திட்டி, "அப்பா அந்த இராஜகுமாரனுக்கு என்ன அவ்வளவு அகந்தை? மாமல்ல சக்கரவர்த்தியின் கீழ் கப்பம் கட்டிக் கொண்டு வாழக் கொடுத்து வைக்க வேண்டாமா?"[42] என்று கூறித் தன் தந்தையின் பெருமையை எடுத்துரைக்கிறாள் குந்தவி.

பின்னர் அதே இராஜகுமாரனையே மகள் விரும்புவதை அறிந்த நரசிம்மப் பல்லவச் சக்கரவர்த்தி அவனுடன் திருமணம் செய்து வைக்கிறார்.

சிக்கவீர இராஜேந்திராவில், அனைவரையும் ஆட்டிப் படைக்கும் வீரராஜன், தனது மகளின் அருகில் சென்றால் சாந்தமாக மாறிவிடுகிறான். அவளைப் பெற்றதனாலோ என்னவோ, கௌரம்மாஜியிடம் சிறிது தாட்சண்யத்துடனேயே நடந்து கொள்வான்.

தனது தங்கையான தேவம்மாஜியைச் சிறையிலடைத்து வைத்திருந்தபோது, அவனின் மனைவியும், குடகின் இராணியுமான கௌரம்மாஜி தங்கையை அவளது கணவருடனேயே அனுப்பி விடுங்கள் என எவ்வளவோ போராடியும் விடுவதாக இல்லை. ஆனால் அவனது மகள் அவனது கழுத்தைக் கட்டுக்கொண்டு, "ஆமாம்

அப்பாஜி அனுப்பி விடுங்கள், என்றாள். எதற்கும் பணியாத வீரராஜன் தனது மகளின் இந்த அன்பிற்கு மயங்கிப் பணிந்தான். 'சரி அப்படியானால் போ, அனுப்பிவிடு போ"[43] என்றான்.

இவ்வாறு இரு புதினங்களிலும் கூறப்படும் தந்தைமார்கள் தனது மகள்கள் மீதும், மகள்கள் தமது தந்தையின் மீதும் மிகுந்த அன்பும், அக்கறையும் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர்.

**தாய் - மகன் உறவு**

மகன் தமிழகச் சூழலில் தந்தையின் சொத்துக்கு வாரிசாகவும், பெற்றோரை வயதான காலத்தில் காப்பாற்றும் கடமையுள்ளவனாகவும் கருதப்படுகிறான். முன்பு நாட்டைக் காக்கும் பொறுப்பும் அவனுக்குண்டு. இதனை, 'களிறு பெயர்ந்து எழுதல் காளைக்குக் கடனே' என்னும் வரியின் மூலம் அறியலாம்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்டதாய்"[44]

எனும் குறள் மூலம் தாய்-மகன் உறவு பற்றி வள்ளுவர் விளக்குகிறார்.

பார்த்திபன் கனவில், பார்த்திபன் இறந்த பிறகு அவருடைய மனைவி அருண்மொழி தேவி தன் மகன் விக்கிரமனையே உலகமாக நினைத்து வாழ்ந்து வருகிறாள். பல்லவச் சக்கரவர்த்தியினால் தன் மகன் நாடுகடத்தப்பட்டதும் மிகுந்த துக்கத்திற்கு ஆளாகி யாத்திரை மேற்கொள்கிறாள்.

யாத்திரையின் போது, "திருச்செங்காட்டாங்குடியில் மக்கள் கூட்டத்தின் மத்தியில் பரஞ்சோதி அடிகள், அருண்மொழிராணி ஆகியவர்கள் நீராடுவதற்காகச் சமுத்திரத்தில் இறங்கிச் சென்றபோது, இராணி கண்களை மூடிக்கொண்டு கிழக்குத் திசையை நோக்கித் தியானத்தில் ஆழ்ந்திருந்தாள். திடீரென அவள் மூடியிருந்த கண்களைத் திறந்து "குழந்தாய், விக்கிரமா! இதோ வந்து விட்டேன்!"[45] என்று கூவி, மறுகணத்தில் கிழக்கு நோக்கிக் கடலிலே பாய்ந்தாள். இதன் மூலம் தன் மகன் கடல்கடந்து இருப்பதை அவளது உள்ள உணர்வு கூறியதாகக் காட்டப்படுகிறது.

சிவனடியார் அருண்மொழி தேவியிடம் தன் மகனின் பெருமையைப் பற்றி எடுத்துக் கூறும்போது, "பல்லவ சாம்ராஜ்யத்திற்குள் அடங்கிக் கப்பம் கட்டிக் கொண்டு வருவதாயிருந்தால், உன் துரோகத்தை மன்னித்துச் சோழ நாட்டுக்கும் பட்டங்கட்டுகிறேன்,"[46] என்ற சக்கரவர்த்தியிடம், விக்கிரமன், "நீர் வீரன் என்பது உண்மையானால் என்னுடன் வாட்போர் செய்ய வாரும், என்னை வெற்றிபெற்றுவிட்டுப் பிறகு கப்பம் கேளும்"[47] என்றான். இதைக் கேட்ட அருண்மொழிக்குத் தன் மகனின்பால் மிகுந்த அன்பும், பெருமையும், மதிப்பும் உண்டாயிற்று.

சிக்கவீர இராஜேந்திராவில், லிங்கராஜனின் ஆசை நாயகியாக இருந்த பாப்பா ஒரு மகனை ஈன்றெடுக்கிறாள். அதனை ஏற்காத லிங்கராஜன் அவளை நாட்டைவிட்டு வெளியேற்றுகிறான். முப்பது வருடங்கழித்து பாப்பா தன் மகனைக் காண 'பகவதி' என்ற பெயருடன் மலையாள மந்திரவாதியாகத் திரும்பி வருகிறாள். 'பசவன்' தான் தன் மகன் என்பதை அறிந்து கொண்டதும், நாட்டை ஆளவேண்டிய தம் மகன் லிங்கராஜனின் இன்னொரு மனைவியின் மகனான வீரராஜனுக்கு வேலைக்காரன் போல் இருப்பதை அறிந்து மிகவும் துயரப்படுகிறாள். பின் வெகுண்டெழுந்த பகவதி ஆங்கிலேயரின் உதவியுடன் தன் மகனை அரியணையில் ஏற்ற முயற்சிக்கிறாள். அதற்குள் பசவன் வீரராஜனால் துப்பாக்கியால் சுடப்பட்டு இறக்கிறான். இதனைக் கேட்டப் பகவதி "இந்தக் கோலத்தில் காணத்தான் இத்தனை வருடம் கழித்து வந்தேனா?"[48] எனக் கதறி அழுதாள். பின்னர் மீண்டும் நாட்டை விட்டு வெளியேறிவிட்டாள். இவ்வாறு தாய்-மகன் உறவுமுறை கூறப்படுகிறது. இரு புதினங்களிலும் கூறப்படும் தாய்மார்கள் தம் மகனே நாட்டைச் சுதந்திரமாக ஆள வேண்டும் என எண்ணிப் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகின்றனர்.

**தாய் -மகள் உறவு**

ஒரு தாய் தன் மகளுக்கு ஒரு சிறந்த தாயாக மட்டுமின்றி கண்டிப்புடன் கூடிய உற்றத் தோழியாகவும் இருக்க வேண்டும்.

பார்த்திபன் கனவில், நரசிம்ம பல்லவரின் மகள் குந்தவி தாயில்லாப் பெண். அவளுடைய அன்னை வானமாதேவி குந்தவி ஏழு வயதுக் குழந்தையாக இருக்கும் போதே இறந்துவிட்டாள்.

இந்தத் துக்கத்தை அவள் அறியாத வண்ணம் சில காலம் 'சிவகாமி அம்மை' அவளைச் செல்லமாய் வளர்த்துவந்தாள். இந்தச் சிவகாமிதேவி புகழ்பெற்ற ஆயனச் சிற்பியின் மகள். இவளும் சிறிது காலத்தில் இறந்துவிட்டாள். எனவே இதில், தாய்-மகளுக்கான உறவு ஆழமானதாகக் கூறப்படவில்லை.

சிக்கவீர இராஜேந்திராவில் இராணி கௌரம்மாஜி தனது மகளின்பால் மிகுந்த அன்பு கொண்டவளாகக் காணப்படுகிறாள். தனது மகளின் எண்ணத்தை அறிந்து அதனை நிறைவேற்றுவதில் மிகுந்த மகிழ்ச்சி அடைவாள்.

ஒருமுறை வீரராஜன் தனது தங்கை தேவம்மாஜியைச் சிறையிட்டபோது, அவள் உணவருந்தாமல் மிகவும் துயருற்றுக் காணப்பட்டாள். இதைக் கண்ட இராஜகுமாரி, தன் தாயிடம், "அம்மா, இன்றைக்கு அத்தையவர்களை ஊருக்கு அனுப்பிவிடுங்கள், இல்லாவிட்டால் நான் சாப்பிடப் போவதில்லை"[49] என்றாள். இதனைக் கேட்ட கௌரம்மாஜி அவளது அத்தையை அவளது கணவருடன் அனுப்ப பல்வேறு முயற்சிகளைச் செய்கிறாள். தனது மகளின் துணையுடன் மன்னரிடம் பேசி அவளது அத்தையை ஊருக்கு அனுப்பி வைக்கின்றனர் தாயும் மகளும்.

கௌரம்மாஜி தனது மகளின் மனம் அறிந்து தனது பெரியப்பாவின் மகன் உத்தய்யனை அவளுக்குத் திருமணம் செய்து வைக்கப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்கிறாள். தாய்-மகள் உறவு என்பது பார்த்திபன் கனவில் விரிவாகக் கூறப்படவில்லை. சிக்கவீர இராஜேந்திராவில் சிறப்பான முறையினில் கூறப்பட்டுள்ளது.

**கணவன் - மனைவி உறவு**

*ஆணும் பெண்ணும் பல்லோர்அறியத் திருமணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்துவது இல்லறமாகும். இதனைத் தொல்காப்பியர்,*

*"மறைவெளிப்படுதலும் தமரிற் பெறுதலும்*
*இவை முதலாகிய இயல்நெறி திரியாது"*[50]

*என்று கூறுகின்றார். பிற்காலத்தில் அகப்பொருள் விளக்கத்தில் நாற்கவிராச நம்பி இல்வாழ்க்கை முறையினை,*

*"கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி*
*பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியெனக்*
*கீங்கு நால்வகைத் தில்வாழ்க்கை"*[51]

*என விளக்குகிறார். அன்பை இல்வாழ்க்கையின் பண்பாகவும், அறத்தை அதன் பயனாகவும் கூறும் வள்ளுவரின் வாய்மொழி கொண்டும் இதனை உணரலாம்.*

*அன்பு வற்றிப் போகும் இடத்தில், மனித வாழ்வு வெறுமையாகின்றது. அது இருக்குமிடத்தில் துன்பமோ, வறுமையோ இருப்பதில்லை.*

*"ஒற்றன் கூறாடை, உடுப்பரேயாயினும்*
*ஒன்றினர் வாழ்க்கையே வாழ்க்கை"*[52]

*என்று கூறும் மகிழ்ச்சி உடையதாய் அன்பு நெறியில் வாழ்ந்த வாழ்க்கைப் புலப்படுகிறது.*

*கணவனும் மனைவியும் குடும்பத்தின் தலைமக்கள். அவர்கள் தெளிவாகவும், புரிதலோடும், சமூக நடைமுறைகளை அறிந்துகொண்டு வாழவேண்டும். 'கணவனே கண்கண்ட தெய்வம்,' 'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்' என்ற பழமொழிகள் கணவனோடு மனைவி வாழும் முறைகளையும், மனைவியானவள் கணவனையே உறுதுணையாக நினைத்து வாழவேண்டும் என்பதையும் உணர்த்துகின்றன.*

*'மண்ணானாலும் மனைவி,' 'புல்லானாலும் பொண்டாட்டி' என்ற பழமொழிகள் மனைவியின் பெருமைகளை உணர்த்துகின்றன.*

கல்கியின் புதினத்தில், பார்த்திபன் - அருண்மொழி ஒருவரையொருவர் மிகுந்த அன்பு கொண்ட கணவன் - மனைவியாகத் திகழ்கின்றனர்.

“பௌர்ணமி இரவுகளில் ஒரு பளிங்குக் கல்லின் மீது அமர்ந்து பார்த்திபனும், அருண்மொழியும் நேரம் போவதே தெரியாமல் உரையாடுவர். அந்த நாளில் பார்த்திபன் சில வேளை புல்லாங்குழல் இசைப்பான். அருண்மெழி மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டு, கண்ண பெருமானே பார்த்திபனாக உருக்கொண்டு வந்து மணம் புரிந்ததாக எண்ணிப் பூரிப்படைவாள்.”[53]

விக்கிரமன் பிறந்தபோது, இன்ப வாழ்க்கையின் சிகரத்தை அவர்கள் அடைந்தார்கள். அதே உத்தியான வனத்தில் அதே பளிங்குக் கல்லின் மீது குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சி மகிழ்ந்தனர்.

போருக்குச் செல்லும்முன் பார்த்திபன் அருண்மொழியிடம், “ஒரு பெட்டியிலிருந்து வீரவாளினையும், ஓர் ஓலைச் சுவடியையும் கொடுத்து, எப்போது தன்மகன் ஒரு சுதந்திரமான நாட்டிற்குத் தலைவனாகிறானோ அப்போது இதை அவனிடம் கொடுத்து, இவை சோழநாட்டின் புரதான கருவூலங்கள், இவற்றின்படி நீ நடக்க வேண்டும் எனக் கூறு.

மேலும், நமது முன்னோர்களான ‘கரிகால் வளவன்,’ ‘நெடுமுடிக்கிள்ளி’ இவர்களைப் போல் வீரமகனாய் விக்கிரமனை வளர்க்க வேண்டும்”[54] என உறுதிகேட்டபின், தனது கணவர் இறந்தவுடன், தனக்கும் இந்த உலகத்தில் இடமில்லை. தானும் இறந்துவிட வேண்டும் என எண்ணிய அருண்மொழி அதைவிடுத்துக் கணவனின் உறுதியை நிறைவேற்றுவதாகக் கூறினாள். இதன் மூலம் அவர்களுக்கு இடையேயான அன்பும், அன்யோன்யமும் திறம்பட விளங்கி நிற்கின்றன.

மாஸ்தியின் புதினத்தில், வீரராஜன் பல்வேறு கெட்ட பழக்கவழக்கங்களைப் பெற்றுள்ளதைக் கௌரம்மாஜி திருமணத்திற்குப்

பின் கண்டு அதிர்ச்சியுறுகின்றாள். "இரவில் நேரங்கழித்து வருவதற்கும், வீட்டிற்கு வந்ததும் குடிபோதையில், நினைவிழந்து நடப்பதற்கும், தன் நடத்தையை ஏற்காத மனைவியைத் திட்டுவதற்கும், அடிப்பதற்கும் அவனுக்கு வெகுநாட்கள் ஆகவில்லை."[55]

கௌரம்மாஜி துணிவோடு கெட்டிக்காரத்தனமும் உடையவள். கணவனை அவன் செல்லும் தவறான வழியிலிருந்து திருத்திக் காப்பாற்ற வேண்டும் என உறுதிபூண்டாள். தன் கணவனால் எவ்வளவு இன்னல்களுக்கு ஆளானாலும், ஒருபோதும் அவனை விட்டுக்கொடுக்க மாட்டாள் கௌரம்மாஜி.

சாதகத்தில் தன் கணவருக்கு ஆபத்திருப்பதை அறிந்ததும், தீட்சிதரை அழைத்துப் பரிகாரங்கள் செய்கிறாள். நன்முறையில் வீரராஜன் ஆட்சி செய்யவில்லை என ஆங்கிலேயர்களால் விலக்கப்பட்டு, கௌரம்மாஜியிடம் பட்டத்தில் அமரும்படிக் கேட்டுக்கொண்டதற்கு அவள் 'ஒருபோதும் என் கணவருக்கு எதிராக இருக்கமாட்டேன்' எனக் கூறி மறுக்கிறாள்.

வீரராஜனை ஆங்கிலேயர்கள் பதவியைப் பறித்து அவனை வேலூருக்கு அனுப்பிவைக்கின்றபோது, கௌரம்மாஜியிடம், நீங்களும் உங்கள் மகளும் இங்கே அரண்மனையிலேயே இருக்கலாம் எனக் கூற, அவள் சம்மதிக்காமல், 'தன் கணவன் இருக்குமிடமே தனக்குச் சொர்க்கம் எனக்' கூறி தானும் அவனுடன் வேலூருக்குச் செல்கிறாள். பல்வேறு யாத்திரைகளை மேற்கொண்டு இறுதிவரைத் தன் கணவனுடனேயே இருந்து உயிரைத் துறக்கிறாள்.

இவ்வாறு இரு புதினங்களிலும் கணவன் மனைவி உறவு வெளிப்படுகின்றது. பார்த்திபன் கனவில், தன் கணவனின் ஆசையை நிறைவேற்றும் மனைவியாக அருண்மொழியும், சிக்கவீர இராஜேந்திராவில், தன் கணவன் கெட்டவனாகவே இருந்தாலும், அவனைப் பெருமையடையச் செய்யும் மனைவியாக கௌரம்மாஜியும் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளனர்.

**சாதி**

தொல்காப்பியர் 'நீர்வாழ் சாதியும் அவற்றுள் உள' என்பதால் அவர் காலத்தில் சாதி அஃறிணையைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஆரியர் வருகைக்குப்பின் மனிதர்களைப் பிரித்தரிய சாதி உருவாக்கப்பட்டுள்ளது. இன்று சமூகத்தில் நிலவும் பல பிரச்சினைகளில் தலையானது சாதியக் கொடுமை. தொழில் அளவில் ஏற்பட்ட சாதி நாளடைவில் மேல்சாதி, கீழ்சாதி எனப் பிரிந்தது.

மக்களின் பிறப்பு நிலையை வைத்து அவர்களைப் பாகுபாடு செய்தது இடைக்காலத்தில்தான். 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்று பாரதி கூறிய அடிகள் ஏட்டளவில் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. இது ஒவ்வொருவரின் உள்ளத்திலும் எழுதப்படவேண்டும். 'ஆயிரம் உண்டிங்கு சாதி' என்றும் கூறியுள்ளார்.

திருமூலரின் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற அடி காற்றில் பறக்கவிடப்பட்டது. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்,

"இருட்டறையில் உள்ளதடா உலகம் ; சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே"[56]

என்று குறிப்பிடுகிறார்.

"துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நாண் கல்லது குடியுமில்லை"[57]

என்று புறநானூற்றுப் பாடலடிகளில் மாங்குடிக் கிழார் நான்கு வகைக் குடிகளைப் பற்றிப் பாடியுள்ளார்.

தொழில்களின் அடிப்படையில் பிரிந்த இந்தப் பாகுபாடு, பின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளினால் விதைக்கப்பட்டு இன்று ஆணிவேர்களாகச் சாதிகள் மண்ணில் அடித்தட்டு வரைப் பரவிக்கிடக்கின்றன. இதனை க.மோகன் கூறும் பொழுது, "வேர்களை வளரவிட்டுவிட்டு அதன் கிளைகளை மட்டும் வெட்டுகின்ற வேலைகளைச் செய்து கொண்டிருக்கிறோம். மேலோட்டமாகப் பார்க்கும் பொழுது தரம்பிரித்து வைக்கப்பட்டிருப்பதுபோல் தோன்றினாலும், முன்னர் இவைகள் ஒழுங்கான வடிவத்துடன்

அவரவர்க்குரியப் பணிகளைச் செய்வதற்காகப் பிரிக்கப்பட்டாலும், சமுதாயம் வளரவளர அதனுள்ளே ஆழமான பிரிவினைகள், வேற்றுமைகள், ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டுவிட்டன. கிரீடம் செய்கிறவன் மதிப்புடையவனாகவும், காலணி செய்பவன் அவமதிப்புடையவனாகவும், காணப்படுகிறான். நாய்கள் கூட தெருக்களில் நுழையலாம். தீண்டத்தகாதவர்கள் தெருக்களில்கூட நடமாட முடியவில்லை. கடும் வெயிலில் செருப்பணிந்து செல்வதும் தடை செய்யப்பட்டது. தாங்கள் உயர்ந்த சாதியினர் என்று சொல்லிக் கொள்பவர்களைக் கண்டால் தோளின் துண்டை இடுப்பில் கட்டிக்கொண்டு கூனிக் குறுகி நடக்கவேண்டும் என்ற எழுதப்படாத சட்டங்கள் இருந்த நிலை. சாதிகள் வளர்வதற்குச் சமய நம்பிக்கைகளும் யாகம் வளர்த்தன"[58] என்று கூறுகின்றார்.

பாரதியார் தமிழிலக்கியத்தில் நவயுகத்தில் தேவைகளுக்கு முதல் குரல் கொடுத்தவர்,

"ஏழையென்றும் அடிமையென்றும்
எவருமில்லை ஜாதியில்
இழிவு கொண்ட மனித ரென்பர்
இந்தியாவில் இல்லையே"[59]

என்று கூறியிருப்பதினால் சாதியில் இழிவான அடிமைகள் இந்தியாவில் வாழ்ந்தனர் என்பதையும், அவர்களும் விடுதலை பெறவேண்டுமென்ற வேட்கையை,

"பறையருக்கும் இங்கு தீயர்
புலையருக்கும் விடுதலை"[60]

என்ற 'சுதந்திரப்பள்ளு' பாடல் வரிகளிலும் அறியமுடிகின்றது. பாரதிதாசனும், "தாழ்ந்தவன் என்றொரு சாதி உரைப்பவன் தீயன். அவன் தன்னுடலைப் பிறர் சொத்தில் வளர்ந்திடும் பேயன்"[61] என்று 'சுயமரியாதை' என்னும் கவிதையில் பாடியுள்ளார்.

இத்தகைய சாதி பற்றிய செய்திகளைக் கல்கி, மாஸ்தி ஆகிய இருவர்தம் புதினங்களிலும் காணமுடிகின்றது. கல்கியின் புதினத்தில், பார்த்திபன் வரைந்த சித்திரங்களைப் பார்த்த விக்கிரமன், "அப்பா!

எதற்காக உங்கள் வித்தையை நீங்கள் இவ்விதம் ஒளித்து வைத்திருக்க வேண்டும்! இந்த ஆச்சரியமான சித்திரங்களைப் பற்றி நீங்கள் வெட்கப்பட வேண்டிய அவசியம் என்ன?"[62] என்று ஆத்திரமாய்ப் பேசினான். அப்போது, மகாராஜா பின்வருமாறு கூறினார்.

"விக்கிரமா! இந்தக் உலகத்தில் எவன் அதிகாரமும், சக்தியும் பெற்றிருக்கிறானோ, அவனிடம் உள்ள வித்தையைத்தான் உலகம் ஒப்புக்கொண்டு பாராட்டும் காஞ்சியில் மகேந்திர சக்கரவர்த்திக்கு ஒரு தடவை பெரிய சபைகூடி 'சித்திரக்காரப்புலி' என அவருக்குப் பட்டம் அளித்தார்கள்.

இப்போதுள்ள நரசிம்ம சக்கரவர்த்திக்கும் இது மாதிரி எத்தனையோ பட்டப்பெயர்கள் உண்டு. சித்திரக் கலையில் சிங்கம்! காண வித்தையில் நாரதர்! சிற்பத்தில் விசுவகர்மா! உலகம் இப்படியெல்லாம் அவரைப் போற்றுகிறது. ஏன்? அவரிடம் பெரிய படை இருப்பதினால். ஆனால், குழந்தாய்! இறைவனுக்கு ஏழை, செல்வன் என்ற வித்தியாசம் இல்லை. இறைவனுக்குச் சக்கரவர்த்தியும் ஒன்றுதான், செருப்புத் தைக்கும் சக்கிலியனும் ஒன்றுதான்"[63] எனக் கூறுகிறார். இது ஒரு சாதியைக் குறிப்பதாகும்.

மாஸ்தியின் புதினத்தில், சிக்கவீர இராஜேந்திரன் அரியணையில் ஏறியதும், தன் நண்பனான பசவனைத் தனக்கு மந்திரியாக்கிக் கொண்டான். இதனை, போப்பண்ணா, லட்சுமிநாராயணய்யா, பொன்னப்பா போன்ற மந்திரிமார்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

ஒருநாள் சபையில் புதிதாக ஓர் ஆசனம் போடப்பட்டிருந்ததைக் கண்ட போபண்ணா, இது யாருடையது என ஒரு சிப்பந்தியை அழைத்துக்கேட்க, அவன் இது பசவனுடையது என்று கூற, உடனே கோபம் கொண்ட போபண்ணா இதனை அப்புறப்படுத்துமாறு சிப்பந்தியிடம் கூறினார். இதனையறிந்த வீரராஜன், போபண்ணா, லட்சுமிநாராயணய்யாவை அழைத்து ஏன் ஆசனத்தை அகற்றச் சொல்கிறீர்கள் எனக் கேட்டான். அதற்குப் போபண்ணா "நாவிதன்

ஒருவன் நமக்கு அருகில் உட்காருவதற்கு நாட்டின் குடகன் ஒருவன் கூட ஒப்ப மாட்டான்"[64] என்றார்.

மன்னருடன் பேசிமுடித்துவிட்டு மந்திரிகள் வெளியில் வந்தபொழுது, பசவன் இவர்களிடம் வந்து, "என்ன போபண்ணா அவர்களே, என்னை நாவிதனாகி விட்டீர்கள்" என்று இடக்காகக் கேட்டான். போபண்ணாவும் இடக்காகவே, "டேய் நொண்டி, நீ யார் என்பதையே மறந்து சும்மா படியேறிக் கொண்டே இருக்கிறாய். படிகளுக்கு மேலே மாடி இல்லை. ஜாக்கிரதை, நீ 'அம்பட்டன்' இல்லையா? உன் தாய் 'அம்பட்டச்சி' நீ வேறு என்னவாக முடியும்?"[65] என்றார்.

அதேபோல பசவன் லிங்கராஜனின் மகன் என்பதையறிந்த இராணி கௌரம்மாஜி, அதனை முன்னமே தெரிந்திருந்த தொட்டவ்வாவிடம், இதனைப் பற்றி ஏன் கூறவில்லை எனக் கேட்க, தொட்டவ்வா, "லிங்கராஜன் ஆணையிட்டாரம்மா யாரிடமும் கூறக் கூடாது என்று"[66] எனக் கூறினாள். உடனே இராணி, "உன் ஆணை இருக்கட்டும் ஒரு அரசகுமாரன் நாற்பது வருடங்கள் நாவிதனாக வாழ்ந்தாயிற்றே"[67] எனக் கூறி வேதனையடைந்தாள். இவற்றின் வழி இரண்டு புதினங்களிலும் அக்காலச் சாதிப் பாகுபாடு சுட்டப்பட்டிருப்பதை அறியமுடிகிறது.

**சமயம்**

தன் சமயத்தை நம்புபவர்களைப் பக்குவப்படுத்துவது சமயம். சமை என்ற அடிச்சொல்லிலிருந்து பிறந்தது சமயம். இதற்கு 'மதம்' எனவும் பொருள் உண்டு. அருணகிரிநாதர் 'அரிய சமயம் ஒரு கோடி' என்பர். "சமயம் ஒரு வாழ்வியல் கலை. அது வாழ்வாங்கு வாழக் கற்றுத் தருகிறது. சமயம் நம்பிக்கையின் பாற்பட்டது. நல்லறிவின் பாற்பட்டது. சமயம் உயிரியல், அறிவியல், நம்முடைய சமயநெறி அச்சத்தின்பாற்பட்டது அன்று! அன்பு வழிப்பட்டது. அறிவு வழிப்பட்டது. வழிபடுதல் என்ற சொல் வழிப்படுதல் என்று பொருள்படும். அதாவது கடவுள் நெறி நிற்றல் என்பதாகும். கடவுள் வழிபாட்டில் இறைவனை எண்ணுதல், சிந்தித்தல் என்பதே முக்கியமானது"[68] என்பர்.

"சமயம் மனித வாழ்வின் ஆதாரமாகும். மனிதனின் ஒவ்வொரு செய்கையையும், நடத்தையையும் சமயம் தாக்குகிறது. சமயம் மனித வாழ்விற்குக் காரணமாகிறது. மனித வாழ்வின் ஆதாரத்தைப் பற்றி எப்படிப்பட்ட விளக்கமோ, அர்த்தமோ கொடுத்தாலும், எப்போதெல்லாம் சமயம் என்ற ஒன்று உள்ளது என்று ஒப்புக் கொள்கிறோமோ, 'உலக சாந்தி'யை அமைக்க சமயம் காரணமாகிறது என்ற உண்மையை ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியாது. 'உலக சாந்தி' என்றால் எல்லா மனித இனத்தினரிடையேயும் நிலவும் அமைதி என்று பொருள்படும்"[69] என ரவீந்திரகுமார் அவர்கள் சமயம் பற்றி கூறியிருக்கிறார்.

"பிறர் உன்னிடம் எப்படி நடந்து கொள்ளக் கூடாது என்று எதிர்பார்க்கிறாயோ அதே போன்று நீயும் அவர்களிடம் அப்படி நடந்துகொள்ளாதே. உன்னுடைய அமைதிக்குப் பங்கம் வரக்கூடாது என்றால் பிறருடைய அமைதியைக் கெடுக்காதே"[70] எனச் சமாதான அறிவுரை மூலமும் சமயத்தின் சாராம்சத்தை விளக்குகிறார். சமூகத்தில் காணப்படும் சமயம் பற்றிய செய்திகளை இரு புதினங்களும் எடுத்துரைக்கின்றன.

கல்கி சைவ சமயத்தவரான ஞானசம்பந்தர், அப்பர், சிறுத்தொண்டர் ஆகியவர்களைப் பற்றித் தம் புதினத்தில் சுட்டியிருக்கின்றார்.

பல்லவ சக்கரவர்த்தி தன் மகள் குந்தவியிடம் "சோழ நாட்டில் காழி என்னும் ஊரில் ஓர் இளம்பிள்ளை தெய்வ சந்நித்யம் பெற்று, மகாஞானியாய் விளங்குகிறாராம். சிவபெருமான் பேரில் தீந்தமிழ்ப் பாடல்களைத் தேனிசையாய்ப் பொழிகிறாராம். தீராத வியாதிகள் எல்லாம் அவர் கையினால் திருநீறு வாங்கி இட்டுக்கொண்டால் தீர்ந்துவிடுகிறதாம் ஞானசம்பந்தர் என்று பெயராம்"[71] என்று கூறுகின்றார்.

*குந்தவி சிவனடியாரைப் பற்றி விசாரிப்பதற்காக, முதிர்ந்த, கனிந்த சைவப் பழமாக விளங்கிய அப்பர் சுவாமிகளைக் காணச் செல்கிறாள். அவளை வரவேற்ற அப்பர் சுவாமிகளிடம் குந்தவி, "சுவாமி! இவ்வளவு தள்ளாத வயதிலும் எதற்காகத் தாங்கள் பிரயாணம் செய்ய வேண்டும்? தாங்கள் தரிசிக்காத ஸ்தலமும் இருக்கிறதா? எங்கே போயிருந்தீர்கள்?"*[72] *என்று கேட்டாள்.*

*அதற்கு அப்பர், "குழந்தாய்! தில்லைபதிவரையிலேதான் போயிருந்தேன். பொன்னம்பலத்தில் ஆடும் பெருமானை எத்தனை தடவை தரிசித்தால்தான் என்ன? இன்னுமொருமுறை கண்ணாரக் கண்டு இன்புற வேண்டுமென்ற ஆசை உண்டாகத் தான் செய்கிறது. ஆகா! அந்த ஆனந்த நடனத்தின் அற்புதத்தைத்தான் என்னவென்று வர்ணிப்பேன்! அந்த பேரானந்தத்தை அனுபவிப்பதற்காக மீண்டும் மீண்டும் மனிதப் பிறவி எடுக்கலாம்!"*[73] *என்று கூறிவிட்டு, பாதி மூடிய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, பின்வரும் பாசுரத்தைப் பாடினார்.*

*"குனித்த புருவமும், கொவ்வைச் செவ்*
*வாயில் குமிண் சிரிப்பும்*
*பனித்த சடையும் பவளம் போல்*
*மேனியில் பால் வெண்ணீறும்*
*இனித்த முடைய எடுத்த பொற்*
*பாதமும் காணப் பெற்றால்*
*மனித்தப் பிறவியும் வேண்டுவதே*
*இந்த மாநிலத்தே!"*[74]

*பாட்டு முடிந்தது. அப்பர் சுவாமிகள் சற்றுநேரம் மெய்ம்மறந்து பரவச நிலையில் இருந்தார். இவ்வாறு அப்பர் சுவாமிகள் பற்றியச் செய்திகள் கூறப்படுகின்றன.*

*சிறுத்தொண்டர் பற்றிக் கூறும்போது, பல்லவ சக்கரவர்த்தியின் பழைய சேனாதிபதியான 'பரஞ்சோதி' தான் ஒரு சிவபக்தராக மாறித் தன்னைச் சிறுத்தொண்டர் எனப் பெயர் மாற்றிக்கொண்டார். நீண்ட*

நாட்களுக்குப் பிறகு சக்கரவர்த்தியைக் காணவந்த சிறுத்தொண்டர், கபால பைரவரிடம் சிக்கிக் கொண்டிருந்த விக்கிரமனையும், சிவனடியாரையும் காப்பதற்காகச் சென்றபோது, அவரைப் பார்த்த கபால பைரவன் பீதியடைந்து கீழே விழுந்தான்.

சிறுத்தொண்டர் கம்பீரமான குரலில், காடு, மழையெல்லாம் எதிரொலிக்கச் செய்யுமாறு பேசினார். "கேளுங்கள்! நாம் பிறந்த இந்தத் தமிழகமானது மகா புண்ணியம் செய்த நாடு. எத்தனையோ மகா புருஷர்கள் இந்நாட்டிலே தோன்றி மெய்க் கடவுளின் இயல்பையும், அவரை அடையும் மார்க்கத்தையும் நமக்கு உபதேசித்திருக்கிறார்கள்"[75] என்கிறார்.

திருமூல மகரிஷி, "அன்பும் சிவனும் இரண்டென்பர் அறிவலார்"[76] என்று அருளியிருக்கிறார். வைஷ்ணவப் பெரியார்,

"அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர் விளக்கேற்றினேன்"[77]

என்று திருவாய் மலர்ந்திருக்கிறார் எனக் கூறி சிவபெருமான் கையில் மண்டை ஓட்டை வைத்திருப்பதாகவும், பராசக்தி கபால மாலையைத்தரிப்பதாகவும் புராணங்களில் சொல்லியிருப்பதெல்லாம் தத்வார்த்தங்கள் கொண்டவை என்பதை நமது பெரியோர்கள் நமக்கு உணர்த்தியிருக்கிறார்கள். அவ்வாறு இருக்க இப்புண்ணிய நாட்டில் நரபலி என்னும் கொடிய வழக்கம் பரவுவதற்குக் காரணம் என்ன? என்று, நரபலி எனும் குற்றம் பற்றியச் செய்திகளை எடுத்துரைக்கிறார்.

சிக்கவீர இராஜேந்திராவில், மாஸ்தி, பகவதி அம்மன் பற்றியும், அவளின் பூசை முறைகள் பற்றியும் எடுத்துரைக்கின்றார். வீரராஜன் அளவிற்கு அதிகமாக மது அருந்தியதினால், அவன் நினைவிழந்ததுடன், அவன் உடம்பில் சக்தியே இல்லாமல்போக, அவன் குணமடைய பூசைகள் செய்ய வேண்டுமென்றும், "பகவதி ஒருத்தி சமீபத்தில் இங்கே வந்திருக்கிறாள். மலையடிவாரத்தில் ஆற்றுக்கருகே கோவில் கட்டிக் கொண்டு அங்கேயே இருப்பதாகச் சொல்கிறார்கள். அவளை

அழைத்துக் காண்பிப்பது நல்லது"[78] என்றும் கௌரம்மாஜி எண்ணுகிறாள்.

இதனைத் தீட்சிதரிடம் கூற, அவர் "அழைத்துவரச் சொல்லலாம். ஆனால், அழைத்துவந்த பிறகு சாமி விசயத்தில் எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டும். ஏதாவது தவறு நடந்துவிட்டால் மிகவும் கெடுதல் என்றார்."[79]

அதற்கு இராணி, "எல்லாமே தெய்வீக சக்திதான். இங்கே ஓங்காரேஸ்வரன். அங்கே காளி, இது வேறு அது வேறெயா? தெய்வம் இங்கே மலர்ந்த முகத்தோடும், அங்கே உக்கிரரூபத்தோடும் இருக்கிறது. இங்கே நாம் நயத்தோடு பூசிக்கிறோம். அங்கே உபாசகர்கள் லோகமாதாவைப் பிடிவாதத்துடன் பூசிக்கிறார்கள். இங்கே பகவானின் கிருபை மெதுவாகக் கிட்டுகிறது. உடலுக்குப் பிரயாசை இல்லாதவாறு குணம் ஏற்படுகிறது. அங்கே அதன் வேகம் அதிகம். அதன் பலனும் தீவிரமானது. முக்கியமாக அபசாரம் ஏற்படாமல் சொல்வதானால் ஈஸ்வரனின் பிரசாதம் சாவகாசமாகக் கிடைக்க வேண்டிய வஸ்து, பகவதியின் பிரசாதம் தீவிரம். பகவதி என்பது மகாக்காளி இவள் தேவியை உபாசிப்பவள்"[80] எனக் கூறுகின்றாள்.

வீரராஜனால் விருந்துக்கு அழைக்கப்பட்ட ஆங்கிலேயர்களுக்குப் பல்வேறு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில், ஒருநாள் மதம் பற்றிய உரையாடல் நிகழ்ந்தது. அதில் ஆங்கிலேயர்கள் தம் மதமே உயர்ந்தது எனக் கூறும்போது, பகவதி இரண்டு மதமுமே உயர்வானதுதான் எனக் கூறுகின்றாள்.

உடனே அவர்கள், "அது எப்படி இரண்டு மதமும் சரியானவையாக இருக்க முடியும், முடியாது. இது சரி என்றால் அது தவறு. அது சரி என்றால் இது தவறு"[81] என்றதும், பகவதி, "மதம் சரியா தவறா என்பதைத் தத்துவவாதிகள் ஆராயவேண்டும். நன்னடத்தையைக் கற்பிக்கும் மதம் சரியான மதம். சத்தியவேந்தனாக இருக்க வேண்டும். மரியாதையுடன் நடந்துகொள்ள வேண்டும். இதைச் சொல்லுகிற மதம் நல்ல மதம். எங்கள் மதம் எங்கள் மக்களுக்கு இதைப் போதிக்கிறது.

உங்கள் மதமும் உங்களுக்கு இதைத்தான் போதிக்க வேண்டும். அப்படியிருக்க இந்த மதம் உயர்வு, அந்த மதம் குறைவு என்று சொல்வது சரியல்ல"[82] என்று கூறுகின்றாள். இவ்வாறு 'சமயம்' பற்றியச் செய்திகள் இருப் புதினங்களிலும் இடம்பெற்றுள்ளன.

**அரசியல் நிலை**

வரலாற்றுப் புதினங்கள் முக்கியமாகப் பிரதிபலிப்பது அரச பரம்பரையையும், அவர்களின் அரசியல் நிலையையும்தான். "கல்கியின் வரலாற்றுப் புதினங்களில் மக்களின் சமுதாய வரலாறு பெரிதும் தவறாக உள்ளது. ஆனால், அரசியல் வரலாற்றைத்தான் காணமுடிகின்றது"[83] என்ற தெ.பொ.மீனாட்சி சுந்தரனாரின் கருத்து மாஸ்தியின் புதினத்திற்கும் பொருந்துவதாக உள்ளது. மக்கள் சமுதாயத்தில் இருக்கும் குறைகள், நிறைகள் அவர்தம் வாழ்க்கை நிலை என்ற எதையும் இவ்விருவர் தம் வரலாற்றுப் புதினங்களில் காணமுடியவில்லை. பெரும்பாலும் அரசக் குடும்பத்தினரையும், அவர்தம் அரசியல் நிலையையும் தான் மிகுதியாக எழுதியுள்ளனர்.

மாஸ்தி தம் புதினத்திற்குரியவர்களாகப் பெரும்பான்மையும் மன்னர், மந்திரி என்பவர்களையே கொண்டுள்ளார். கல்கி அந்நிலையிலிருந்து மாறி, ஓடக்காரப் பொன்னன், குடும்பத்தையும், ஆயனச் சிற்பியின் குடும்பத்தையும் தம் புதினத்தில் இன்றியமையாச் சிறப்புடன் படைத்துள்ளார். எனினும் அத்தகைய மக்களின் சமுதாய வாழ்க்கைச் சித்திரிக்கப்படவில்லை. மாறாக, அவர்களும் அரசக் குடும்பத்திற்குத் துணைபுரியும் நிலையில் செயல்பட்டிருக்கின்றனர்.

முடிமன்னரைச் சுற்றிப் பின்னப்பட்ட இவ்விருவர்தம் புதினங்களிலும் அரசியல் முறையமைப்பில் பெரும் ஒப்புமையைக் காணமுடிகின்றது. அரச உரிமையையும், மந்திரியின் செயல்திறமையையும், அரசியலுக்குப் பயன்பட்ட சுரங்க வழியையும், குற்றவாளிகள் பெற்றத் தண்டனைகளையும் தத்தம் இயல்பிற்கு ஏற்பச் சுருக்கமாகவும், மிகுதியாகவும் அமைத்திருக்கும் போக்கினைக் காணமுடிகின்றது.

**இளவரசர்**

ஒவ்வொரு மன்னனும் தான் ஆட்சியிலிருக்கும் போது தன் மகனுக்கு இளவரசு பட்டம் கட்டுவார். இது தனக்குப் பின் தன் மகன் அரசாள வேண்டும் என்பதைக் குறிப்பதாகும். அரச உரிமை வழிவழியாக வருவது என்பதை இரு ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் எடுத்துக்காட்டுகின்றனர். பார்த்திபன் கனவில், பார்த்திப சோழரை அடுத்து அவரது மகன் விக்கிரமனும், மகேந்திர சக்கரவர்த்தியை அடுத்து அவரது மகன் நரசிம்மப் பல்லவச் சக்கரவர்த்தியும் ஆட்சிக்கு வருவதைக் காட்டியுள்ளனர்.

சிக்கவீர இராஜேந்திராவில், தொட்டவீரஇராஜேந்திரனுக்குப் பிறகு அவனது மகன் லிங்கராஜனும், அவனுக்குப்பின் அவரது மகன் சிக்கவீர இராஜேந்திரனும் ஆட்சிக்கு வந்ததாகக் கூறப்படுகிறது.

மன்னர் தம் காலத்திலேயே அடுத்த ஆட்சிப் பொறுப்பினை ஏற்கும் தம் மூத்த மகனுக்கு இளவரசுப் பட்டங்கட்டும் முறையினைக் கல்கியின் புதினத்தில் நரசிம்மர் தன் மகன் மகேந்திரனுக்கும், லிங்கராஜன் தன் மகன் சிக்கவீர இராஜேந்திரனுக்கும் கட்டுவித்ததன் மூலம் அறியமுடிகிறது.

அரச உரிமை வழிவழியாக வருவதையும், அதற்குத் தடை ஏற்பட்டால் போராடிப் பெறுவதையும், இருவர்தம் புதினங்களிலும் காணமுடிகின்றது.

**அமைச்சர்**

அரசியல் நிலையில் மன்னருக்கு அடுத்த நிலையில் இன்றியமையாத இடத்தைப் பெறுபவர் அமைச்சர். பார்த்திபன் கனவில், நரசிம்ம பல்லவரின் முன்னால் அமைச்சரான பரஞ்சோதி அவர்கள் நரசிம்மரைக் காணவருவதை அறிந்து அவரை வரவேற்கத் தன்னுடன் தன் மகள் குந்தவியையும் அழைக்கிறார். அதற்குக் குந்தவி, "யார் வருகிறார்கள் உங்களுடையப் பழைய சேனாதிபதியா? உங்களுடன் வாதாபிக்கு வந்து புலிகேசியை வெல்ல உதவி புரிந்தவரா?"[84] எனக் கேட்டாள். அதற்கு நரசிம்மர், "அவர் உதவி

புரியவில்லை. குந்தவி! அவர்தான் புலிகேசியை வென்றவர்; புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் கிளம்பிய சளுக்கர் படைகளைத் துவம்சம் செய்தவர். அந்த மகாவீரர்தான் தற்போது அரையில் உடுத்த துணியுடன், விபூதி ருத்ராட்சதாரியாய் ஸ்தலயாத்திரை செய்து கொண்டு வருகிறார். தமதுப் பெயரைக் கூட மாற்றிக்கொண்டு, 'சிறுத்தொண்டர்' எனத் தம்மைச் சொல்லிக் கொள்கிறார்"[85] என நரசிம்மர் தம் அமைச்சரின் பெருமைகளை எடுத்துரைப்பதாகக் கூறப்படுகிறது.

அதே புதினத்தில், பார்த்திபனின் அமைச்சராக வரும் மாரப்பபூபதி பார்த்திபனுக்கு எதிரான செயல்களில் ஈடுபடுகிறான். பார்த்திபன் பல்லவச் சக்கரவர்த்தியுடன் போரிடச் செல்லும் போது, தனக்கு உடல்நிலை சரியில்லை என்று கூறி ஒதுங்கிக் கொள்கிறான். விக்கிரமனைப் பல்லவச் சக்கரவர்த்திக்கு எதிராகத் தூண்டிவிட்டு, அவனை நாடுகடத்துவதற்குத் தூண்டுகோலாக இருக்கிறான்.

நரசிம்மரின் மகள் குந்தவியைத் திருமணம் செய்து கொள்ளப் பல்வேறுத் திட்டங்கள் தீட்டுகிறான். மேலும் மாரப்பன் தான் அரியணை ஏறுவதற்காகக் கபால பைரவருடன் சேர்ந்து விக்கிரமனையும், சிவனடியாரையும் காளிக்குப் பலிகொடுக்க ஏற்பாடு செய்கின்றான்.

சிக்கவீர இராஜேந்திராவில், உத்தய்ய தக்கனின் மருமகளை மன்னனின் ஆட்கள் தூக்கிச் சென்றபோது, அமைச்சர்களாக இருந்த போபண்ணாவும், லட்சுமிநாராயணய்யாவும் அதில் தலையிட்டு, இராணியின் உதவியுடன் அப்பெண்ணைக் காப்பாற்றினர்.

பசவனின் தவறான தீய நட்பினால் பல்வேறு கெட்டப் பழக்கவழக்கங்களுக்கு ஆளாகி இருந்த அரசனிடமிருந்து நாட்டைக் காப்பாற்ற இவ்விருவரும் ஆங்கிலேயருடன் முறையிடுதல், அவர்களுக்குக் கடிதம் எழுதுதல், மக்களைத் திரட்டி மன்னருக்கு எதிராகப் போராடச் செய்தல் போன்ற பல்வேறு செயல்களை மேற்கொள்ளுகின்றனர்.

அரசரின் நெருங்கிய அமைச்சரான பசவன் அனைவரிடமும் கெட்ட பெயர் வாங்கிக் கொண்டிருந்தாலும், மன்னருக்கு உண்மையாகவே நடந்துகொண்டான். அவனின் உடல்நிலையில் அக்கறை கொண்டு பல்வேறு மருத்துவ முறைகளை மேற்கொண்டான், இருப்பினும், இறுதியில் தனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டதாகக் கருதி அரசனால் சுட்டுக் கொள்ளப்பட்டான். இவ்விரு புதினங்களிலும் இவ்வாறு அமைச்சர்கள் பற்றிய செய்திகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**சுரங்க வழியும், பாதாளச் சிறைச்சாலையும்**

போர்க்காலங்களில் தப்பித்துச் செல்வதற்குத் தனி வழிகள் அக்கால அரண்மனைகளில் அமைக்கப்பட்டிருந்ததை "அக்கால சுரங்கப்பாதைகள் நகர்ப்புறத்துக்கும், நிலவறைக்கும், பாதாளச் சிறைக்கும், அரண்மனைக்கும் வழியமைப்பனவாக இருந்தன. மன்னர்கள் போர்க்களத்தில் தப்பிச் செல்லவும், இரகசியமாய்ச் செயல்படவும், இவ்வழிகள் துணைசெய்தன. மேலும் பகை அரசர்களையும், அரசியல் குற்றவாளிகளையும் தண்டிக்கப்பாதாள நிலவறைகள் பயன்பட்டன. அரசியல் சிக்கலில் மற்றவர்களுக்குத் தெரியாமல் ஒருவரை மறைத்து வைக்கப் பாதாளச் சிறைகள் துணைநின்றன. அதே போன்று அரசியல் கருவூலத்தைப் பாதுகாக்க நிலவறைகள் உதவின"[86] என்கிறார்.

கல்கியின் புதினத்தில், பார்த்திபன் விக்கிரமனிடம் கொடுக்கச் சொல்லிக் கொடுத்தப் பெட்டியை அரண்மனைக் கோயிலில் புதைத்து வைத்திருந்தனர். அதனை எடுப்பதற்காகப் பொன்னனும், வள்ளியும் சென்றனர். அப்போது, வள்ளி, "கோயில் எந்தப் பக்கம் இருக்கிறது"[87] எனக் கேட்டாள்.

அதற்குப் பொன்னன். "பார்த்திப மகாராஜாவின் காலத்தில் ஒருமுறை நான் அரண்மனைக் கோயிலைப் பார்த்திருக்கிறேன். அந்த அழகிய சிறு கோயிலானது அரண்மனையைச் சேர்ந்தாற்போல

கீழ்ப்பாகத்தில் அமைந்திருந்தது. அதற்குள் பிரவேசிப்பதற்கு மூன்று வழிகள் இருந்தன.

அரண்மனைக்குள்ளேயிருந்து நேராகக் கோவிலுக்குள் வரலாம். இதுதான் பிரதான வாசல், பின்புறத்துத் தோட்டத்திலிருந்து பிரவேசிப்பதற்கு ஒரு வாசல் இருந்தது. அபிடேகத்திற்குக் காவிரி நீரும், அலங்காரத்திற்குப் பூவும் கொண்டு வருவதற்கு இந்த வாசல் ஏற்பட்டது. இவற்றைத் தவிர அர்ச்சகர் வெளியில் இருந்து நேரே வருவதற்காகக் கிழக்கு மதிலில் சிறு வாசல் இருந்தது”[88] எனக் கூறினான். இவ்வாறு கோவிலுக்கான சுரங்க வழிகள் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

சோழ இளவரசர் விக்கிரமனை, பல்லவ அரசர் கராக்கிருகத்தில் சிறை வைத்திருப்பதாகவும், அவனை ஈட்டி தாங்கிய பன்னிரண்டு வீரர்கள் காவல் காத்து வருவதாகவும் தன் மகள் குந்தவியிடம் கூறுவதுபோலக் காட்டப்பட்டுள்ளது.

மாஸ்தியின் புதினத்தில், தன் சகோதரியை வீரராஜன் தன் அரண்மனையில் சிறைவைத்திருப்பதாகவும், லிங்கராஜன் தன் மகளுக்குக் கொடுத்த அப்பங்கொளத்து அரண்மனையிலிருந்து தேவம்மாஜியும், சென்ன பசவனும் வீரராஜனின் காவலிலிருந்து அரண்மனைச் சுரங்கப் பாதை வழியாகத் தப்பிச் சென்றதாகவும் சுட்டப்பட்டுள்ளது.

ஆங்கிலேயப் படைகள் அரண்மனையை முற்றுகை இட்டபோது, வீரராஜன் அரண்மனைச் சுரங்கப் பாதை வழியாகத் தப்பிச் செல்வதைக் காட்டுகின்றனர். இவ்வாறு, சுரங்கவழிப் பற்றியும், பாதாளச் சிறைச்சாலைப் பற்றியும் இவ்விருவர் புதினங்களும் எடுத்துரைக்கின்றன.

**தண்டனை**

குற்றம் செய்தவர்கள் மீண்டும் அக்குற்றத்தைச் செய்யாமலும் திருந்தி வாழவும் தண்டனை கொடுப்பது மரபு. “குற்றம் செய்தவர்

தண்டனைக்கு உள்ளாவர். தண்டனைக் கொடுப்பது, பழிக்கப் பழிவாங்க வேண்டும் என்பதற்காக அல்ல. இனி அத்தகையக் குற்றங்கள் நடவாமல் தடுப்பதற்காகவும், தீர்வு காண்பதற்காகவுமே தண்டனைகள் கொடுக்கப்படுகின்றன”[89] என்கின்றனர்.

பார்த்திபன் கனவில் குந்தவி, விக்கிரமனைப் பூமியில் புதைத்து யானைக்காலில் இடறச் செய்வது போலவும், கழுவில் ஏற்றுவது போலவும் கனவுகண்டாள். அவள் கனவில் கண்ட தண்டனையை விக்கிரமன் பெறவில்லையெனினும் நாடு கடத்தப்பட்டான். உள்நாட்டுக் குழப்பத்தை உண்டாக்குபவரை அக்காலத்தில் நாடுகடத்துவது வழக்கிலிருந்த தண்டனை.

நரசிம்மப் பல்லவருக்கு உட்பட்ட சிற்றரசனாய் இருந்த விக்கிரமன் உரிமைப் போரை நடத்தியதால் கைதுசெய்யப்பட்டான். அவன் இளமையைக் கருதிப் பல்லவ அரசன் மரண தண்டனை விதிக்காமல் அவனை நாடு கடத்தினார். இத்தண்டனையை மீறி நாடு திரும்பினால், சிரச்சேதம் செய்யப்படும் எனவும் தண்டனை விதிக்கப்பட்டது. விக்கிரமன் தான் செய்தது குற்றம் என மன்னிப்புக் கேட்டிருந்தால், கப்பம் கட்டும் அரசனாக இருந்திருக்கலாம் என்பதையும், தண்டனை விதிக்கும்போது இளமைப் பருவத்தை முன்னிட்டுக் கருணை காட்டும் தன்மையும் இருந்தது என்பதையும் உணரமுடிகின்றது.

சிக்கவீர இராஜேந்திராவில், சென்ன பசவனை, காவலாளியாக இருந்த உத்தய்யன், சிறையிலிருக்கும் அவனது மனைவியைக் காண அனுமதித்தான். இதனால் கோபமடைந்த வீரராஜன் உத்தய்யனுக்குச் சவுக்கடிக் கொடுத்துத் தலையைச் சீவ வேண்டும் எனக் கூறினான். அதற்குள் வீரராஜனின் மகள் “அப்பா நான்தான் சென்ன பசவனை அனுமதித்தேன். உத்தய்யனை விட்டுவிடுங்கள்”[90] எனக் கூற, அவனை நகர எல்லைக்குக் காவலுக்கு அனுப்பிவிட்டான். சென்ன பசவனும், தேவம்மாஜியும் அப்பங்கொளத்து அரண்மனையிலிருந்து தப்பிச் செல்லும்போது, வழியில் குழந்தையைத் தவறவிடுகின்றனர். இதனால்,

கோபம் கொண்ட வீரராஜன், அவர்களுக்குத் தண்டனைக் கொடுக்கக் கருதி குழந்தையைக் கொல்கிறான். மேலும், அப்பங்கொளத்து அரண்மனை விசுவாசியான சோமனையும், அரண்மனை வேலைக்காரியையும் கழுவிலேற்றினான்.

குடகுநாட்டிற்கு வேறு அரசனைக் கொண்டுவரவேண்டும் என எண்ணி, சென்ன வீரய்யன் என்பவன் மறைமுகமாகப் பல்வேறு வேலைகளைச் செய்கிறான். இதனை அறிந்த வீரராஜன், அவனைத் துப்பாக்கியால் சுட்டு மரணதண்டனை அளித்தான்.

வீரராஜனின் கொடூர ஆட்சியினால் ஆங்கில அரசு அவன்பால் கோபம் கொண்டு அவனை வேலூருக்கு நாடு கடத்தியது. இவ்வாறாக, இரண்டுப் புதினங்களிலும் தண்டனைகள் இடம்பெற்றுள்ளன.

### தொழில்கள்

ஒவ்வொரு மனிதனும் ஏதேனும் ஒரு தொழில் செய்பவனாக இருக்கவேண்டும். தொழில்களை வைத்துச் சாதிகள் பிரிக்கப் பட்டுள்ளன. பார்த்திபன் கனவில், படகோட்டுதல், கொல்லுவேலை செய்தல், சிற்பம் செய்தல் போன்ற தொழில்கள் வெளிப்படுகின்றன.

### படகோட்டுதல்

படகோட்டுதல் அக்காலத் தமிழகத்தில் சிறப்பான முறையினில் இருந்துள்ளது. இப்புதினத்தில் வரும் படகோட்டிப் பொன்னன் என்பவன் படகு ஓட்டும் தொழிலைச் செய்து வருகிறான். காவேரிக் கரையில், இக்கரையிலிருந்து அக்கரைக்கும், அக்கரையிலிருந்து இக்கரைக்கும் மக்களை அழைத்துச் செல்பவன்.

இராஜகுடும்பத்துடன் தொடர்புகொண்டு அவர்களுக்குப் பலவகையிலும் உதவிபுரிபவனாகப் படகோட்டும் பொன்னன் கூறப்படுகிறான். இராஜ குடும்பத்தினரை, ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் படகின்மூலம் கொண்டு செல்லும் தொழிலைச் செய்துவந்தான். இதன் மூலம் படகோட்டுதல் தொழில் இருந்ததை அறியமுடிகிறது.

**கொல்லு வேலை செய்தல்**

வள்ளியின் தாத்தாவாக வரும் வீரபத்திர ஆச்சாரி கொல்லுவேலை செய்கிறார். ஒருமுறை தாத்தாவைப் பார்க்கச் சென்ற வள்ளி, "முற்றத்தில் ஒரு பக்கத்தில் வாளும், வேலும், கத்திகளும் அடுக்கி இருந்ததைக் கண்டு கத்தி இதெல்லாம் என்ன"[91] எனக் கேட்கிறாள். அதற்கு தாத்தா, "இதெல்லாம் என்னவா! வாளும், வேலும், சூலமுந்தான். என்னுடைய பாட்டன், முப்பாட்டன் காலங்களில் எல்லாம் எப்படித் தெரியுமா? அப்போது கொல்லுப் பட்டறையில் எல்லாம் வாளும், வேலும், சூலமும் செய்த வண்ணமாயிருப்பார்களாம். ஒவ்வொரு பட்டணத்திலும் கம்மாளத் தெருதான் எப்போதும் 'ஜே ஜே' என்று இருக்குமாம். இராஜாக்களும், இராஜகுமாரர்களும், சேனாதிபதிகளும், கம்மாளனைத் தேடிவந்து கொண்டிருப்பார்களாம்"[92] எனக் கூறுகிறார். இதன் மூலம் கொல்லுத் தொழில் இருந்ததை உணரமுடிகிறது.

**சிற்பத் தொழில்**

செண்பகத் தீவிற்கு நாடுகடத்தப்பட்ட விக்கிரமன் தாய் நாட்டிற்குக் கப்பலில் வரும்போது, மற்றவர்கள் நாகப்பட்டிணத்தில் இறங்கலாம் என்றனர். ஆனால், விக்கிரமனோ, மாமல்லபுரத்துக்கே போகவேண்டும் என்றான். "அவன் குழந்தையாயிருந்தபோதே மாமல்லபுரத்துச் சிற்பங்களைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவற்றைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை நெடுநாளாக இருந்தது. பல்லவ வீரர்கள் அவனைச் சிறைப்படுத்திக் கப்பலேற்றியபோது, மாமல்லச் சிற்பங்களைக் காணாமலே செல்கிறோமே என வருந்தினான். இப்போது அங்கே இறங்கினால் அந்த ஆசை நிறைவேறிவிடும் என எண்ணினான். அது மட்டுமின்றி, இங்குள்ள சிறந்த சிற்பிகளையும், சித்திரக்காரர்களையும் அழைத்துச்சென்று செண்பகத் தீவையும் சிற்பங்கள் மிகுந்த நாடாக மாற்றவேண்டும்"[93] என எண்ணினான். இதன் மூலம் சிற்பத்தொழில் சிறப்பான முறையினில் இருந்ததை அறியமுடிகிறது.

சிக்கவீர இராஜேந்திராவில், காவற்தொழில், சோசியம் பார்த்தல், அரண்மனைச் சேவகம் போன்றவை சிறப்பான முறையினில் கூறப்பட்டுள்ளன.

காவற் தொழில் பற்றிக் கூறும்போது, உத்தய்யன் அரண்மனைக் காவலாளியாக இருக்கிறான். ஒருமுறை சென்ன பசவனை தேவம்மாஜியைக் காண அனுமதித்ததன் மூலம், நகர எல்லைக்குக் காவல்காக்க மாற்றப்படுகிறான். இதன்மூலம் காவல் தொழில் இருந்ததையும் அவர்கள் தவறுசெய்யும்போது இடமாற்றம் செய்யும் முறை இருந்ததையும் அறியமுடிகிறது.

சோசியம் பார்க்கும் தீட்சிதர், அரண்மனைக்குரிய அனைத்து நபர்களுக்கும் நல்லது கெட்டதைச் சொல்லும் தொழிலைச் சிறப்பான முறையினில் செய்கிறார். அவர் இராணியிடம், "வீரராஜன் சாதகம் சரியாக இல்லை. கம்சன், தேவகி சாதகம் போலுள்ளது. எனவே ஆபத்து அரசருக்குக் காத்துக் கொண்டிருப்பது போலுள்ளது. தங்கையைச் சிறையிலிருந்து விடுவிப்பதே அவருக்கு நல்லது"[94] என எச்சரிக்கிறார். இதன் மூலம் சோதிடம் பார்க்கும் தொழில் இருந்ததை அறியமுடிகிறது.

அப்பங்கொளத்து அரண்மனைச் சேவகராக இருக்கும் மாசன் தேவம்மாஜிக்கும், சென்னபசவனுக்குப் பல்வேறு உதவிகளைப் புரிகின்றான். அவர்கள் குழந்தையைத் தவறவிட்டபோது, அக்குழந்தையைத் தேடிச் சென்று வீரராஜனிடம் சிக்கிக் கொண்டு கழுவிலேற்றப்படுகிறான். அதேபோல அரண்மனை வேலைக்காரியும் அரண்மனையின் இரகசியத்தைக் காப்பாற்றியதன் மூலம் அவளும் வீரராஜனால் கழுவிலேற்றப்படுகிறாள். இதன் மூலம் அரண்மனைக்குச் சேவகம் செய்யும் தொழிலாளிகள் இருந்தது தெரிகிறது.

**தெய்வங்கள்**

தெய்வங்களை வழிபடுதல் என்பது மனிதரிடையே காலம் காலமாகப் பரவலாகக் காணப்படுகிறது. தெய்வங்கள் பற்றியச் செய்திகள் இரண்டு புதினங்களிலும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

பார்த்திபன் கனவில், பார்த்திபனும், அருள்மொழியும் அரண்மனைக் கோயிலில் வணங்கியது பற்றிக் கூறப்படுகிறது. அக்கோவிலில் "சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப் பட்டிருந்தது. இடது பக்கத்தில் பார்வதி தேவியின் அற்புதச் சிலை ஒன்று இருந்தது. தேவியின் இருபுறத்திலும் விநாயகரும், முருகக் கடவுளும் வீற்றிருந்தார்கள். இன்னொரு பக்கத்தில் ஸ்ரீதேவி, பூதேவி சமேதரான மகாவிட்ணு தரிசனம் தந்தார்"[95] என அரண்மனைக் கோவிலில் உள்ள தெய்வங்கள் பற்றிக் கூறப்படுகிறது.

குந்தவி அப்பர் பெருமானைக் காணச் சென்றபோது, அவர் சிவபெருமானைப் பற்றிப் புகழ்ந்துப் பாடி மகிழ்ந்ததைக் காணமுடிகிறது.

நரசிம்மப் பல்லவரின் பழைய சேனாதிபதியான பரஞ்சோதி சிவனின் பால் அதிக ஈடுபாடு கொண்டுச் சிவபக்தராக மாறித் தனது பெயரைச் சிறுத்தொண்டர் என மாற்றிக் கொண்டார். நரசிம்மர் பரஞ்சோதியை 'சிவபக்தரே' என அழைத்தபோது அவர், "அவ்வளவு பெருமைக்கு நான் உரியவன் அல்ல பிரபு! இன்று இந்நாட்டில் மகான்களான சிவபக்தர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தொண்டு புரியும் 'சிறுத்தொண்டன்' நான்!"[96] எனக் கூறி சிவனின் பெருமைகளை எடுத்துரைக்கிறார்.

கபால பைரவன் என்பவன் காளி என்னும் தெய்வத்தை வணங்கி, அதற்குப் பலிகொடுக்க வேண்டும் எனக் கூறி நரபலி என்னும் கொடிய செயலைச் செய்கிறான். அக்காளி கோயிலை வருணிக்கும்போது, "கோயிலுக்கு முன்னால் பிரம்மாண்டமான வீரர்களின் சிலைகளும், மண்யானைகளும், குதிரைகளும் தீவர்த்தி வெளிச்சத்தில் கோரமாகக் காட்சியளித்தன. இதனுள்ளே அகோர காட்சிகளுடன் காளி காட்சி அளிக்கிறாள்"[97] எனக் கூறப்பட்டுள்ளது.

சிக்கவீர இராஜேந்திராவில், ஆங்கிலேயருக்கும், குடவ மக்களுக்கும் மதம் பற்றிய விவாதம், நடந்தபோது, ஆங்கிலேயர்கள், "ஓங்காரேஸ்வரனையும், கருங்காளியையும் நீங்கள் ஒரு கடவுளின்

இரண்டு உருவங்கள் என்று சொல்கிறீர்களா?"[98] எனக் கேட்கின்றனர். அதற்குக் குடவமக்களில் ஒருவன், பின்வருமாறு கூறுகின்றான்.

"ஓங்காரேஸ்வரர் கடவுள், உமாதேவி அவரது பத்தினி, லோகமாதா, காளி என்பது லோகமாதாவின் லயகாரன ரூபம். கருங்காளி என்றால் கருப்பாக இருக்கம் காளி. காளிதேவி கருப்பாக இருக்கும் தேவதை என்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கருங்காளி பூசை ஓங்காரேஸ்வரனின் பத்தினியின் பூசை. கடவுளின் சகல சக்தியும் அவரது பத்தினிக்கும் உண்டு. தாய் மகிழ்ந்தால் தந்தை தானே மகிழ்வான்"[99] என்கின்றான்.

காணாமல் போன தேவம்மாஜியின் குழந்தை இருக்குமிடத்தைச் சோமன் அறிந்தவுடன், "கருங்காளியின் தயவு என்னைக் குழந்தை இருக்குமிடத்துக் கொண்டு வந்துசேர்த்துள்ளது"[100] எனக் கூறுகிறான்.

இவற்றை நோக்கும் போது, கல்கியின் புதினத்தில் சிவன், காளி, மகாவிட்ணு, பார்வதி, விநாயகர், முருகன் ஆகிய தெய்வங்கள் பற்றியும், மாஸ்தியின் புதினத்தில் ஓங்காரேஸ்வரர், கருங்காளி, அம்பிகை, விசுவேசுவரா போன்ற தெய்வங்கள் பற்றியும் சிறப்பான முறையினில் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

## வழிபாடுகள்

மனித மனத்தைப் பக்குவப்படுத்துவது வழிபாடு. வழிபாட்டின் மூலம் இறைவனை அடையலாம் என்பது நம்பிக்கை. இத்தகைய வழிபாட்டை இரு ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் கூறியிருக்கின்றனர்.

பார்த்திபன் கனவில், "அரண்மனைக் கோயிலில், வழிபாடு செய்வதற்காக பார்த்திபனும், அருண்மொழியும், மகன் விக்கிரமனும் சென்று வழிபட்டனர். அப்போது, விக்கிரமன் கைகூப்பிய வண்ணம் தெய்வ சந்நிதியில் நின்று ஆராதனையைப் பார்த்துக் கொண்டிருந்தார். அர்ச்சகர் தீபாராதனை செய்து மூவருக்கும் பிரசாதம் கொடுத்தார்"[101] எனச் சுட்டப் பட்டுள்ளது.

*ஸ்ரீரங்கநாதரின் அர்த்தசாம ஆராதனையைத் தரிசித்துவிட்டு வந்தவர்களாக, சிறுத்தொண்டர், அவரது மனைவி, குந்தவி தேவி போன்றவர்கள் கூறப்படுகின்றனர்.*

*அருண்மொழிதேவி, பொன்னன், சிறுத்தொண்டர், அவரது மனைவி, வள்ளி போன்றோர் திருச்செங்காட்டாங்குடியிலே புனித நீராடி இறைவனை வழிபட்டனர்.*

*காளிமாதா மிகவும் தாகமாக இருக்கிறாளென்றும், அவள் தாகத்தைத் தணிக்க அரசகுல இரத்தம் வேண்டுமென்றும், அதற்காக விக்கிரமன், அருண்மொழி, சிவனடியார் ஆகியவர்களை நரபலியிட்டுக் காளியை வழிபட வேண்டுமென்றும் கபால பைரவனும், மாரப்பப் பூபதியும் திட்டம் தீட்டுகின்றனர்.*

*சிக்கவீர இராஜேந்திராவில், அப்பங்கொளத்து அரண்மனைக் காவலாளியான சோமனுக்கு, தன் பிரபுவின் குழந்தை பிழைத்திருக்கிறது, பத்திரமாக இருக்கிறது என்று மகிழ்ச்சி. அதை எப்படிக் கைப்பற்றி மங்களூருக்கு எடுத்துக் கொண்டு போவது என்று கவலை. அப்போது அவன், “கருங்காளித் தாயே! நீதான் வழி காட்ட வேண்டும். நான் அதன்படி நடந்து கொள்கிறேன். குழந்தையைக் காப்பாற்றித்தா. இரண்டு ஆடுகள் பலி கொடுக்கிறேன்”[102] என்று அவன் தன் குலதேவதையைப் பிரார்த்தித்துக் கொள்கிறான்.*

*தேவம்மாஜியின் குழந்தை வீரராஜன் கைக்கு வந்ததும், அதற்கு இன்னும் ஆபத்து அதிகரித்துவிட்டது என எண்ணிய இராணி கௌரம்மாஜி, “ஓங்காரா, அம்பிகே நீங்களே எல்லாவற்றிற்கும் காரணகர்த்தாக்கள். கிரகங்கள் உங்கள் கண்ணின் சைகைக்கு அஞ்சி நடப்பவை. இந்தக் குழந்தையின் மீது கிருபை இருக்கட்டும், என் மீது கிருபை இருக்கட்டும், அரசனின் மீது கிருபை இருக்கட்டும். அவரால் இந்தக் குழந்தைக்கு ஏதும் அபாயம் நேரிடாமல் இருக்கட்டும். இந்த அருள்புரிந்து இந்த வீட்டைக் காப்பாற்றுங்கள்”[103] என வழிபடுகின்றாள்.*

*குடகு ஆங்கிலேயர் வசம் வந்தவுடன் ஆணையாளர் துரை அவர்கள், "ஓங்காரேஸ்வரர் கோயில், தலைக்காவேரி, பாகமண்டலம், லட்சுமணதீர்த்தம் நதிமூலம், இங்குள்ள கோயில்கள் அனைத்திற்கும் எப்பொழுதும் போல வழிபாடுகள் நடைபெற வேண்டும்"[104] எனக் கட்டளையிடுகிறார்.*

*இராணி கௌரம்மாஜி இறக்கும் தருவாயில், "விசுவேசுவரா, ஓங்காரா என்னைக் காப்பாற்று"[105] எனக் கூறுகிறாள். இவ்வாறு வழிபாடுகள் பற்றி இரண்டு புதினங்களிலும் திறம்படச் சுட்டப்பட்டுள்ளன.*

**விழாக்கள்**

*விழாக்கள் இல்லாத சிற்றூரோ, நகரமோ இல்லை. கோயில் என்று ஒன்று இருந்தால், அதற்குத் திருவிழா என்ற ஒன்று கண்டிப்பாக இருக்கும். பார்த்திபன் கனவில், சரசுவதி பூசை, விசயதசமி பூசை பற்றிக் கூறப்படுகிறது.*

*"சரஸ்வதி பூஜையன்று காலையில் நகரவாசிகள் தத்தம் வீடுகளில் வாணி பூஜை நடத்தினார்கள். பிற்பகலிலும், சாயங்காலத்திலும் பொது இடங்களில் கலைமகளின் திருநாளைக் கொண்டாடினார்கள். கோயில்கள், மடாலயங்கள், கலா மண்டபங்கள், வித்யாசாலைகள் எல்லாம் அமோகமான அலங்காரத்துடன் விளங்கின."[106]*

*மாமல்லபுரவாசிகளின் குதூகலத்தின் முழு அளவையும் மறுநாள் விசயதசமியன்றுதான் பார்க்கக் கூடியதாயிருந்தது. அன்று திருவிழா நகருக்கு வெளியே நடந்தது. மக்களைக் குதூகலப்படுத்த சித்திரக் காட்சிகள் இடம்பெற்றிருந்தன.*

*"இவற்றைத் தவிர ஆங்காங்கு வாழை மரங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட சிறுசிறு பந்தல்கள் காணப்பட்டன. அந்தப் பந்தல்களில் இசை விருந்துகள் நடந்து கொண்டிருந்தன. மக்கள் அவரவர்களுக்குப் பிடித்தமான இடத்திலே போய் நின்றுச் சித்திரக் காட்சிகளையும், இசை விருந்துகளையும் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள்."[107]*

சிக்கவீர இராஜேந்திராவில், நவராத்திரி விழாப் பற்றிக் கூறப்படுகிறது. இதில் குடகர்களின் ஆடல் பாடல் நிகழ்ச்சிகளும், அவர்களின் வாழ்க்கைமுறைப் பற்றிய நாடகங்களும் இடம் பெறுகின்றன. வீரராஜன் இம்முறை நவராத்திரி விழாவின் போது, ஆங்கிலேயர் விருந்துக்கும் ஏற்பாடு செய்திருந்தான். இதில், ஆங்கில அதிகாரியும் அவரது சகாக்களும் கலந்து கொண்டனர்.

திருவிழாக் காலங்களில் நாட்டின் சரித்திரத்தைக் குறித்த சிறுசிறு நாடகங்களை நடிக்கச் செய்வது அரண்மனையில் பழைய காலத்திலிருந்து நடந்துவரும் வழக்கம். இம்முறை ஆங்கிலேயர்கள் ஊரிலிருந்த ஐந்து நாட்களிலும், மாலையில் இப்படிப்பட்ட நாடகங்களை நடத்தினார்கள்.

"முதல் நாள் குடகின் மூல புருசனின் சரித்திரத்தை நாடகமாக ஆடிக் காண்பிடித்தார்கள். மறுநாள் தொட்ட வீரராஜன் திப்புவிற்கு விரோதமாக ஆங்கிலேயர்களுக்கு உதவிய கதை. மூன்றாவது நாள் மலபாரின் இராணியை திப்பு இராஜ்யத்திலிருந்து விரட்டி அடித்தது. நான்காவது நாள் லிங்கராஜனின் நிலவரிச் சீர்திருத்தத்தைக் குறித்த நாடகம்"[108] என்ற குறிப்புள்ளது.

ஐந்தாவது நாள் அரண்மனையில் பண்டிகை நாள். குடகர்கள் இதனை ஆயுத பூசையாகக் கொண்டாடுகின்றனர். "காலையில் ஒவ்வொருவரும் துப்பாக்கி, கத்தி, ஈட்டி முதலிய ஆயுதங்களை நன்றாகத் துடைத்து வீட்டின் ஒரு மூலையில் வைக்கின்றனர். பின்னர், ஆயுதங்களுக்குத் தூபம் காட்டி, சந்தனப் பொட்டிட்டு, தலை வாழையில் போட்டு அவைகளில் அறுசுவை உணவுகளை இட்டு, ஆயுதத் தேவதைக்குப் பூசை செய்கின்றனர். பிறகு அதனை வீட்டுப் பெரியவர்களிடம் கொடுத்து அவர்களின் பாதங்களை வணங்கி, ஆயுதங்களைப் பெற்றுக் கொள்கின்றனர்."[107]

ஆறாவது நாள் மதங்கள் பற்றிய விவாதமும், மற்றைய நாட்களில் பல்வேறு வகையான நாடகங்களும் நடைபெற்றன. இறுதிநாளில், விருந்தினருக்கு வழியனுப்புதல் நிகழ்ச்சி நடந்தது. இவ்வாறு விழாவும்,

அவற்றினிடையே ஆங்கிலேயருக்குச் சிறப்புச் செய்தலும் நடைபெற்றன. இதன் மூலம் இரண்டு புதினங்களிலும் விழாக்கள் பற்றியும் ஆயுத பூசை பற்றிய குறிப்புக்கள் இருப்பதையும் அறியமுடிகிறது.

**அணிகலன்கள்**

அரச பரம்பரை என்றாலே அணிகலன்களுக்கெனத் தனிச் சிறப்பு உண்டு. அவர்களுடைய அணிகலன்கள் மிகவும் பிரசித்திப்பெற்றவை. பார்த்திபன் கனவில், அணிகலன்கள் பற்றிய செய்திகள் அதிக அளவினில் இடம்பெறவில்லை. "பார்த்திப மகாராஜா போருக்குச் செல்லும் முன் அரையில் மஞ்சள் ஆடையும், மார்பில் போர்க்கவசமும், இடையில் உடைவாளும் தரித்திருந்தார்"[110] எனக் கூறப்படுகிறது.

சிவனடியாரின் அணிகலன்கள் பற்றி, "தலை சடைமுடியும், நெற்றி நிறையத் திருநீறும், தாடியும், கழுத்தில் ருத்திராட்ச மாலையும், அரையில் காவி வஸ்திரமும் மார்பில் புலித்தோலும் தரித்திருந்தார்"[111] என இடம்பெற்றுள்ளது.

மாமல்லபுரத்திற்கு நரசிம்மரும், அவரது மகள் குந்தவியும் வந்தபோது அவர்களைக் காணவந்த மக்கள் "பட்டுப் பட்டாடைகளாலும், பசும்பொன் ஆபரணங்களாலும் தங்களை அலங்கரித்துக் கொண்டிருந்தனர் என விளக்கப்படுகிறது. அதேபோல, "நரசிம்மரும், குந்தவியும் அணிந்திருந்த 'கிரீடங்களும், மற்ற ஆபரணங்களிலும் பதித்த நவரத்தினங்களின் காந்தி பார்ப்பவர்களின் கண்களைக் கூசச் செய்தன"[112] எனக் கூறப்படுகிறது.

சிக்கவீர இராஜேந்திராவில், விருந்தினர்களாக வந்திருந்த ஆங்கிலேயர்களில் பெண்கள் ராணியைக் கண்டு அரண்மனையின் நகை, நாணயங்களைக் கண்டு மகிழ்ந்தனர். "மடிகேரி அரண்மனையின் ஆபரணமாளிகை முதலிலிருந்தே அபூர்வமான ரத்னங்களுக்கு ஒரு கடல் போல இருந்துவந்துள்ளது.

'ஹொலேர்,' 'ஹொரமலெ' என்ற இரண்டு வம்சத்து அரசர்களும் தத்தம் இராணிகளுக்காகக் கொள்ளையடித்துச் சேர்த்த நூற்றுக்கணக்கான

ஆபரணங்கள் அதில் இருந்தன. இவைளில் பல 'ஹொரமலெ' வம்சம் நாசமடைந்த பின்னர் 'ஹொலேரி' வம்சத்து சொத்தாக வந்து சேர்ந்தது. 'ஹாலேரி' வம்சம் ஹைதரிடம் தோல்வியுற்று அரசனின் மக்கள் சிறைப்பட்டிருந்த நாட்களில், அரண்மனை நகைப் பெட்டிகள் சிக்கண்ண செட்டியின் பெரியப்பாவின் பாதுகாப்பில் பத்திரமாக இருந்தன. தொட்ட வீரராஜன் மறுபடியும் அரசனான பொழுது அவை மீண்டும் அரண்மனையை வந்தடைந்தன. தொட்டவீரராஜனின் ஆட்சிக்காலத்தில் பல ஆபரணங்கள் வந்து சேர்ந்தன. சிக்கவீர இராஜேந்திரன் காலத்தில் எல்லாக் குடும்பத்திலுமுள்ள எல்லா ஆபரணங்களும் கருவூலத்துக்கு வந்து சேர்ந்தன"[113] எனச் சுட்டப் பட்டுள்ளது.

அரண்மனை நகைகளோடு ராணி, ராஜகுமாரி இவர்களின் சொந்த நகைகளையும் பார்த்து விருந்தினர்கள் மெச்சினார்கள். இவ்வாறு இரு புதினங்களிலும் அணிகலன்கள் பற்றியச் செய்திகள் கூறப்படுகின்றன.

**உணவுமுறை**

உணவுமுறை என்பது இடத்திற்கு இடம், நாட்டிற்கு நாடு மாறக்கூடிய ஒன்றாகும். உணவு மருந்தாகவும் சில இடங்களில் குறிப்பிடப்படுகிறது. உணவுமுறையைப் பற்றி இரு ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் கூறியிருக்கின்றனர்.

பார்த்திபன் கனவில் பொன்னன், தைத்த இளம் ஆலம் இலையிலே போட்டிருந்த கம்பு அடையைக் கீரைக் குழம்புடன் ருசி பார்த்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஒரு தடவை அவன் நாக்கைச் சப்புக் கொட்டிவிட்டு, "அடி வள்ளி, இன்னும் எத்தனை நாளைக்கு உன் கையால் கம்பு அடையும் கீரைக் குழம்பும் சாப்பிட எனக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ தெரியவில்லை,"[114] என்றான். இதன் மூலம் கம்பு அடை, கீரைக்குழம்பு எனும் உணவு வழக்கிலிருந்ததை அறியமுடிகிறது.

விசயதசமியன்று நடைபெற்ற திருவிழாவின் போது, "ஆங்காங்கே அமைந்திருந்த தண்ணீர்ப் பந்தல்களில் கூட்டம் அலைமோதியது. அவல் பொரியும், சர்க்கரையும், பானகமும் நீர்மோரும் வந்தவர்களுக்கெல்லாம் உபசரிப்புடன் வழங்கப்பட்டன"[115] எனப் பதிவு செய்துள்ளனர்.

இரத்தின வியாபாரி போல வேடமிட்டுக் கொண்டு தன் தாயைக் காணவந்த விக்கிரமன், ஓரிடத்தில் இரவில் கொள்ளையர்களிடம் மாட்டிக்கொள்ள அவனை ஒற்றர் படைத் தலைவன் வீரசேனன் காப்பாற்றி, சிற்பி வீட்டிற்கு அழைத்துச் சென்று ஓய்வு எடுக்கச் செய்கின்றான்.

அப்போது, "எனக்குப் பசி பிராணன் போகிறது. இதோ பாட்டி 'பொரிமாவும், வெல்லமும்' கொண்டு வருகிறாள். முதலில் சாப்பிடுவோம்"[116] என்கிறான் ஒற்றர் தலைவன். இதன் மூலம் பொரி மாவும், வெல்லமும் வழக்கிலிருந்த உணவு என்பதை அறியமுடிகிறது.

சிக்கவீர இராஜேந்திராவில், லட்சுமிநாராயணய்யாவைக் காண பிராமண இளைஞனான சூரியநாராயணன் வருகிறான். அப்போது சாப்பிடும் நேரம் ஆதலால், அனைவரையும் அழைத்துச் சாப்பிடச் சொல்கிறான் லஷ்மிநாராயணய்யா. தன் தாயிடம் "இவருக்கு மோர்க்குழம்பு கொண்டுவா, இங்கே கோசும்பரி கேள்"[117] எனப் பரிகாசத்துடன் கூறினார் என்பதன்வழி உணவு வகைகள் பற்றியும் அறியமுடிகிறது.

வீரராஜன் சென்னபசவன் பற்றிக் கூறும்போது, "எங்கள் மாப்பிள்ளை யோக்கியனல்ல. அரண்மனை மாப்பிள்ளை என்பதனால் பெரிய மனுசனாகியிருக்கிறான். பழமொழி சொல்வார்கள், 'உப்பிலாத கஞ்சி குடித்துவிட்டு தெய்வமே என்றிருந்தான் மகன், நெய்ச்சோறு தின்றுவிட்டுக் குப்பை மேட்டில் ஏறிக் குரைத்தான் மாப்பிள்ளை' என்று. சென்னபசவய்யனின் புகாரையெல்லாம் நீங்கள் உண்மை என்று எடுத்துக் கொள்ளாதீர்கள்"[118] என ஆங்கிலேயரிடம் கூறுகிறான்.

விருந்துக்கு வந்த ஆங்கிலேயர்கள் மாட்டிறைச்சிக் கேட்க, அதற்கு வீரராஜன், குடவ வம்சத்தில் மாட்டினைக் கொல்ல ஒப்புக் கொள்ள மாட்டார்கள் எனக் கூறுகின்றான். இவ்வாறாக, இரண்டு புதினங்களிலும் உணவுமுறைப் பற்றிக் கூறப்படுகிறது.

**புழங்குபொருட்கள்**

மக்கள் வாழ்வில் பயன்படுத்தப்படும் அனைத்துப் பொருட்களும் புழங்குபொருட்களாகின்றன. பார்த்திபன் கனவில், பல்லக்கு, படகு, வாள், வேல், கத்தி, ஈட்டி, சூலம், துடுப்பு, பெட்டி, ஓலைச்சுவடி, பூட்டு, தட்டு, அடுப்பு, கல், உளி, கிரீடம், வில், அம்பு, ஓலை, கொடி, குழல், தாம்பூலத் தட்டு, காவிரிக் கட்டி, கல்லுளி, இரும்புச் சங்கிலி, கழுமரம், மஞ்சம், நவரத்தின மாலை, வைரம், வைடூரியம், புலித்தோல், மரக்கட்டை, சங்கு, தாரை, எக்காளம், மத்தளம், பேரிகை, சிம்மாசனம், சிவிகை, ருத்ராட்சை, கூடை, அகல் விளக்கு, கொத்துச் சாவி, நாதாங்கி, கதவு, கயிறு, தீவர்த்தி, ஜடாமகுடம், தந்துபி, இரத்தினங்கள், மூட்டை, வைக்கோல், வண்டி, பொற்கிண்ணம், மண்சட்டி, கம்பு, மண்வெட்டி, சந்தனம், குங்குமம், கபாலமாலை போன்ற புழங்குபொருட்கள் சுட்டப்பெற்றுள்ளன.

உதாரணமாக, "கரையிலிருந்து பொன்னன் 'படகை' இழுத்துக் கொண்டு செல்கிறான். படகில் உட்கார்ந்திருப்பது வள்ளி. வள்ளியின் கையில் சிறு 'கூடை' இருக்கிறது. அதற்குள்ளே 'அகல் விளக்கு' ஒன்று மினுமினுக்கென்று எரிகிறது"[117] எனக் கூறப்படுகிறது. இதில் புழங்கு பொருட்களாகப் படகு, கூடை, அகல் விளக்க போன்றவை இருந்ததைக் காணமுடிகிறது.

சிக்கவீர இராஜேந்திராவில், கதவு, பூட்டு, திறவுகோல், தட்டு, சாவிக் கொத்து, கத்தி, கம்பு, ஈட்டி, வேல், துப்பாக்கி, கிரீடம், தாம்பூலம், சிம்மாசனம், சிவிகை, பல்லக்கு, கைப்பை, பூணூல், செம்பு, தொட்டி, இலை, கிணறு, அரிசி, ஓலைச்சுவடி, ஆசனம், நகை, பாத்திரங்கள், மது, மாமிசம், கட்டில், கழுமரம், பூசை சாமான்கள், அகல் விளக்கு, குங்குமம், புத்தகம், புஷ்பம், கற்பூரம், கற்பூரத்தட்டி, பிரசாதத்

தட்டு, மணை, வெற்றிலை, பாக்கு, பழம், சந்தனம், அட்சதை, வளையல்கள், கயிறு, மண்பொம்மை, குடம், பால் கிண்ணம், பாட்டில், கூண்டு, கோடாலி, தலைப்பாகை, வைரம், வைடூரியம், நாணயங்கள், புஷ்பச் செண்டு, மேஜை, நாற்காலி, கரித்துண்டு, தொட்டில், அரிவாள், மூட்டை, இரத்தினங்கள், பெட்டி போன்றவை புழங்கு பொருட்களாகக் கூறப்படுகின்றன.

உதாரணமாக, தேவம்மாஜியின் குழந்தை அரசனால் கொல்லப்பட்டிருந்ததை அறிந்த தாதி, "சுவர் மாடத்திலிருந்த 'அகல் விளக்கை'த் தூண்டிப் பெரிதாக்கி, தொட்டிலின் அருகே கொண்டுவந்து பிடித்தாள். 'அரிவாள்' குழந்தையின் கழுத்தில் ஆழப் பதிந்திருந்தது."[120] இதில் அரிவாள், அகல் விளக்கு ஆகியவைப் புழங்குப் பொருட்களாகக் காணப்படுகின்றன. இவ்வாறாக, இரண்டு புதினங்களிலும் புழங்குபொருட்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**கால்நடைகள்**

கால்நடைகள் பற்றியக் குறிப்புகளை இரு புதின ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் எடுத்துரைக்கின்றனர். பார்த்திபன் கனவில், குதிரை பற்றி கூறும்போது, "விக்கிரமனும், ஒற்றர் படைத் தலைவனும் ஆயனச் சிற்பியின் வீட்டிற்குச் சென்றனர். அப்போது, ஒற்றர் படைத்தலைவனின் குதிரை அந்த வீட்டுக்கு அடிக்கடிச் சென்று பழக்கப்பட்டது போல், உள்ளே நுழைந்தது, அது நேரே கூடம், முற்றம் எல்லாவற்றையும் தாண்டிப் பின்புறக் கதவருகில் போய் நின்றது. அங்கிருந்த கிழவி அந்தக் கதவையும் திறந்தாள். குதிரைத் தானாக அதன்வழி புகுந்து சென்றது"[121] எனக் குறிப்பிட்டுள்ளனர்.

அதே குதிரையில் விக்கிரமன் ஆற்றைக் கடக்கும் பொழுது, வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு இருவரும் பிழைத்தனர். பின் அக்குதிரை அரண்மனையை நோக்கித் திரும்பி வந்தது. ஏனெனில் அது ஒற்றர் படைத் தலைவனின் வேடத்திலிருந்த நரசிம்மரின் குதிரை. "அதன் பெயர் 'புஷ்பகம்.' அரண்மனையில் மற்றொரு குதிரை ஒன்று உள்ளது. அதன் பெயர் 'பாரிஜாதம்'[122] எனவும், பட்டத்து 'யானை'ப்

பற்றிய செய்திகளும் கூறப்படுகின்றன. பார்த்திபனின் பட்டத்து யானை போர்க்களத்தில் அவனது உடலைக் கண்டு அலறி பின்னர் இறந்துவிடுகிறது. இது அந்த யானை பார்த்திபனின்பால் கொண்ட அன்பினை விளக்குகிறது.

சிக்கவீரஇராஜேந்திராவில், குதிரைகள் பற்றிய செய்திகள் அதிக அளவினில் இடம்பெற்றுள்ள. அரசர், அமைச்சர்கள், வீரர்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்லக் குதிரைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

"அரசனுக்கு உடல்நிலை சரியில்லாத போது, பசவன் குதிரைப்படைகள் சூழ, தானும் குதிரையில் ஏறிக்கொண்டு 'பகவதி'யை அழைத்துவரச் செல்கின்றான்."[123]

அரண்மனை லாயத்தில் வேண்டிய அளவு குதிரைகள் இருந்தன. அரசனைக் கேலி செய்து, லக்கன் என்பவன் திருவிழாவின் போது நாடகத்தில் நடித்ததால், பசவன் அவனை நாய்ப்படைகளை வைத்துக் கொல்லுகின்றான் எனவும் காட்டியுள்ளார்.

இவை தவிர யானை, கழுதை, பன்றி, காட்டுப் பூனை, எருது பற்றியக் குறிப்புகளும் இப்புதினத்தில் இடம்பெற்றுள்ளன. இதன் மூலம் இரண்டு புதினங்களிலும் கால்நடைகள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

**கருவிகள்**

வரலாற்றுப் புதினங்களில், கருவிகளுக்கு என சிறப்பான இடம் கொடுக்கப்பட்டுள்ளது. கருவிகளைப் பயன்படுத்தாத அரச பரம்பரையே இல்லை எனக் கூறலாம். பார்த்திபன் கனவில் ஈட்டி, வேல், சூலம், கத்தி, கம்பு, பூட்டு, சாவிக்கொத்து, உளி, இரும்புச் சங்கிலி, வாள், நாதாங்கி போன்ற கருவிகளும் இன்னும் பிற கருவிகளும் கூறப்படுகின்றன.

விக்கிரமனைக் கைது செய்த நரசிம்ம சக்கரவர்த்தி, அவனைக் கராக்கிரகத்தில் வைத்திருப்பதாகக் குந்தவியிடம் கூற, குந்தவி அவன்

அதிலிருந்து தப்பித்துக் கொண்டு போய்விட்டால் என்ன செய்வது என்று கேட்டாள். அதற்கு நரசிம்மர், “விக்கிரமன் தப்ப முயன்றானானால் அந்தக் கனமே பல்லவ வீரர்களின் பன்னிரண்டு ‘ஈட்டி’ முனைகள் அவன் மீது ஏக காலத்தில் பாய்ந்து விடும்”[124] என்றுக் கூறினார்.

சிக்கவீர இராஜேந்திராவிலும் ஈட்டி, கத்தி, வேல், கம்பு, சூலம், பூட்டு, சாவிக் கொத்து, துப்பாக்கி, கோடாலி, அரிவாள் போன்ற கருவிகள் சுட்டப்பட்டுள்ளன.

அரசனுக்கு எதிராகச் சதிவேலை செய்த சென்னவீரன் வீரராஜனிடம் சிக்கிவிட, அரசன் அவனிடம், உன்னுடைய சதி வேலையில் வேறு யார் இருக்கிறார்கள் எனக் கேட்க, அதற்குச் சென்னவீரன், “நான் அப்படிப்பட்ட நாய் அல்ல”[125] எனப் பதிலளித்தான். “அரசன் உடனே அருகே இருந்த ‘கைத்துப்பாக்கியை’ எடுத்து அவனை நோக்கிச் சுட்டான்.”[126] இவ்வாறு கருவிகள் இரு புதினங்களிலும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

## ஒப்பீடு

இரண்டு புதினங்களை ஒப்பிடும் பொழுது அவற்றிற்கிடையேயான பொதுப் பண்புகளும், சிறப்புப் பண்புகளும் திறம்பட விளங்கி நிற்கின்றன.

1. குடும்ப நிறுவனங்களில் தனிமனிதன் பற்றிக் கூறும்போது, பார்த்திபன் கனவில் வரும் நரசிம்மர், சிவனடியார் வேடமிட்டுக் கொண்டு பார்த்திபனின் கனவை நிறைவேற்றப் பாடுபடுகிறார். சிக்கவீர இராஜேந்திராவில் வரும் அமைச்சர் பசவன் அனைவரிடமும் கெட்டபெயர் வாங்கினாலும், அரசனுடன் இறுதிவரை இருந்து இறுதியில் அவனால் சுட்டுக் கொல்லப்படுகிறான்.

2. தந்தை - மகன் உறவு முறையில், இரண்டு புதினங்களிலும் தனக்குப் பின் தன் மகனே நாட்டை ஆள வேண்டும் என பதிவுசெய்யப் பட்டுள்ளது.

3. தன் மகளின் மனநிலையை அறிந்து அவள் விரும்புபவனையே மணம் முடித்து வைக்கும் தந்தையாக பார்த்திபன் கனவில் நரசிம்ம சக்கரவர்த்தியும், தன் மகளைத் தனக்குப் பின் அரியணையில் அமர்த்த வேண்டும் எனப் போராடும் தந்தையாகச் சிக்கவீர இராஜேந்திராவில் சிக்கவீர இராஜேந்திரனும் படைக்கப்பட்டுள்ளனர்.

4. தாய் - மகன் உறவுமுறையில், இரண்டு புதினங்களிலும் வரும் தாய்களான அருண்மொழியும், பகவதியும் தன் மகன்களான விக்கிரமனும், பசவனும் நாட்டைச் சுதந்திரமாக ஆளவேண்டும் என எண்ணுகின்றனர்.

5. பார்த்திபன் கனவில் தாய்-மகளுக்கான உறவு ஆழமாகக் கூறப்படவில்லை. சிக்கவீர இராஜேந்திராவில், தாய்-மகளுக்கான உறவு மிக ஆழமானதாகவும், சிறப்பாகவும் இடம்பெற்றுள்ளது.

6. பார்த்திபன் கனவில், கணவன் - மனைவி உறவுமுறை மிகவும் சிறப்பாகவும், அன்யோன்யமாகவும் கூறப்பட்டுள்ளது. சிக்கவீர இராஜேந்திராவில், கணவன் மனைவி உறவு ஆழமாகக் கூறப்படவில்லை.

7. இரண்டு புதினங்களும் சாதி பற்றிய செய்திகளை எடுத்துரைக்கின்றன. சமயம் பற்றிய செய்திகளும் இரு புதினங்களிலும் காணப்படுகின்றன.

8. பார்த்திபன் கனவில் சைவ சமயம் பற்றியக் குறிப்புக்கள் அதிக அளவினில் இடம்பெற்றுள்ளன. சிக்கவீர இராஜேந்திராவில், சைவம், வைணவம், கிறிஸ்தவ சமயம் பற்றிக் கூறப்பட்டஉள்ளன.

9. அரசியல் நிலையில், அரச உரிமை வழிவழியாக வருவதையும், அதற்குத் தடை ஏற்பட்டால் போராடிப் பெறுவதையும் இரு புதினங்களும் எடுத்துரைக்கின்றன.

10. அமைச்சர்கள் என்ற நிலையில், இரண்டு புதினங்களிலும் மக்களிடமும், மன்னனிடமும், நல்ல பெயர் பெற்ற அமைச்சர்களும் இருக்கின்றனர், கெட்ட பெயர் பெற்ற அமைச்சர்களும் இருக்கின்றனர்.

11. சுரங்க வழிகள், பாதாளச் சிறைச்சாலைகள் பற்றி இரண்டு புதினங்களும் எடுத்துரைக்கின்றன. தண்டனை பற்றிக் கூறும்போது, பார்த்திபன் கனவில் சிரசாக்கினை, கராக்கிருகத்தில் வைத்தல், சிறையிடுதல் மரண தண்டனை போன்றவையும், சிக்கவீர இராஜேந்திராவில், கழுவிலேற்றுதல், துப்பாக்கியால் சுடுதல், அரிவாளால் வெட்டுதல் போன்ற தண்டனைகளும் இடம்பெற்றுள்ளன.

இரண்டு புதினங்களிலும் நாடு கடத்துதல் என்னும் தண்டனை வெளிப்படுகிறது.

12. படகோட்டுதல், சிற்பத்தொழில், கொல்லு வேலை போன்ற தொழில்கள் பார்த்திபன் கனவிலும், அரண்மனைச் சேவகன், காவல் தொழில், சோசியம் பார்த்தல் போன்ற தொழில்கள் சிக்கவீர இராஜேந்திராவிலும் இடம்பெற்றுள்ளன.

13. இரு புதினங்களும் சைவ, வைணவ, சிறுதெய்வங்கள் பற்றிக் குறிப்பிடுகின்றன. பார்த்திபன் கனவில் அரண்மனைக் கோயில் பற்றியும், தெய்வங்கள் பற்றியும் சுட்டியுள்ளனர். சிக்கவீர இராஜேந்திராவில் வெளியில் உள்ள கோயில்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

14. இரு புதினங்களும் ஆயுதப் பூசை வழிபாடு பற்றிக் குறிப்பிடுகின்றன. சிக்கவீர இராஜேந்திராவில், ஆயுதபூசையோடு, நவராத்திரி விழாப் பற்றியும் கூறப்பட்டள்ளது.

15. அரசப் பரம்பரையினர் அணிகலன்களைப் பற்றி இரண்டு புதினங்களும் எடுத்துரைக்கின்றன.

16. உணவுமுறைகளில் கம்பு அடை, கீரைக் குழம்பு, பொரிமாவு வெல்லம், அவல் பொரி, பானகம், நீர்மோர், சர்க்கரை போன்றவை பார்த்திபன் கனவிலும், மோர்க்குழம்பு, கோசும்பரி, நெய்ச்சோறு, உப்பில்லாதக் கஞ்சி, மாட்டிறைச்சி போன்றவை சிக்கவீர இராஜேந்திராவிலும் பதிவாகியுள்ளன.

17. புழங்குபொருட்கள் பற்றி இரு புதினங்களும் சிறப்பான முறையினில் எடுத்துரைக்கின்றன. கால்நடைகளில், பார்த்திபன் கனவில், குதிரைகள், யானைகள் பற்றியும், சிக்கவீரஇராஜேந்திராவில், குதிரை, யானை, கழுதை, பன்றி, காட்டுப்பூனை, எருது போன்றவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

18. இரு புதினங்களிலும் ஈட்டி, கம்பு, கத்தி, வாள், வேல், பூட்டு, சாவிக்கொத்து போன்ற கருவிகள் வெளிப்படுகின்றன.

## தொகுப்புரை

- உரைநடையை அடிப்படையாகக் கொண்ட இக்கால இலக்கியங்களுள் புதினம் இன்றியமையாத ஒன்றாகும்.
- சமூகம் என்பது கூட்டு வாழ்க்கை முறையினைக் குறிப்பதாகும். சமூகம், சமுதாயம், குமுகாயம் போன்ற சொற்கள் ஒரு பொருளில் பயன்படுத்தப்படுகின்றன.
- சமூகத்தின் நிறுவனங்களில் தனிமனிதன், குடும்பம், சாதி, சமயம், அரசியல், தொழில்கள், தெய்வங்கள், வழிபாடுகள், விழாக்கள், உணவுமுறை, கால்நடைகள், கருவிகள், புழங்குபொருட்கள், அணிகலன்கள் போன்றவை இடம்பெறுகின்றன.
- சமுதாய அமைப்புகளுக்கு அடித்தளமாக விளங்குவதில் குடும்பம் முதன்மையிடம் பெறுகிறது.
- குடும்பத்திலுள்ள, தந்தை-மகன்; தந்தை-மகள் ; தாய்-மகன்; தாய்-மகள்; கணவன்-மனைவி போன்ற உறவுமுறைகள் புதினங்களில் பதிவாகியுள்ளன.
- பார்த்திபன் கனவில், தந்தை-மகன்; தந்தை-மகள்; தாய்-மகன்; கணவன்-மனைவி போன்ற உறவுமுறைகள் சிறப்பானதாகவும், தாய்-மகள் உறவுமுறை குறையுடையதாகவும் படைக்கப் பட்டுள்ளன.
- சிக்கவீரஇராஜேந்திராவில், தந்தை-மகள்; தாய்-மகன்; தாய்-மகள் உறவுமுறைகள் சிறப்பானதாகவும், தந்தை-மகன்; கணவன்-மனைவி உறவுமுறைகள் குறையுடையதாகவும் படைக்கப்பெற்றுள்ளன.

- இன்று சமூகத்தில் நிலவும் பலபிரச்சினைகளில் தலையானது சாதிக் கொடுமை. தொழில் அளவில் ஏற்பட்ட சாதி நாளடைவில் மேல்சாதி, கீழ்சாதி எனப் பிரிந்திருப்பதை இவ்விருப் புதினங்களும் சாதிய நிலைகளாகச் சுட்டுகின்றன.
- சமயம் என்பதற்கு மதம் எனவும் பொருளுண்டு, சமயம் ஒரு வாழ்வியல் கலை. அது வாழ்வாங்கு வாழக் கற்றுத் தருகிறது. இரண்டு புதினங்களிலும் சைவ, வைணவக் கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. சிக்கவீர இராஜேந்திராவில் கிறித்துவ மதம் பற்றியும் கூறப்படுகிறது. மக்கள் சமுதாயத்தில் இருக்கும் குறைகள், நிறைகள், அவர்தம் வாழ்க்கை நிலை என்ற எதையும் கல்கி-மாஸ்தியின் வரலாற்றுப் புதினங்களில் காணமுடியவில்லை. பெரும்பாலும் அரச குடும்பத்தினரையும், அவர்தம் அரசியல் நிலைகளையும், நிருவாகம், சூழ்ச்சி, பாதுகாப்பு, அறிவாற்றல் போன்றவற்றையும் வெளிப்படுத்தியுள்ளனர்.
- அரச உரிமை வழிவழியாக வருவது என்பதை இரு ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் எடுத்துக்காட்டுகின்றனர். அரசியல் நிலையில் மன்னருக்கு அடுத்த நிலையில் இன்றியமையாத இடத்தைப் பெறுபவர் அமைச்சர் என்பது சுட்டப்பெற்றுள்ளது.
- கல்கி சோழ மன்னர்களின் ஆட்சிமுறைக் குறித்தும், மாஸ்தி குடவ மற்றும் ஆங்கிலேயர்களின் ஆட்சிமுறைக் குறித்தும் தம் புதினங்களில் பதிவுசெய்துள்ளனர்.
- அக்காலச் சுரங்கப் பாதைகள் நகர்ப்புறத்துக்கும், நிலவறைக்கும், பாதாளச் சிறைக்கும், அரண்மனைக்கும் வழியமைப்பனவாக இருந்தன. அரசியல் சிக்கலில் மற்றவர்களுக்குத் தெரியாமல், ஒருவரை மறைத்து வைக்கப் பாதாளச் சிறைகள் துணைநின்றன. அரசியல் கருவூலத்தைப் பாதுகாக்க நிலவறைகள் உதவின.
- குற்றம் செய்தவர்கள் தண்டனைக்குள்ளாயினர். இது பழிக்குப் பழிவாங்கவதற்கு அல்ல. இனி அக்குற்றங்கள் நடவாமல் தடுப்பதற்குத் தீர்வு காண்பதற்கு ஆகும்.

- மக்கள் வாழ்க்கையோடு இரண்டறக் கலந்தவை நம்பிக்கையும், பழக்கவழக்கங்களும் ஆகும். ஒவ்வொரு மனிதனும் ஏதேனும் ஒரு தொழில் செய்பவனாக இருக்கிறான்.
- கல்கியின் புதினத்தில், சிவன், பார்வதி, விநாயகர், முருகன், விஷ்ணு, காளி ஆகிய தெய்வங்களும், சிக்கவீரஇராஜேந்திராவில் கருங்காளி, ஓங்காரேஸ்வரர், விசுவேஸ்வரர், அம்பிகை போன்ற தெய்வங்களும் இடம்பெற்றுள்ளனர்.
- வழிபாடும் விழாக்களும் இல்லாத கோயில்கள் இல்லை. அரசப் பரம்பரை அணிகலன்களுக்கெனத் தனிச் சிறப்புண்டு ஆகியனவும் பதிவுசெய்யப்பெற்றுள்ளன.
- உணவு முறைகளில் கம்பு, கீரைக் குழம்பு போன்றவை பார்த்திபன் கனவிலும், மோர்க்குழம்பு, நெய்சோறு போன்றவை சிக்கவீர இராஜேந்திராவிலும் பதிவுசெய்யப்பட்டுள்ளது.
- பட்டத்து யானை, குதிரைகள் பற்றிய செய்திகளும், பல்வேறு அரண்மனைக் கருவிகள் பற்றிய செய்திகளும் இரண்டு புதினங்களிலும் இடம்பெற்றுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1. ந.பிச்சமுத்து, டாக்டர் மு.வ. புதினங்களில் சமுதாய மறுமலர்ச்சியின் தாக்கம், ப.8
2. Dravit Drezler, Critical Approches in literature, P.28
3. மாலினி, உலகத் தமிழாக்க ஆய்வுக் கோவை, தொகுதி-7, ப.22
4. சி.இ.மறைமலை, இலக்கியமும், சமூகவியலும், ப.19
5. அ.குழந்தைசாமி, இருபதாம் நூற்றாண்டு கிறித்துவப் புதினங்களில் மனித விடுதலை, ப.39
6. அ.சிவக்கண்ணன், மு.வ.நூல்களில் சமுதாயச் சிக்கல்கள், ப.17
7. தாயம்மாள் அறவாணன், தமிழ் சமூகவியல் ஒருக் கருத்தாடல்
8. அகிலன், எனது நாவல்களில் சமுதாயச் செய்தி எனும் கட்டுரை, பக்.63,64
9. கோ.வெ.கீதா, தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம், ப.58

10. மா.செல்வராசன், பாரதிதாசன் ஒருப் புரட்சிக் கவிஞர், ப.22

11. இரா.மோகன், டாக்டர் மு.வ.வின் நாவல்கள், ப.124

12. சு.சக்திவேல், நாட்டுப்புறவியல், ப.245

13. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.12

14. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.76

15. வெ.கனகசுந்தரம், ஜெகசிற்பியின் சமூகப் புதினங்கள், ப.126

16. A Chidambaram Chettiar English Tamil Dictionary, P.961

17. நா.பாலுச்சாமி, வாழ்வியல் களஞ்சியம், ப.30

18. The great lifco Dictionary, English Tamil, P.960

19. பாவனந்தர் தமிழ்ச் சொல்லகராதி, ப.184

20. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், பக்.28-30

21. கல்கி, பார்த்திபன் கனவு, ப.54

22. மேலது, ப.54

23. மேலது, ப.54

24. மேலது, ப.365

25. மேலது, ப.365

26. மேலது, ப.367

27. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.486

28. மேலது, ப.486

29. கா.அப்பாத்துரை, இன்பத்துள் இன்பம், ப.18

30. மார்க்ஸ் ஏங்கெல்ஸ், தேர்வு நூல்கள் தொகுதி - 2, ப.956

31. பாஸ்கல் கிஸ்பர்ட் எக்.ஜே., சமூகவியல் அடிப்படைக் கோட்பாடுகள், ப.96

32. திருக்குறள், 45

33. திருக்குறள், 70

34. கல்கி, பார்த்திபன் கனவு, ப.41

35. மேலது, ப.42

36. மேலது, ப.44

37. மேலது, ப.54

38. மேலது, ப.62

*39. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.49*

*40. கல்கி, பார்த்திபன் கனவு, ப.88*

*41. மேலது, ப.88*

*42. மேலது, ப.76*

*43. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.152*

*44. திருக்குறள், 69*

*45. கல்கி, பார்த்திபன் கனவு, ப.232*

*46. மேலது, ப.106*

*47. மேலது, ப.106*

*48. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.471*

*49. மேலது, ப.7*

*50. தொல்.பொருள்.செய். நூ.எ.179*

*51. நாற்கவிராச நம்பி, அகப்பொருள் விளக்கம், நூ.எ.202*

*52. கலித்தொகை, ப.95*

*53. கல்கி, பார்த்திபன் கனவு, ப.34*

*54. மேலது, ப.38*

*55. மாஸ்தி, சிக்கவீரஇரஜேந்திரன், ப.41*

*56. க.மோகன், பொன்னான அடிகளார், ப.30*

*57. புறநானூறு, பா.எண்.35, பா.வரி.7, பக்.510*

*58. க.மோகன், பொன்னான அடிகளார், பக்.30, 31*

*59. பாரதியார் கவிதைகள், சுயமரியாதை, ப.468*

*60. மேலது, சுதந்திரப் பள்ளு, ப.168*

*61. பாரதிதாசன் கவிதைகள், சுயமரியாதை, ப.468*

*62. கல்கி, பார்த்திபன் கனவு, ப.44*

*63. மேலது, ப.45*

*64. மாஸ்தி, சிக்கவீரஇரஜேந்திரன், ப.46*

*65. மேலது, ப.47*

*66. மேலது, ப.477*

*67. மேலது, ப.477*

*68. பொன்னம்பல அடிகளார், சமய வாழ்வு, ப.167*

*69. முனைவர் ரவீந்திரக்குமார், மதமும், உலகசமாதானமும், ப.8*

70. மேலது, ப.9
71. கல்கி, பார்த்திபன் கனவு, ப.90
72. மேலது, ப.114
73. மேலது, ப.114
74. மேலது, ப.114
75. மேலது, ப.350
76. மேலது, ப.350
77. மேலது, ப.350
78. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.108
79. மேலது, ப.109
80. மேலது, ப.109
81. மேலது, ப.266
82. மேலது, ப.266
83. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்றுப் புதினங்கள் ஓர் ஒப்பீடு, ப.326
84. கல்கி, பார்த்திபன் கனவு, ப.145
85. மேலது, ப.145
86. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்றுப் புதினங்கள் ஓர் ஒப்பீடு, ப.334
87. கல்கி, பார்த்திபன் கனவு, ப.161
88. மேலது, ப.161
89. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்றுப் புதினங்கள் ஓர் ஒப்பீடு, ப.342
90. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.19
91. கல்கி, பார்த்திபன் கனவு, ப.20
92. மேலது, ப.21
93. மேலது, ப.183
94. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.9
95. கல்கி, பார்த்திபன் கனவு, ப.37
96. மேலது, ப.149
97. மேலது, ப.325

98. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.265

99. மேலது, ப.265

100. மேலது, ப.265

101. கல்கி, பார்த்திபன் கனவு, ப.37

102. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.313

103. மேலது, ப.373

104. மேலது, ப.485

105. மேலது, ப.494

106. கல்கி, பார்த்திபன் கனவு, ப.77

107. மேலது, ப.78

108. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.253

109. மேலது, ப.253

110. கல்கி, பார்த்திபன் கனவு, ப.49

111. மேலது, ப.51

112. மேலது, ப.68

113. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.261

114. கல்கி, பார்த்திபன் கனவு, ப.7

115. மேலது, ப.79

116. மேலது, ப.204

117. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.22

118. மேலது, ப.22

119. கல்கி, பார்த்திபன் கனவு, ப.151

120. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.201

121. கல்கி, பார்த்திபன் கனவு, ப.203

122. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.190

123. கல்கி, பார்த்திபன் கனவு, ப.91

124. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.23

125. மேலது, ப.23

126. மேலது, ப.23.

# வரலாற்றுக் கூறுகள்

## முன்னுரை

புதினத்தில் இடம்பெறும் சமூகம், புராணம், தொன்மம், தலித்தியம், பெண்ணியம் எனும் பல்வேறு கூறுகளில் ஒன்று வரலாற்றுக் கூறுகள். இத்தகைய வரலாற்றுக் கூறுகள் கல்கியின் பார்த்திபன் கனவிலும், மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவிலும் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதைக் கண்டறியும் விதமாக இவ்வியல் அமைந்துள்ளது.

புதினங்கள் சமூக, வட்டார, துப்பறியும் புதினங்கள் எனப் பல வகைப்படும். அவற்றுள் ஒன்று வரலாற்றுப் புதினம் "வரலாற்றை அப்படியே எழுதுவது வரலாற்றுப் புதினம் அன்று. வரலாற்று ஆசிரியருக்கும் வேண்டியது என வரலாற்று வல்லுநர் குறிக்கும் கற்பனையை வரலாற்றில் இடம்பெற்ற முக்கிய நிகழ்ச்சிகளுடன் பின்னும்பொழுதுதான் வரலாற்றுப் புதினம் உருவாகிறது"[1] என்று இரா.பாலசுப்பிரமணியன் கூறுகிறார்.

கற்பனையின் சேர்க்கையால் புதினம் வரலாற்றிலிருந்து வேறுபட்டுத் தனித்த ஓர் இலக்கியப் படைப்பாக ஆகிறது. அவ்வாறு அமையும் வரலாற்றுப் புதினங்களில் ஆசிரியர்கள் வரலாற்று உண்மைகளைப் புள்ளியாக ஆங்காங்கே அமைத்து, அவற்றைச் சுற்றித் தம் புனைவுகளை இழைகளாக இணைத்து வலராற்றுப் புதினம் என்ற எழில் மிகுந்த கோலத்தை உருவாக்குகின்றனர்.

## வரலாறு

கடந்த கால முக்கிய நிகழ்வுகள் வரலாறு என்று கூறப்படுகிறது. "ஒவ்வொருவருக்கும், ஒவ்வொன்றிற்கும் 'கடந்த காலம்' என்ற ஒன்று உண்டு. நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் கடந்த காலம் என்பது ஓர் உண்மை தான்"[2] என்பர்.

இலக்கியம் அது தோன்றும் காலத்தில் மட்டுமல்லாது பல காலங்கடந்தும் நிலைத்து நிற்றல் வேண்டும். "நிகழ்காலத்தின்

மூலத்தைக் கடந்த காலத்திலும், விளைவுகளை எதிர்காலத்திலும் தேடுவது தவிர்க்க முடியாதது. நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும் சீர்படுத்த விரும்புவோர்க்கும், சீர்கேடுகளைத் தவிர்க்க விரும்புவோருக்கும், கடந்த காலத்தைப் பற்றிய அறிவும், புரிதலும், உணர்வும் பயனுள்ளவையாக அமையும். அத்தகைய 'கடந்தகால அறிவு- தெளிவு - உணர்வு,' இவற்றைத்தான் வரலாறு என்று குறிப்பிட வேண்டும்"[3] என்பர்.

"வரலாறு என்பது கடந்த காலத்தை மட்டும் கூறுவதன்று. இன்றைய செய்திகள் கூட நாளைய வரலாறாக மாறிவிடும். மேலும் வரலாறு என்றால் அது மன்னர்களையும் அவர்களது அந்தரங்கங்களையும், வெற்றி தோல்விகளையும் மட்டும் பேசுவதன்று. கடந்தகாலச் செய்திகள் நிகழ்காலத்தில் நிரல் படுத்தப்பட்டு வருங்காலத்திற்கு இலட்சிய வாழ்க்கையை எடுத்தியம்புவதே வரலாற்றின் செயல்பாடாக இருக்க வேண்டும்"[4] என்று குறிப்பிடுகின்றனர்.

"சேர, சோழ, பாண்டிய வரலாறு என்னும் முப்பகுதியாக இருந்த தமிழகத்தின் வரலாறு பின்பு பல்லவர் வரலாறு, நாயக்கர் வரலாறு, கொங்கர் வரலாறு என்று பல பிரிவுகளாகப் பிரிந்து முழுமை பெற்றது"[5] என்று மு.உலகநாதன் கூறுகிறார்.

"நமது பழைய வரலாறு என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட கற்பனைகள் என்பதைத் தவிர அதற்கு மேலாக எதுவும் இல்லை"[6] என வால்டேர் கூறுகிறார். வரலாறு என்பது யார், என்ன, எப்பொழுது, எங்கே, ஏன், எப்படி என்னும் ஆறு கேள்விகளுக்கு விடையளிப்பனவாக இருக்க வேண்டும்.

**யார்**

ஒரு நிகழ்வு நடக்கும்போது, அது 'யாரால்,' யாருக்காக நடந்தது என்னும் கேள்விக்கு விடையளிக்க வேண்டும்.

**என்ன**

அந்நிகழ்வில் 'என்ன' நடைபெற்றது என விளக்கம் தரவேண்டும்.

**எப்பொழுது**

'எப்பொழுது' ஒரு நிகழ்வு நடைபெறுகிறது என்பதற்குப் பதிலளிக்க வேண்டும்.

**எங்கே**

'எங்கே' அந்நிகழ்வு நடைபெற்றது எனக் கூறவேண்டும்.

**ஏன்**

'ஏன்' அந்நிகழ்வு நிகழ்ந்தது என காரண விளக்க வேண்டும்.

**எப்படி**

அந்நிகழ்வானது 'எப்படி' நடைபெற்றது என்பதற்குப் பதிலளிக்க வேண்டும்.

மேற்கூறிய ஆறு வினாக்களுக்கும் விடையளிக்கும் வகையில் ஒரு வரலாறானது அமையவேண்டும்.

**வரலாற்றுப் புதினம்**

புதினங்கள் பலவகைப்படும். அவை,

- சமூகப் புதினம்
- வட்டார புதினம்
- துப்பறியும் புதினம்
- தலித்தியப் புதினம்
- வரலாற்றுப் புதினம்

என்பனவாகும். இவற்றுள் வரலாற்றுப் புதினம் என்பதற்கு, உண்மைகளை வைத்துக்கொண்டு, கற்பனையில் உருவாக்குவது என்பது நேரடியாகச் சொல்லும் பொருளாகும்.

முதல் புதினமாகிய 'மோகனாங்கி'யை அடுத்து, 1895-க்குப் பின்னுள்ள ஆண்டுகளில் பல சரித்திரக் கதைகள் வெளிவந்துள்ளன. கல்கியின் அலைஓசை (1948), சிவகாமியின் சபதம் (1946),

பொன்னியின் செல்வன் (1950), அகிலனின் வேங்கையின் மைந்தன் (1961), ஜெகசிற்பியின் திருச்சிற்றம்பலம் (1958), சாண்டில்யனின் ஜலதீபம் (1973), கோ.வி.மணிசேகரனின் வேங்கை வனம், சேரன், குலக்கொடி, விக்கிரமனின் நந்திபுரத்து நாயகி, மு.கருணாநிதியின் ரோமாபுரிப் பாண்டியன் போன்றவை தமிழ் வரலாற்றுப் புதினங்கள் வரிசையில் இடம்பெற்றுள்ளன.

இதேபோல, "கெம்பு நாராயணா எனும் கவிஞரின் முத்ராமஞ்சூஷ (1823), குல்வாடி வெங்கட்ராயரின் இந்திராபாய் அல்லது சத்தர்மவிஜயா (நன்னெறியின் விளக்கம்) (1899), எம்.எஸ்.புட்டண்ணா அவர்களின் மாடித்துண்ணோ மகாராயா (1915) போன்றவை"[7] கன்னட வரலாற்றுப் புதினங்கள் வரிசையில் இடம்பெற்றுள்ளன.

"1915 முதல் 1947 வரையிலான காலப்பகுதியில் கன்னடத்தில் ஏறக்குறைய நூறு மூலப் புதினங்கள் வெளிவந்தன"[8] என்பர்.

## வரலாற்றுப் புதினங்களில் வரலாற்றுக் கூறுகள்

வரலாற்றுப் புதினங்கள் பெரும்பாலும் மன்னர்களின் காதல், வீரம், அரசியல், போர், படையெடுப்பு, வெற்றி, தோல்வி, சூழ்ச்சி போன்றவற்றை விளக்குவனவாக இருக்கின்றன. இவற்றின் மூலம் அக்கால மன்னர்களின் வாழ்க்கை முறையினைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

வரலாற்றுப் புதினங்களைப் படைப்பதில் கல்கி தனக்கென ஒரு பாணி அமைத்துக் கொண்டதைப் போல, கன்னடத்தில் மாஸ்தியும் தனக்கென ஒரு பாணியை அமைத்துக்கொண்டார். இதன் மூலம் இருவரின் புதினங்களும் காலங்கடந்து நிற்கின்றன.

வரலாற்றுப் புதினத்தின் வரலாற்றுக் கூறுகளாக வரலாற்று மாந்தர்கள், நிகழ்வுகள், இடங்கள், காலம் போன்றவை சுட்டப்படுகின்றன. இவை யாவும் கல்கியின் பார்த்திபன் கனவிலும், மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவிலும் சிறப்பான முறையினில் இடம்பெற்றுள்ளன.

## வரலாற்று நிகழ்வுகள்

கடந்தகால இன்றியமையாத நிகழ்வுகள், செய்திகள் வரலாறாகின்றன. "வரலாற்று நிகழ்ச்சிகளையும், வரலாற்று மாந்தர்களையும் படைக்கும்பொழுது, நாவலாசிரியர் அக்கால அமைப்புத் தன்மைக்கு மாறுபடா வகையில் விழிப்புடன் எழுதுவது போன்றே தம்காலச் சூழ்நிலையையும், மக்களின் மனப்போக்கினையும் நன்கு அறிந்தவராக இருத்தல் வேண்டும். தாம் எடுத்துக்கொண்ட வரலாற்றுக் காலச் சித்திரிப்பில் தம் கால மக்களின் எண்ண அமைப்பு முறைக்கு மாறுபட்ட சூழ்நிலை இருப்பின் அவற்றை விரிக்காமல் விடுவதே நன்மை பயக்கும். இதனை உணராத நிலையில் புதினத்தைப் படைக்கும் பொழுது, ஆசிரியர் தம் கால மக்களின் தாக்குதலுக்கு ஆளாக வேண்டியிருக்கும். வரலாற்றுக்கால அறிவோடு, தம் கால நிலையினை உணர்வுப் பூர்வமாக அறிந்தவராக இருத்தல் இன்றியமையாதது"[9] எனக் குறிப்பிட்டுள்ளனர்.

கல்கி, மாஸ்தி இருவரும் வரலாற்றில் காணப்படும் சுவையான நிகழ்ச்சிகளைத் தத்தம் புதினத்திற்குரிய வரலாற்றுக் கூறுகளாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். மேலும், இலக்கியங்களையும், புராணங்களையும் வேண்டுமிடத்துப் பயன்படுத்தித் தம் புதின வடிவத்திற்குப் பொலிவூட்டியுள்ளனர்.

மாஸ்தி தாம் எடுத்துக்கொண்ட சில வரலாற்று நிகழ்ச்சிகளைச் சுற்றிக் கதையைப் பின்னுகிறார். கல்கியோ அவ்வாறு பின்னுவதோடு நில்லாமல் பல வரலாற்று நிகழ்வுகளை ஆங்காங்கே குறிப்பிட்டும், விளக்கியும் செல்கிறார். எனவே கல்கியின் புதினத்தில் வரலாற்று நுணுக்கமான செய்திகளைக் காணமுடிகின்றது.

## கல்கியின் புதினத்தில் வரலாற்று நிகழ்வுகள்

தமிழில் வரலாற்றுப் புதினங்கள் என்றவுடன் முதலில் நினைவுக்கு வருபவர் கல்கி எனலாம். "கல்கியின் 'பார்த்திபன் கனவு' ஒரு சில வரலாற்று மாந்தர்களை மட்டும் கொண்டு முழுக் கற்பனை வடிவம் கொண்ட படைப்பாகும். கல்கி அடிமைப்பட்டுக் கிடந்த நாடு

விடுதலை பெற வேண்டுமென்ற பேராவல் கொண்டவர். இவர் பல்லவரின் பெரும்பலத்தால் வீழ்ச்சியுற்ற சோழர், எழுச்சியுற்று உரிமை வேட்கையில் போராடும் நிலையைச் சித்திரித்து, பிற்காலச் சோழ மன்னர்களின் சிறப்பினைப் பார்த்திப சோழ மன்னரின் கனவாக்கி, இந்திய விடுதலைப் போராட்டங்களை இடையே இணைத்துப் படைத்த புதினத்திற்குப் 'பார்த்திபன் கனவு' எனப் பெயரிட்டுள்ளார்."[10] புதினத்தில், வரலாற்று நிகழ்வுகளாக,

- நரசிம்ம பல்லவரின் வாதாபி வெற்றி
- நரசிம்மர் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம்
- சீன வழிபோக்கர் யுவான்- சுவாங் காஞ்சி வருகை

போன்றவற்றைச் சுட்டிக் காட்டியுள்ளார். அவற்றைப் பற்றி இங்கு விரிவாகக் காணலாம்.

### நரசிம்ம பல்லவரின் வாதாபி வெற்றி

அந்தக் காலத்தில் நரசிம்மவர்ம சக்கரவர்த்தியின் புகழ் எண்டிசையிலும் பரவியிருந்தது. பாரத நாடெங்கும் அவருடைய கீர்த்தி வியாப்பித் திருந்ததோடு, கடல் கடந்து வெளிநாடுகளுக்கும் சென்றிருந்தது. தெற்கே காவேரியாற்றங்கரையிலிருந்து வடக்கே கிருட்டிணா நதிக்கரை வரையில் பல்லவர்களின் சிங்கக் கொடி கம்பீரமாகப் பறந்தது. அந்தப் பிரதேசத்திலுள்ள மக்கள் எல்லாரும் நரசிம்மரிடம் அளவில்லாத பக்தி கொண்டிருந்தார்கள்.

அறிவிலும், வீரத்திலும், தயாளக் குணத்திலும், நடுநிலையான நீதி வழங்குவதிலும், குடிகளின் நலன்களைக் கண்ணுங் கருத்துமாய்ப் பாதுகாப்பதிலும், சிற்பம், சித்திரம், சங்கீதம் முதலிய கலைகளை வளர்ப்பதிலும் நரசிம்மர் மிகச் சிறந்து விளங்கியது பற்றி அவருடைய பிரஜைகள் மிக்கப் பெருமைக் கொண்டிருந்தார்கள் என விவரித்துக் காட்டியுள்ளார்.

"வடக்கே நர்மதை நதிக்கரை வரையில் படையெடுத்துச் சென்று பொல்லாத 'புலிகேசியை'ப் போரில் கொன்று, வாதாபி நகரையும் தீக்கிரையாக்கிவிட்டு வந்ததன் பின்னர், மாமல்ல சக்கரவர்த்தியைப்

பற்றி அவருடைய குடிகள் கொண்டிருந்தப் பெருமைப் பன்மடங்கு பெருகியிருந்தது"[11] என்கிறார்.

தட்சிண தேசத்தில் நரசிம்மவர்மரைப் போல் ஒரு சக்கரவர்த்தி இதுவரையில் தோன்றியதுமில்லை, இனிமேல் தோன்றப் போவதுமில்லை! என்று அந்தக் காலத்தில் பல்லவ சாம்ராஜ்யத்தில் வாழ்ந்த மக்கள் நம்பினார்கள். இவ்வாறு, நரசிம்மரின் பெருமைகள் பற்றியும், அவரின் வாதாபி வெற்றி பற்றியும் எடுத்துக்காட்டியுள்ளார்.

கபால பைரவனின் நரபலிக் கொடுமையைக் கண்டறிந்து, அவனைச் சிறைப்பிடித்தச் சிறுத்தொண்டர், பின்னர் மக்களைப் பார்த்துப் பேசலுற்றார். அப்போது, "இருபது வருஷத்துக்கு முன்னால்-வாதாபி அரசன் புலிகேசி நமது தமிழகத்தின் மீது படையெடுத்துவந்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?"[12] என்று சிறுத்தொண்டர் கேட்டு நிறுத்தியபோது, பலகுரல்கள் 'ஞாபகம் இருக்கிறது!' என்று கூவின. பின்னர் சிறுத்தொண்டர், "அந்த ராட்சதப் புலிகேசியும் அவனுடைய படைகளும் நம்பிக்கைத் துரோகம் செய்து, இச்செந்தமிழ் நாட்டின் பட்டணங்களிலும், கிராமங்களிலும், செய்துவிட்டுப்போன அட்டூழியங்களையெல்லாம் நீங்கள் மறந்திருக்க முடியாது. மகேந்திர சக்கரவர்த்தி காலமான பிற்பாடு தருமராஜாதிராஜ நரசிம்ம பல்லவரும், நானும் பெரும்படை கொண்டு புலிகேசியைப் பழிவாங்குவதற்காக வாதாபிக்குப் படையெடுத்துச் சென்றோம். அங்கு வாதாபி நகரத்தின் முன்னால் நடந்த கொடிய யுத்தத்தில், நமது வீரத் தமிழ்ப்படைகள் புலிகேசியின் படைகளையெல்லாம், ஹ தா ஹ தம் செய்தன"[13] எனக் கூறி நரசிம்மரின் வாதாபிப் போர் வெற்றி பற்றிய செய்திகள் சிறப்பாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

## நரசிம்மர் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம்

மகேந்திர பல்லவர் காலத்திலும், நரசிம்மவர்மரின் காலத்திலும் தமிழ்நாட்டில் சைவமும், வைணவமும் தழைத்து வளர்ந்தன. இவ்விரு சமயங்களும், அன்பையும், சீவகாருண்யத்தையும் அடிப்படையாகக் கொண்டவை. அப்போது தேய்ந்துப் போய்க் கொண்டிருந்த ஜைன,

பௌத்த சமயங்களின் நல்ல கூறுகளையெல்லாம் சைவ, வைணவ மதங்களில் ஏற்கப்பட்டிருந்தன. அவற்றுடன் சிவபக்தியும், கண்ணன் காதலும் சேர்ந்து தமிழ்நாட்டைத் தெய்வத் திருநாடாகச் செய்துவந்தன.

"அப்பர், சம்பந்தர் முதலிய சைவ சமய குரவர்களும், வைணவ ஆழ்வார்களும் தெய்வீகமானப் பாடல்களைப் பாடி நாடெங்கும் பக்தி மதத்தைப் பரப்பிவந்தார்கள். சிவன் கோயில்களும், பெருமாள் கோயில்களும் அற்புத சிற்பக் கனவுகளைப் போல் தோன்றி வளர்ந்துவந்தன"[14] என்கிறார்.

ஒருபுறம் இப்படிப்பட்ட அன்பு - மதங்கள் பெரும்பாலான மக்களிடையே பரவி வருகையில், மிகச் சிலரான மக்களிடையே நரபலியைத் தூண்டும் பயங்கரமான கபாலிகம், சாக்தம், பைரவம் என்னும் மதங்கள் அமைதியாக வேரூன்றி வந்தன.

இந்த மதங்களை ஆதரித்தவர்கள், மிதமிஞ்சிய மூட நம்பிக்கையை வளர்த்தார்கள். மூடபக்திக் காரணமாக அவர்கள் காளிக் கோயில்களிலும், துர்க்கைக் கோயில்களிலும், தங்களுடைய சிரங்களைத் தாங்களே அநாயாசமாக வெட்டி எறிந்து கொண்டார்கள். "இப்படித்தங்களைத் தாங்களே பலிகொடுத்துக் கொள்வதால் அடுத்த ஜென்மத்தில் மகத்தானப் பலன்களை அடையலாமென்று நம்பினார்கள். இம்மாதிரி நம்பிக்கைகளை வளர்ப்பதற்குப் பூசாரிகளும் இருந்தார்கள். ஆங்காங்கு அடர்ந்தக் காடுகளிலும், மனிதர்கள் எளிதில் புகமுடியாத மலைப் பிரதேசங்களிலும் காளி கோயில்களையும், துர்க்கைக் கோயில்களையும் இவர்கள் நிறுவினார்கள்"[15] என்கிறார்.

மகேந்திரப் பல்லவரின் காலத்தில் வடக்கே வாதாபியிலிருந்து புலிகேசி என்பவன் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்தபோது, அவனுடைய சைன்யங்களுடன் மேற்கூறிய தீவிர மதங்கள் தமிழ்நாட்டில் புகுந்தன. பிறகு "புலிகேசி திரும்பிப் போன அடியோடு ஒருமுறையும், நரசிம்மப் பல்லவர் வாதாபிக்குப் படையெடுத்துச் சென்ற காலத்தில் ஒருமுறையும், தமிழகத்தில் கொடும் பஞ்சங்கள்

தோன்றி மக்களை வருத்தின."[16] இந்தக் காலங்களில் மேற்கூறிய நரபலி மதங்களும் அதிகமாக வளர்ந்தன.

கல்கியவர்கள், இவ்வாறு நரபலி என்னும் கொடுமையைப் பற்றிக் கூறும்போது மகேந்திரவர்மன் காலத்திலும், நரசிம்மவர்மன் காலத்திலும் ஏற்பட்டப் பஞ்சங்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகளை எடுத்துரைக்கின்றார்.

**சீன வழிப்போக்கர் யுவான் சுவாங் காஞ்சி வருகை**

'நிஜமாக நீதான?' என்னும் அத்தியாயத்தில் உடல்நிலை சரியில்லாத விக்கிரமனைக் காப்பாற்றிய குந்தவியும், காப்பாற்றப்பட்ட விக்கிரமனும், உரையாடிக்கொண்டிருந்தார்கள். அப்போது, குந்தவி தன்னை 'ரோகிணி' என அறிமுகம் செய்வித்திருந்தாள்.

பின்னர், குந்தவி விக்கிரமனிடம், உன்னைக் காப்பாற்றியது நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தேவி என்கிறாள். அதற்கு விக்கிரமன் ஒன்றும் கூறாமல் இருக்கவே, "சக்கரவர்த்தியின் மகளைப் பற்றி நான் இவ்வளவு சொல்கிறேன். ஒரு வார்த்தையாவது நீர் நன்றி தெரிவிக்க வில்லையே? அவ்வளவு கல் நெஞ்சமா உமக்கு?"[17] என்கிறாள். அதற்கு விக்கிரமன், பல்லவ குலத்தைச் சேர்ந்த யாருக்கும் நான் நன்றி செலுத்த முடியாது! என்கிறான்.

பின்னர் "இப்போது இந்த மாளிகையில் அவர்கள் இருவரும் இருக்கிறார்களா?"[18] எனக் கேட்ட விக்கிரமனிடம் குந்தவி "யார் இருவரும்"[19] என்கிறாள். அதற்கு விக்கிரமன் "அண்ணனும் தங்கையும்"[20] என்கிறான். இதற்குக் குந்தவி, "யுவராஜா மகேந்திரர் இங்கே இல்லை, அவர் திரும்பவும் காஞ்சிக்குப் போய்விட்டார். சீன தேசத்திலிருந்து யாரோ ஒரு யாத்திரிகர் வந்திருக்கிறாராம், அவர் இந்தப் பாரத நாடு முழுவதும் யாத்திரை செய்துவிட்டுக் காஞ்சிக்கு வருகிறாராம். 'யுவான் சுவாங்' என்ற விசித்திரமான பெயரையுடையவராம். சக்கரவர்த்திக்கு இச்சமயம் முக்கிய வேலை வந்திருப்பதால், அந்த யுவான் சுவாங்கை உபசரித்து வரவேற்பதற்காக யுவராஜா உடனே வரவேண்டுமென்று செய்தி வந்தது. இங்கு வந்த

இரண்டாம் நாளே மகேந்திரர் புறப்பட்டுப் போய்விட்டார்"[21] எனக் கூறினாள். இவ்வாறு விக்கிரமன், குந்தவியின் சந்திப்பு, உரையாடலின் போது, சீனத் தேசத்திலிருந்து யுவான் சுவாங் என்பவர் காஞ்சி நகருக்கு வந்தார் என்னும் வரலாற்றுச் செய்தி கல்கியால் பார்த்திபன் கனவில் சிறப்பான முறையினில் எடுத்தாளப்பட்டுள்ளது.

## மாஸ்தியின் புதினத்தில் வரலாற்று நிகழ்வுகள்

மாஸ்தியின் புதினமான சிக்கவீர இராஜேந்திராவிலும் வரலாற்று நிகழ்வுகள் சிறப்பான முறையினில் கூறப்பட்டுள்ளன. அவை, "மன்னனின் தங்கையும், மைத்துனனும் கம்பெனியாரிடம் அடைக்கலம் ஆனது 2)மன்னன் கேட்டுக் கொண்டபடி அவர்களைக் கம்பெனி விட்டுவிடாமல் பெங்களூரில் வைத்திருந்தது; 3)வீர இராஜேந்திரனின் செயல், அநியாயங்களைப் பற்றிப் புகார் வந்திருக்கிறது என்று சென்னை ஆளுநர் கடிதம் எழுதியது; 4)கம்பெனியின் பிரதிநிதிகளில் கருணாகர மேனன் என்பவனை அரசன் கைது செய்தது; 5)கம்பெனிப் படைகள் குடகை முற்றுகையிட்ட போது, அமைச்சர் போபண்ணா கர்னல் பிரேசரிடம் சேர்ந்தது; 6)அரசன் கைதியானதும், இங்கிலாந்து சென்றதும்; 7)அவன் மகள் கிறித்துவ மதத்தைச் சேர்ந்தது;"[22] என இவை வரலாற்று நிகழ்வுகளாகக் காணப்படுகின்றன.

## 1. தேவம்மாஜி, சென்னபசவன் கம்பெனியாரிடம் அடைக்கலம்

வீரராஜன் அப்பங்கொளத்து அரண்மனையைக் காவலர்களால் முற்றுகையிடச் செய்து, தன் தங்கையையும், மைத்துனனையும் சிறைபிடித்தான். அவர்கள் இருவரும் அரண்மனையை விட்டு வெளியேறாதபடிச் செய்தான். வீரராஜனிடமிருந்து தப்பிக்க எண்ணிய அவனது மைத்துனனான சென்னபசவன், கூடிய மட்டிலும் சீக்கிரமாக நாட்டை விட்டுப் பெங்களூருக்குப் பயணம் புறப்படும் ஆயத்தத்தைத் தொடங்கினான்.

தன் மனைவியும், வீரராஜனின் தங்கையுமான தேவம்மாஜியிடம் தனிமையில் இந்த யோசனையைத் தெரிவித்து, "இன்றைக்கோ,

நாளைக்கோ புறப்பட்டுவிடலாம். புறப்படுவதற்குத் தயாராயிரு"[23] என்றான். அதற்குத் தேவம்மாஜி, "பெங்களூருக்குப் போக வேண்டுமா?"[24] எனக் கேட்டாள். உடனே சென்ன பசவய்யன், தன் மனைவியிடம், "ஆமாம் அதிகாரியிடம் சொல்லியிருக்கிறேன் அவர் நமது சார்பில் காரியம் நடத்துவார். உன் தமையன் புத்திசாலித்தனமாக நடந்துகொள்வதாக வாக்குக் கொடுத்தால் திரும்பி வரலாம். பிடிவாதம் செய்தால், அவனைப் பட்டத்திலிருந்து நீக்கி நீ அரசியாக வரவேண்டும்"[25] எனக் கூறி இருவரும் தன் குழந்தையுடன் அப்பங் கொளத்து அரண்மனையிலிருந்துத் தப்பிச் சென்றனர். வழியில் குழந்தையைத் தவறவிட்டுச் சென்றனர். பின்னர் அக்குழந்தை பலபேரின் மூலம் வீரராஜனின் கைக்குச் சென்றது.

குழந்தையைத் தவறவிட்டதன் மூலம் தேவம்மாஜி கடும் காய்ச்சலுக்கு ஆளாகி மடிக்கேரியில் தங்கி, பின் உடல்நிலை சரியானவுடன் பெங்களூர் சென்றனர். அங்கு ஆங்கில அதிகாரி மற்றும் முதன்மை ஆணையர், அவருடைய பிரதிநிதி அவர்களைக் கண்டு வரவேற்று, உபசரித்து, விசாரித்தனர்.

ஆங்கில அதிகாரி சென்ன பசவனை மிகவும் மரியாதையுடன் வரவேற்று, மடிகேரியில் காட்டியதைப் போல் நான்கு மடங்கு மரியாதைக் காண்பித்து, முதலில் அவனை உட்காரச் சொல்லி, பிறகு தான் உட்கார்ந்து கொண்டு நலம் விசாரித்தான். பின்னர், "மடிகேரியில் தங்களைச் சந்தித்தப் பொழுது, தங்களுக்கும், அரசருக்கும் இடையே உறவு சரியாக இல்லை என்பது எனக்கு விளங்கியது. ஆனால் அந்த மனஸ்தாபம் இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வளவு ஆபத்தானதாக வளரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

நெருங்கிய உறவான தங்கள் விசயத்தில் அரசர் இவ்வளவு கீழ்த்தரமாக நடந்துகொள்வது எனக்கு ஆச்சரியத்தையும், துயரத்தையும் அளிக்கிறது"[26] என்றான். அதற்குச் சென்னபசவன், "ஆம் ஐயா, அவருக்கு அது வழக்கம். கேட்பவர், பிடிப்பவர் இல்லாமல் அவர் இப்படி துஷ்டராக கொழுப்பேறிப் போயிருக்கிறார். அவரை

அடக்குவதற்காக உதவி புரியுங்கள் என்று கேட்பதற்காகவே நான் இங்கே வந்திருக்கிறேன்”[27] எனக் கூறினான்.

பின்னர், வீரராஜனை அரசப்பதவியிலிருந்து தூக்கவேண்டும் என்றும், அப்பதவிக்கு வேறு ஒருவரை நியமிக்க வேண்டுமென்றும், அதற்கு முன்னால், அவனிடம் இருக்கும் தன் குழந்தையை மீட்டுத்தர வேண்டும் என்றும் சென்னபசவன் கம்பெனியாரிடம் அடைக்கலம் புகுந்த வரலாற்று நிகழ்ச்சி இடம்பெற்றுள்ளது.

## 2. தேவம்மாஜி, சென்னபசவன் பெங்களூரில் தஞ்சம்

வீரராஜன் தங்கையையும், மைத்துனனையும் அனுப்பி வைக்கும்படி ஆங்கில அதிகாரிக்குக் கடிதம் எழுதினான். அதில், “என் தங்கை, அவள் புருஷன் இவர்கள் விசயமாக எப்படியும் நடந்து கொள்வதற்கு எனக்கு முழுச் சுதந்திரம் உண்டு. நீங்கள் என்னுடைய நண்பர் என்று திருப்பித் திருப்பி வாயால் சொல்லுகிறீர்கள். அதன்படி நடப்பதில்லை. என் தங்கையின் குழந்தையை உங்களிடம் அனுப்ப வேண்டும் என்று கேட்கிறீர்கள். அவ்வாறு கேட்பதற்கு உங்களுக்கு என்ன உரிமை? நல்ல வார்த்தைகளில் தேவம்மாஜியையும், சென்னபசவய்யனையும் இங்கே அனுப்பிவிடுங்கள். குழந்தையை அவர்களுக்குக் கொடுத்துவிடுகிறேன், அப்படி அனுப்பாவிட்டால் அந்தக் குழந்தையைக் கொன்றுவிடப் போகிறேன், ஜாக்கிரதை என்றான்.

இந்த வருடத்தியப் பொங்கல் பண்டிகை கடைசிநாள் அன்று மாலைக்குள்ளாக அவர்களிருவரும் இங்கு வந்து சேர்ந்தால் சரி. வராவிட்டால் அவர்கள் மீண்டும் தம் குழந்தையைக் காணப் போவதில்லை. அதுமாத்திரம் அல்ல, அதன் பிறகு நானும் நீங்களும் நண்பர்கள் அல்ல, ஜாக்கிரதை. இந்த சங்கதியை உங்கள் பாதுகாப்பைத் தேடி வந்திருக்கும் உங்கள் அடிமைகளான தேவம்மாஜிக்கும், சென்னபசவய்யனுக்கும் தெரிவித்துவிடவும். உங்கள் வீம்பினால் நீங்கள் அவர்களை அனுப்பாவிட்டாலும், தங்கள் குழந்தையைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவர்கள் திரும்ப வர சம்மதிக்கலாம்.

இந்தப் பேச்சை நீங்கள் காதில் போட்டுக்கொள்ளாமல், உங்களைத் தண்டிக்கும் நோக்கத்துடன் நான் அக்குழந்தையைக் கொல்வித்தால், அதற்குப் பொறுப்பு நீங்களும், அவர்களுமே. நான் அல்ல, ஜாக்கிரதை எனக் கூறியிருந்தான்.

இக்கடிதத்திற்குப் பதில் எழுதிய ஆங்கில அதிகாரி, "உங்கள் தங்கையையும், அவரது கணவரையும் உங்களிடம் அனுப்புவதுப் பற்றி எங்களுக்குத் துளியும் ஆட்சேபனையில்லை. ஆனால் திரும்பிச் செல்ல அவர்கள் சம்மதிக்க வேண்டும். அவர்கள் சம்மதம் இல்லாமல் அவர்களை இங்கிருந்து துரத்துவது பாதுகாப்பளித்தவர்களாகிய எங்கள் நோக்கில் தர்மம் அல்ல. இப்பொழுது அவர்கள் உங்களிடம் வரத் தயங்குகிறார்கள். முதலில் குழந்தை வரட்டும். பிறகு எல்லோரும் அங்கே திரும்பிச் செல்கிறோம் என்கிறார்கள் என எழுதி, சென்னபசவய்யனையும், தேவம்மாஜியையும் பெங்களூரிலேயே வைத்துக்கொண்டார்."[28]

இவ்வாறு தங்கையையும், மைத்துனனையும் அனுப்புமாறு வீரராஜன் கேட்டுக்கொண்டும், அவர்களை அனுப்பாமல் பெங்களூரிலேயே கம்பெனியார் வைத்துக்கொண்டனர் எனும் வரலாற்று நிகழ்வு சிறப்பான முறையில் எடுத்துரைக்கப்படுகிறது.

### 3. சென்னை ஆளுநர் கடிதம்

மங்களூரிலிருந்து மாவட்ட ஆட்சியர், பெங்களூரிலிருந்து ஆங்கில அதிகாரி இவர்கள் எழுதியக் கடிதங்களைப் பார்த்த சென்னை ஆளுநர், குடகின் சரித்திரம் தான் விரும்பிய பதத்திற்கு வந்து கொண்டிருக்கிறது என்று தெரிந்துகொண்டான். பின்னர் வீரராஜனின் செயல், அநியாயங்களைப் பற்றி புகார் வந்திருப்பதாகவும், அவனை எவ்வாறு தண்டிக்க வேண்டும் என்பது பற்றியும் கருத்துத் தெரிவித்து, ஆளுநர் பெண்டிங்க் துரைக்கு ஒரு கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தில், "அரசர் இப்படித்தான் நடந்துகொள்வார் என்று நாம் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் அவர் நம்மை அலட்சியம் செய்தும் கேவலப்படுத்தியும் நடந்து கொள்வார் என்பது பெரும்பாலும்

நிச்சயம். அவர் அப்படிச் செய்தால் அவரைத் தண்டிக்க வேண்டியது அவசியம். அந்தச் சமயங்களில் விவரத்தைத் தெரிவித்துத் தங்களிடமிருந்து உத்தரவு பெற்றுக் கொள்வதற்கும் அதன் பிறகு நடவடிக்கைகள் எடுப்பதற்கும் அவகாசம் இருக்காது”[29] ஆகையால் இப்பொழுதே நீங்கள் இந்த சந்தர்ப்பத்தில் பின்னால் அவசியமென்று தோன்றக்கூடிய எல்லா நடவடிக்கைகளையும் சென்னை அரசே எடுத்துக்கொள்ளலாம் என்று உத்தரவு அனுப்பினால் மிகவும் அனுகூலமாக இருக்கும். சந்தர்ப்பத்திற்கு அனுசரணையாக இங்கே இருக்கும் நாங்கள் நடந்துகொள்வது சுலபமாக இருக்கும். மேலும் பெங்களூரிலிருக்கும் ராணுவ அதிகாரிகள் ஏற்கனவே அரசரைக் கண்டு, ஏதோ ஒரு விதத்தில் அவருடைய விரிந்தோம்பலைப் பெற்றிருக்கிறார்கள். அவர்களில் யாருமே படையுடன் குடகுக்குச் செல்ல விரும்பாமல் இருக்கலாம்.

ஆகையால் “பெங்களூர் இராணுவத்தின் தலைமைப் பதவிக்குப் புதிதாக ஒருவரை அனுப்ப வேண்டும். மூன்றாவதாக, இப்பொழுது தோன்றியிருக்கும் இந்த நிலைமை அவசியமாக கடிதப் போக்குவரவு நடந்து ஒரு திடமானக் கட்டத்தை அடைவதற்கு இரண்டு, மூன்று மாதங்கள் ஆகலாம் என்று காண்கிறது. அந்தச் சமயத்தில் நீங்கள் சென்னைக்கு வருவதானால் எல்லாவற்றையும் நேரில் தெரிந்து கொள்ளலாம். அவசியமான எல்லா உத்தரவுகளையும் நேரில் பிறப்பிக்கலாம் என்பதையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்,”[30] என்று எழுதி இருந்தார் சென்னை ஆளுநர். இதுவும் ஒரு வரலாற்றுச் செய்தியாகும்.

### 4. கருணாகர மேனன் கைதானது

கடிதம், பதில் கடிதம் இவைகளினால் ஏற்பட்ட ஒரே பயன் வீரராஜனின் மனத்தின் குரூரம் எல்லை மீறி வளர்ந்ததுதான். அவன், சென்னபசவய்யன், தேவம்மாஜி, ஆங்கில அதிகாரி மற்றும் அவரது ஆட்கள் ஆகியவர்களின் மீது கடும் கோபத்தில் இருந்தான்.

“இந்த வேளையில், கிரஹாம் துரையின் யோசனைப்படி ஆங்கில அதிகாரி மங்களூர் ஆட்சியருக்குக் கடிதம் எழுதி தங்கள் சார்பில் அரசனைக் கண்டு பேச தலைச்சேரி பார்சி வியாபாரி தாரா சேட்டையும், மலபார் ஆட்சியரின் சிரஸ்ததார் கருணாகர மேனனையும் மடிக்கேரிக்கு அனுப்பிவைத்தான்.”[31]

வீரராஜன், தான் அவர்களைக் காண முடியாது என்று கூறினான். பசவன் அவனுக்குப் பலவிதமான அறிவுரைகள் எடுத்துக் கூறிய பிறகு அவர்களை வரவழைத்துக் கொண்டான். அவர்கள் சொல்வதைச் சொல்லவிடாமல், “நம் நாட்டவரான நீங்கள் ஆங்கிலேயரின் எச்சிலைத் தின்று அவர்களின் நாய்களைப் போல ஆகிவிட்டீர்கள். குடகின் மன்னரோடு தூது பேசுமளவு நீங்கள் பெரிய மனிதர்களாகி விட்டீர்களா? இதுபோலப் பெரிய காரியத்தில் தலையிடுவதற்கு எங்களுக்கு யோக்யதை இல்லை என்று அந்த குஷ்டரோகி வெள்ளையர்களிடம் சொல்லிவிட்டு உங்கள் ஊரில் இருப்பதை விட்டுவிட்டு, இங்கே வர உங்களுக்கு எவ்வளவு துணிச்சல்?”[32] என்றுள்ளது.

அப்படிப் பேசவேண்டுமென்றால் உங்கள் ஆங்கில அதிகாரியோ, கிரஹாம் துரையோ, உங்கள் ஆட்சியரோ வந்திருக்க வேண்டும். உங்களை அனுப்புகிற முட்டாள்தனத்தை அவர்கள் செய்கிறார்களென்றால், அவர்களின் கட்டளைப்படி இங்கே வரும் முட்டாள் தனத்தை நீங்கள் செய்துள்ளீர்கள். என்னை அவமானப்படுத்தியிருக்கிறீர்கள். “இந்தத் தவறுக்காக நான் உங்களைத் தண்டிக்க வேண்டியிருக்கிறது. இந்த நிமிடம் முதல் நீங்கள் என் கைதிகள் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்,”[33] என்றான்.

பின்னர் கருணாகரமேனன் அரசனுக்குச் சமாதானமாக இவ்வாறுப் பேசினான். “சேட்ஜி வெள்ளையர்களைப் புகழ்ந்து தங்களை இகழ்ந்து மகிழ்பவரல்ல. உண்மையில் அவருக்கும், எனக்கும் அப்படித் தோன்றுகிறது. தாங்கள் ஆங்கிலேயர்களின் நண்பராய் இருப்பது எல்லா வகையிலும் நல்லது. அவர்கள் கேட்பது என்ன? தங்கள்

*தங்கையின் குழந்தையை அதன் தாயிடம் கொடுக்க வேண்டும் என்பது தானே? தங்கள் தங்கையும், அவர் குழந்தையும் சுகமாக இருக்க வேண்டும் என்பதை மற்றவர்கள் சொல்ல வேண்டுமா? அது தங்கள் விருப்பமும் தான்.”*[34]

“*தங்கையும் அவள் புருஷனும் எதற்காகவோ பயப்பட்டு வெள்ளையரிடம் ஓடிப்போயிருக்கிறார்கள். குழந்தையை அனுப்பிக் கொடுத்துப் பயப்பட வேண்டாம், வாருங்கள் என்று சொன்னால் ஓடி வருகிறார்கள். தாங்கள் குழந்தையை அனுப்பித் தருவதே தங்கள் நல்லெண்ணத்தின் சாட்சியாக இருக்கும். குழந்தைக் கையில் கிடைத்ததும் தங்கையும், தங்கைப் புருஷனும், “அரசருக்குக் கோபமில்லை அவர் நம்மை மன்னித்துக் காப்பாற்றுவார்”*[35] *என்று நினைத்துக் கொள்வார்கள்.*

“*அவர்கள் திரும்பி வந்துவிடடார்களென்றால், வெள்ளையர்களோடு விரோதமும் தீர்ந்துவிடும்”*[36] *என்று கருணாகரமேனன் கூறினான்.*

*அரசன் இந்தப் பேச்சு முழுவதையும் செவிகளில் ஏற்றுக் கொண்டானோ இல்லையோ, சொல்லமுடியாது. இந்தப் பேச்சு முடிந்து சில நிமிடங்கள் சென்ற பின்னும் அவன் வாய் திறவாமலே உட்கார்ந்திருந்தான். பிறகு இவர்கள் பக்கம் திரும்பி, ‘குடகின் அரசனோடு சரிசமமாக உட்கார்ந்துகொண்டு பேசுகிற துணிச்சலா உங்களுக்கு’ எவ்வளவு கொழுத்துப்போய்விட்டீர்கள். அந்நியர்களின் எச்சிலை உண்ணும் உங்கள் கொழுப்புக்குத் தண்டனை உங்கள் தலையைத் துண்டிப்பதுதான். ஆனால் அப்படிச் செய்யவில்லை. கைதிகளாக்கியிருக்கிறேன் என்று கூறினான். இவ்வாறு, ஆங்கில அதிகாரி சார்பில், உடன்படிக்கை பேச கருணாகரமேனன் வந்ததையும், அவனை வீரராஜன் கைதுசெய்ததையும் வரலாற்று நிகழ்ச்சிகளாகக் கையாண்டுள்ளனர்.*

### 5. போபண்ணா கர்னல் பிரேசரிடம் சேர்ந்தது

*அந்நியர்கள் படைகளைத் திரட்டிக் கொண்டு, குடகை நோக்கி வந்துகொண்டிருந்தனர். எனவே, மந்திரி போபண்ணா, தன் ஐந்து*

படைத் தளபதிகளையும் சந்தித்துப் பேசினான். அவர்களிடம், "பகைவர்களின் படை எல்லையை அடைந்ததும் ஒருவர் சென்று அவர்களின் தலைவனிடம், 'எங்கள் அதிகாரிகள் உங்கள் அதிகாரிகளிடம் வெகு முக்கியமான பேச்சுவார்த்தை நடத்த எண்ணியிருக்கிறார்கள். அந்தப் பேச்சுவார்த்தைகள் முடியும்வரையில் நாங்கள் உங்களோடு போரிட மாட்டோம். நீங்கள் எல்லைக்கு வெளியிலேயே நின்றிருங்கள், நாங்கள் உங்கள் வம்புக்கு வரமாட்டோம் என்று சொல்லவேண்டும். அவர்கள் அதற்குச் சம்மதித்தால், நீங்கள் அவர்களை அந்தப் பக்கம் நிறுத்திவிட்டு, நீங்கள் இந்தப் பக்கம் நின்றிருங்கள் சண்டை செய்யாதீர்கள். அவர்களின் கர்னல்துரையுடன் பேசி நான் உத்தரவு அனுப்புகிறேன், உங்கள் பேச்சைக் கேட்காமல் அவர்கள் முன்னால் வந்தால் நீங்கள் அவர்களைத் தடுத்துப் போராடுங்கள்" என்று போபண்ணா கூறினார்.

பின்னர் பிரேசர் துறையின் ஏற்பாட்டின்படி அவன் கீழிருந்த ஐந்து படைகள் ஒரு நாளில் சுமார் நண்பகல் வேளையில் குடகின் எல்லையை வந்தடைந்தன. பிரேசர் குஷால் நகரத்து எல்லைக்கு வந்து சேர்ந்தான். ஐந்து எல்லை வாசல்களிலுள்ள படைத்தலைவர்கள் எதிரிகளின் தலைவர்களிடம் போபண்ணா கூறியிருந்ததுபோல சொல்லி அனுப்பினார்கள்.

குஷால் நகரத்தில் கர்னல்துரை போபண்ணாவிடம், "நீங்கள் இங்கே வருகிறீர்களா அல்லது நான் அங்கே வரட்டுமா?"[37] எனக் கேட்டு ஆள்அனுப்பினான். அதற்குப் போபண்ணா, "நானே வருகிறேன்"[38] என்று கூறிவந்தார். பின்னர், போபண்ணாவை வரவேற்ற கர்னல் துரை, "தாங்கள் குடகின் மந்திரி ; தங்கள் பதவி பெரியது ; தாங்கள் இங்கே வந்திருப்பது தங்கள் சௌஜன்யத்தைக் காட்டுகிறது,"[39] என்று கூறினான். பின்னர் கர்னல்துரை, போபண்ணா ஆகியவர்களுக்கான உரையாடல் பின்வருமாறு நடந்தது; அதில் போபண்ணா பிரேசரிடம், "தங்கள் நோக்கம் என்ன?"[40] என்றுக் கேட்டார். அதற்கு, கர்னல், "அரசர் கும்பணி சர்க்கரை அவமானப்படுத்தியிருக்கிறார். கும்பணி சர்க்கார் தங்கைக்குப் புகழ் அளித்தார்கள் என்ற கோபத்தால்,

தங்கையின் குழந்தையைக் கொன்றிருக்கிறார். அந்த அவமானத்திற்குத் தண்டனையாக நாங்கள் அவரைப் பட்டத்திலிருந்து விலக்க வேண்டும். கொலைக்குச் சிட்சையாக மரணதண்டனை விதிக்கலாமா என்று பார்க்க வேண்டும்"[41] என்று கூறினார்.

"அரசரை நமது தலைவர்களே ஏற்கனவே பட்டத்திலிருந்து விலக்கியுள்ளார்கள். இது விசயத்தில் உங்கள் பிரவேசம் இனி அவசியமில்லை,"[42] என்று போபண்ணா தெரிவித்தார். மேலும், மேலே கூறுங்கள் என்றார்.

"எங்கள் தூதர்களை உடனே விடுவித்து விடவேண்டும். அரசரின் தங்கை, அவர் கணவர் விஷயமாகச் சரியானதொரு ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். நாங்கள் படைதிரட்டிக் கொண்டு வந்த செலவை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும். இனிமேல் குடகில் சீர்கேடான நிலை ஏற்படாமலிருக்க நாங்கள் சம்மதிக்கும்படியான ஏற்பாட்டை செய்ய வேண்டும்"[43] என்று கர்னல் கூறினான்.

உடனே போபண்ணா, "நாங்கள் செய்கிற ஏற்பாட்டுக்கு உங்கள் சம்மதம் எதற்காக?"[44] என்றார். அதற்கு கர்னல், "குடகு எங்கள் ஆட்சிப் பிரதேசத்தின் மத்தியில் இருக்கிறது. இங்கே ஏதாவது கலவரம் என்றால், அதன் எதிரொலி எங்கள் பிரதேசத்திலும் ஏற்படுகிறது. எங்கள் பிரதேசத்தில் தொல்லை இல்லாமல், இருக்க வேண்டுமானால், உங்கள் பிரதேசத்தில் தொல்லையில்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எனக் கூற, போபண்ணா, "உங்கள் விருப்பம் இல்லாமல் ஒரு அடிகூட எடுத்து வைக்கமாட்டோம்"[45] என்று கூறினார்.

போபண்ணாவுக்கும் தனக்கும் நடந்த பேச்சுவார்த்தையின் முக்கிய விபரங்களைக் கர்னல், உடனே பத்து வாக்கியங்களில் எழுதி, உதவியாளனை, அழைத்து அதைக் கன்னடத்தில் மொழிபெயர்த்து எழுதச் சொன்னான். பின்னர் அதனைப் போபண்ணாவுக்கும் காண்பித்து சம்மதம் பெற்றான். மேலும், ஒப்பந்தப் பத்திரத்தைக் குமாஸ்தாவைப் படிக்கச் சொல்லிவிட்டு, இருவரும் அதில் கையெழுத்திட்டார்கள். பிரேசர் ஒரு பிரதியைப் போபண்ணாவுக்குக்

கொடுத்து, மற்றொரு பிரதியை அவர் கையிலிருந்து தான் வாங்கிக்கொண்டான். இவ்வாறு இவர்களுடைய ஒப்பந்தம் அமலுக்கு வந்தது.

இவ்வாறாக, கம்பெனிப் படைகள் குடகை முற்றுகையிட்ட போது, அமைச்சர் போபண்ணா, கர்னல் பிரேசர் இருவரும் சேர்ந்து பல்வேறு ஒப்பந்தங்களைச் செய்துகொண்டனர் என்னும் வரலாற்றுச் செய்தி விளக்கப்பட்டுள்ளது.

## 6. அரசன் கைதியானதும் இங்கிலாந்து சென்றதும்

ஆங்கிலப் படைகள் அரண்மனையை முற்றுகையிட்டன. அரண்மனை வாயிலில், சண்டை வலுத்தது. அப்போது "நால்கு நாடு அரண்மனையில் அரசரின் படுக்கையறையிலிருந்து, பக்கத்திலுள்ள காட்டிற்கு ஒரு சுரங்கப் பாதை இருக்கிறது. முற்றுகை பலமாகி, தப்புவது கடினம் என்று தோன்றினால் அரசர் இந்த மார்க்கமாகத் தப்பிச் செல்லலாம்"[46] இத்தகையச் சுரங்கப்பாதை வழியாக வீரராஜன் தப்பித்துச் சென்று, சுரங்கத்திலிருந்து வெளிப்பட்டான்.

அப்போது, தனக்காகக் காத்துக்கொண்டிருந்த முத்தப்பனையும், மாதப்பனையும் பார்த்தான். முத்தப்பன் முன்னால் நின்று கொண்டு தான் கொண்டுவந்திருந்த குதிரை ஒன்றை முன்னால் எடுத்துவரச் செய்து அதன்மீது ஏறுவதற்கு அரசருக்கு உதவினான். தானும் குதிரையின் மீதமர்ந்து அவனது பக்கத்தில் நிறுத்திக் கொண்டு, "வாருங்கள் என்று தன் ஆட்களை உரக்கக் கூப்பிட்டான். அவர்களில் ஒருவன் ஏதோ ஒருவகையான சீழ்க்கை அடித்தான். இரண்டொரு கணத்தில் அவர்கள் வந்த திசையிலிருந்து இன்னும் ஒரு பத்து குதிரைகள் வந்தன. ஓர் ஆங்கிலேயன் அவைகளை நடத்திக் கொண்டுவந்தான். அவன் குதிரையை ஓட்டிக்கொண்டு முத்தப்பனிடம் வந்து ஹிந்துஸ்தானியில் அரசரல்லவா?"[47] என்று கேட்டான். முத்தப்பன் "ஆமாம்"[48] என்றான்.

ஆங்கிலேயன் வீரராஜனுக்குச் சலாம் செய்து ஹிந்துஸ்தானியில், "தாங்கள் எங்கள் கைதியாகியுள்ளீர்கள்; நாங்கள் தங்களை

மரியாதையுடன் அழைத்துச் செல்வோம்; தடை செய்யாமல் தயவு செய்து எங்களுடன் வரவேண்டும்; தங்களிடம் மிகவும் நன்றியுள்ளவர்களாக இருப்போம்”[49] என்று கூறினான்.

பின்னர் வீரராஜன் கைது செய்யப்பட்டு அரண்மனையிலிருந்து வேலூர் அரண்மனைக்கு அனுப்பப்பட்டு, இறுதியில் தன் மனைவி இறக்க, தன் மகளுடன் இங்கிலாந்து சென்றுவிட்டான். அங்குக் கிறித்தவ மதத்தைத் தழுவி, பின்னர் அங்கேயே இறந்துபோனான்.

இவ்வாறாக, வீரராஜன், ஆங்கிலேயர்களால் கைது செய்யப்பட்டதும், பின்னர், இந்தியாவிலிருந்து இங்கிலாந்து சென்றதும், சிறப்பான வரலாற்று நிகழ்வாக இடம்பெற்றுள்ளன.

## 7. வீரராஜன் மகள் கிறித்தவ மதத்தைத் தழுவியது

குடகு ஆங்கிலேயர் வசம் சென்று பத்து வருடங்களுக்கு மேல் ஓடிவிட்டன. குடகின் மக்கள் தமது முன்னாள் அரசன் வீரராஜன் மகளுடன் இங்கிலாந்துக்குச் சென்று விட்டதாகக் கேள்விப்பட்டனர். மகளுக்கு இராஜ்யத்தை சம்பாதித்துக் கொடுக்கும் ஆசையில் வீரராஜன் விக்டோரியா இராணியாருக்கு விண்ணப்பம் செய்துகொண்டு மகளைக் கிறித்தவ மதத்தில் சேர்க்க ஏற்பாடுகள் செய்தான்.

அந்த இராணி இவன் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டாள். இராஜகுமாரி கிறித்தவ மதத்தில் சேர்ந்தாள். இந்தச் செய்தி குடகுக்கு அப்பொழுது எட்டவில்லை. மெக்லிங் அவளுக்கு அரச பதவியை வாங்கிக் கொடுக்க முயற்சி செய்தான். ஆனால் அவன் முயற்சிகள் பலனளிக்கவில்லை. ஓரிரண்டு வருடங்களில் இராஜகுமாரி கேப்டன் துரையைத் திருமணம் செய்து கொண்டாள். சில வருடங்களுக்குள்ளாக ஒரு பெண் மகளை ஈன்றாள். குழந்தை பிறந்த மூன்றாவது வருடத்தில், வீரராஜன் இறந்துபோனான். அதன் பிறகு இரண்டு வருடங்களுக்குள்ளாக இராஜகுமாரியும் இறந்துவிட்டாள். குடகின் அரண்மனையாரின் ஆங்கில வாழ்க்கையின் அறிகுறியாக ‘எடித் சாது விக்டோரியா கௌரி காம்பெல்’ என்கிற சிறுமி ஒருத்தி தனது தந்தையான கேப்டன் துரையின் கையில் இங்கிலாந்தில் இருந்தாள்.

இவ்வாறு, வீரராஜன் மகள் கிறித்தவ மதத்தைத் தழுவிய வரலாற்றுச் செய்தி சுட்டப்பெற்றுள்ளது. இவ்வாறாக, சிக்கவீர இராஜேந்திரா வரலாற்றுப் புதினத்தில் அதன் ஆசிரியர், மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார் பல்வேறு வரலாற்றுச் செய்திகளைச் சிறப்பான முறையினில் எடுத்தாண்டிருக்கிறார்.

## வரலாற்று இடங்கள்

இடங்களும் நினைவுச் சின்னங்களும் வரலாற்று நிகழ்வுகளின் குறியீடுகளாகும். தென்னிந்தியாவில் பல்லவர்களையடுத்துச் சோழர்கள் நான்கு நூற்றாண்டுகளுக்கு மேல் பேரரசு செலுத்தினர். “பல்லவர்கள் தொடங்கிச் சிறப்பித்த தென்னிந்திய கோயிலமைப்பின் கட்டட, சிற்பக் கலைகள் சோழர்கள் ஆட்சியில் தொடர்ந்து மேம்பாடடைந்தன”[50] என்பர்.

“வரலாற்றுப் புதினத்தைப் படைக்கும் ஆசிரியர் தாம் எழுதும் இடங்களைப் பற்றிய அமைப்பை, சூழ்நிலையை அவ்விடங்களுக்கு நேரில் சென்று, கண்டு காட்சியறிவு பெற்றவராக இருத்தல் வேண்டும். தேசப்படங்களில் அவற்றைப் பற்றிய அமைப்பினைத் தெளிவுபெறப் புரிந்துகொண்டவராக இருத்தல் வேண்டும்.”[51]

கல்கி, மாஸ்தி இருவரும் தத்தம் புதினங்களில் புகழ் பெற்ற வரலாற்று இடங்களைச் சிறப்புறக் கூறியிருக்கின்றனர். கல்கி உறையூர், காஞ்சி, மாமல்லபுரம், திருச்சி, திருவரங்கம் ஆகிய இடங்களைப் பற்றியும், மாஸ்தி, மடிக்கேரி, பாகமண்டலம், மைசூர், பெங்களூர், அப்பங்கொளம், நால்குநாடு, மங்களூர் போன்ற இடங்களையும் சிறப்பான முறையினில் கூறியிருக்கின்றனர்.

## உறையூர்

உறையூர் சோழநாட்டின் தலைநகரமாக இருந்திருக்கிறது. “இந்தக் காலத்தில் திருச்சிராப்பள்ளி பெரிய நகரமாயும் உறையூர் சிற்றூராயுமிருந்தது. அந்த நாளிலே உறையூர்தான் தலைநகரம், திருச்சிராப்பள்ளி சிற்றூர். இரண்டு ஊர்களுக்கும் நடுவில்

இடைவெளியில்லாமல் கடை வீதிகளும், பலவகைத் தொழில் செய்யும் மக்கள் வாழ்ந்த தெருக்களும் இருந்தன”[52] என்கிறார்.

உறையூர்த் தெற்கு ராஜவீதியிலிருந்த சித்திர மண்டபம் அந்தக் காலத்தில் தென்னாடெங்கும் புகழ் பெற்றதாயிருந்தது. “அந்தச் சித்திரமண்டபத்துக்குள் முதல் முதலாகப் பிரவேசிப்பவர்களுக்கு, நமக்குள்ள இரண்டு கண்போதாது, இரண்டாயிரம் கண் இருந்தால்தான் இங்கேயுள்ள சித்திரங்களை ஒருவாறு பார்த்துத் திருப்தியடையலாம்”[53] என்பர்.

உறையூருக்கும் திருவரங்கத்திற்கும் இடையில் சென்ற காவேரி நதியில் பொன்னனும் வள்ளியும் படகில் சென்றதாகக் கூறப்படுகிறது. “அக்காலத்தில் மாமல்லபுரத்திலிருந்து காஞ்சிக்கும், காஞ்சியிலிருந்து உறையூருக்கும் ராஜபாட்டைகள் சென்றன. இத்தகைய ராஜபாட்டையிலிருந்து இடையிடையே பிரிந்து சென்ற குறுக்குப் பாதைகளும் ஆங்காங்கு இருந்தன. இந்தக் குறுக்குப் பாதைகளில் ஒன்று மாமல்லபுரத்துக்குக் கொஞ்ச தூரத்துக்கப்பால், பிரிந்து அடர்ந்த காடுகளின் வழியாகச் சென்றது, மாமல்லபுரத்திலிருந்து நேரே உறையூருக்குப் போக விரும்புவோர் இந்தக் குறுக்குப்பாதை வழியாகப் போனால் காஞ்சிக்குக் கொஞ்ச தூரம் தெற்கே உறையூர் இராஜபாட்டையை அடையலாம்”[54] என இடம்பெற்றுள்ளது.

கல்கி, உறையூரிலிருந்து பத்து, பதினைந்து குதிரைகள், காவிரிகரையை நோக்கி வந்தன ; பொன்னனும், வள்ளியும், உரையூர் கம்மாளத் தெருவில், தன் தாத்தா வீட்டிற்குச் சென்றது, உறையூரிலிருந்து படைகிளம்பியது ; உறையூர்த் தூதன் நரசிம்மச் சக்கரவர்த்திக்கு ஓலை கொண்டு சென்றது ; உறையூருக்குப் பல்லவரின் பழைய சேனாதிபதி பரஞ்சோதி அடிகள் வருவது ; உறையூர்ப்பக்கத்திலிருந்து காவேரிக் கரைச்சாலை வழியாக அரசப் பரிவாரங்கள் வந்தமை ; விக்கிரமன் தன் தாயைக் காண உறையூருக்கு வந்தது ; உறையூர் சிறைச் சாலையில் விக்கிரமன் அடைக்கப்பட்டிருந்தது எனப் பல்வேறு இடங்களில் உறையூர் பற்றிய செய்திகளைக் கூறியிருக்கின்றார்.

**காஞ்சி**

*காஞ்சியிலுள்ள கைலாசநாதர் ஆலயம் மிகவும் பிரசித்திப் பெற்றது. "காஞ்சியில் மகேந்திர சக்கரவர்த்தி ஆண்டு கொண்டிருந்தார். அவருடைய வீர பராக்கிரமங்களைப் பற்றி நாடெங்கும் பிரமாதமாய்ப் பேசிக் கொண்டிருந்த காலம், உறையூருக்கும் ஒருமுறை வந்திருக்கிறார்"*[55] *என வீரபத்திர ஆச்சாரி தன் பேத்தி வள்ளியிடம் தெரிவித்ததாகக் கூறப்படுகிறது.*

*"காஞ்சி நகர் அரண்மனையின் உப்பரிகை நிலா மாடத்தில் சக்கரவர்த்தியும், குந்தவி தேவியும் அமர்ந்திருந்ததாகக் கூறப்படுகிறது."*[56] *அச்சமயத்தில், காஞ்சி நகரின் பற்பல சிவாலயங்கள், விஷ்ணு ஆலயங்களிலிருந்தும் பேரிகைச் சப்தம், ஆலாட்சமணி ஓசை, யாழின் இசையுடன் கலந்து பாடும் பக்தர்களின் குரலொலி எல்லாம் கலந்து வந்துகொண்டிருந்தன.*

*"ஒற்றர் தலைவன் வேடத்திலிருந்த நரசிம்மர் இராஜ பரிவாரங்கள் வருவதைப் பொருட்படுத்தாமல் முன்னால் 'காஞ்சிப்' பாதையில் சென்றதைக் குந்தவி, மகேந்திரன் இருவரும் கவனித்தார்கள்"*[57] *எனக் காஞ்சிப் பாதைப் பற்றி சொல்லப்படுகிறது.*

*"மாமல்லபுரத்திலிருந்து 'காஞ்சி' செல்லும் பாதை எப்பொழுதும் மக்களின் போக்குவரவினால், ஜேஜே என்று இருக்கும். குதிரைகள் மீதும், யானைகள் மீதும், பல்லக்குகலிலும், மக்கள் போய்க்கொண்டே இருப்பார்கள். அந்த ராஜ பாதை நெடுகிலும் ஒன்றுக் கொன்று வெகு சமீபத்தில் ஊர்கள் உண்டு. கோவில்களும், மடாலயங்களும், சத்திரங்களும், தண்ணீர்ப்பந்தல்களும், பலவிதக் கடைகளும், பாடசாலைகளும் நெடுகிலும் காணப்படும். இதனாலெல்லாம் வெளிநாடுகளிலிருந்து புதிதாக வருகிறவர்களுக்கு மாமல்லபுரத்திலிருந்து 'காஞ்சி' வரையில் ஒரு பெரிய நகரந்தானோ என்று தோன்றும்."*[58]

*"பரஞ்சோதி அடிகளும், அவரது தர்மப் பத்தினியும், 'காஞ்சி' நகர் நீங்கலாகத் தமிழகத்திலுள்ள மற்ற புண்ணிய இடங்களுக்கெல்லாம் சென்றார்கள்"*[59] *என எடுத்துரைக்கப்படுகிறது.*

குந்தவியும், மகேந்திரனும் காஞ்சியிலிருந்து, உறையூருக்குச் செல்லும் போது, வழியில் சுற்றுப்புறத் தோற்றத்தில் மாறுதல் காணப்பட்டது. தரை ஈரமாயிருந்தது. உடனே மகேந்திரன் குந்தவியிடம், "தங்காய்! நேற்று இங்கெல்லாம் பெருமழை பெய்திருக்கிறது 'காஞ்சியில்' ஒரு துளிகூட விழவில்லையே"[60] என்றான்.

விக்கிரமன் குந்தவியிடம், மகேந்திரன் எங்கே எனக் கேட்டபோது, குந்தவி "யுவராஜா இங்கே இல்லை. அவர் திரும்பவும் காஞ்சிக்குப் போய்விட்டார். சீன தேசத்திலிருந்து யாரோ ஒரு யாத்திரிகர் வந்திருக்கிறாராம். அவர் இந்தப் பாரதநாடு முழுவதும் யாத்திரை செய்துவிட்டுக் 'காஞ்சி'க்கு வருகிறாராம். 'யுவான் சுவாங்' என்ற விசித்திரமான பெயரையுடையவராம்"[61] என விளக்குகின்றாள்.

மாரப்பப் பூபதியால் சிறைப்பிடிக்கப்பட்ட விக்கிரமனிடம் மாரப்பன், "காஞ்சிக்கு உன்னைப் பத்திரமாய் அனுப்பி வைக்கும்படிக் கட்டளை. இன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் கிளம்ப வேண்டும்"[62] என்கிறான். 'காஞ்சிபுரம்' வீதியில் குந்தவி விக்கிரமனைப் பார்ப்பதற்காக இவ்வாறு கூறப்படுகிறது. இவ்வாறாகக் காஞ்சி பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**மாமல்லபுரம்**

கடற்கரைப் பட்டினமாகிய மாமல்லபுரத்தின் பெயர்க் காரணம் பற்றிக் கூறும்போது, "மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில், நரசிம்மர் இளம் பருவத்தினராயிருந்த போது, ஒரு தடவை மல்யுத்தத்தில் பிரசித்தி பெற்ற மல்லர்களை எல்லாம் தோற்கடித்து வெற்றிபெற்றார். அப்போது அவருக்கு 'மகா மல்லன்' என்ற பட்டம் அவருடைய தந்தை மகேந்திரவர்மனால் அளிக்கப்பட்டது. சில காலத்திற்குப் பிறகு இந்தப் பட்டப் பெயரை வைத்தே அந்தக் கடற்கரைப் பட்டினத்துக்குப் பெயர் வழங்கலாயிற்று"[63] எனச் சுட்டப்பட்டுள்ளது.

அந்தக் காலத்தில், ஒருநாள் தன் தந்தையுடன் இந்தப் பக்கம் சுற்றிப் பார்க்க வந்த நான், ஒரு சிறு மேகம் யானையைப் போல் காண, கையில் கொண்டுவந்திருந்த சிறு காவிக் கட்டியினால் யானையின்

உருவத்தைப் பாறையின் மீது வரைந்தேன். அதைப் பார்த்த அப்பா, "நரசிம்மா! என்ன அற்புதமான யோசனை, இங்குள்ள பெரிய பாறைகளை எல்லாம் கோயில்களாக்கிவிடுவோம். சின்னச் சின்னப் பாறைகளையெல்லாம் வாகனங்களாகச் செய்துவிடுவோம், இந்த உலகமுள்ள அளவும் அழியாதிருக்கம் அற்புதச் சிற்பங்களை எழுப்புவோம்!"[64] என்று வெறிபிடித்தவர் போல் கூறினார். அன்றுமுதல் இருபது வருடகாலம் இந்தப் பிரதேசத்தில் இடைவிடாமல் ஆயிரக்கணக்கான கல்லுளிகளின் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

"இந்தச் சிற்பப்புரி தோன்றுவதற்கு நான் காரணமாயிருந்த படியினால் என் தகப்பனார், 'நரசிம்மர்' என்ற பெயருடன் எத்தனையோ இராஜாக்கள் வரக்கூடும். 'மாமல்லன்' என்ற பட்டப்பெயர் வேறொருவரும் வைத்துக்கொள்ள மாட்டார்கள் என்று யோசித்து, இந்தப் பட்டினத்திற்கு 'மாமல்லபுரம்' என்று பெயர் சூட்டினார்"[65] என நரசிம்ம சக்கரவர்த்தி தன் மகள் குந்தவியிடம் மாமல்லபுரத்தின் பெயர்காரணத்தைக் கூறிமுடித்தார்.

கலைத்திருநாளின் போது, "மாமல்லபுரத்துக்குத் தெற்கே நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவி நின்ற சிறு குன்றுகளும், பாறைகளும் அன்று அற்புதமான தோற்றங்கண்டு விளங்கின. பாறைகளின் சுவர்களிலெல்லாம் விதவிதமான வர்ண வேறுபாடுகளுடன் புராணக் கதைகள் சித்திரிக்கப்பட்டிருந்தன."[66]

"ஒரு விசாலமான பாறையிலே, நந்த கோகுலத்தில் பாலகோபாலன் செய்த லீலைகள், பூதனை சம்ஹாரத்திலிருந்து காளிங்க நர்த்தனம் வரையில் வெகு அழகாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது. தயிர் கடைந்துகொண்டிருந்த யசோதையின் கழுத்தைக் கட்டிக்கொண்டு வெண்ணெய் வேண்டுமென்று கண்ணன் கொஞ்சிக் கொண்டிருந்த சித்திரத்தைப் பார்த்த வண்ணமே வாழ்நாளைக் கழித்துவிடலாமென்று தோன்றியது. இரு பிளவாகப் பிளந்திருந்த இன்னொரு பாறையில் ஆகாச கங்கையைப் பூமிக்குக் கொண்டுவருவதற்காகப் பகீரதன் கடுந்தவம் செய்தக் காட்சி சித்திரிக்கப்பட்டிருந்தது. அவனுடைய தவ

மகிமையினால் கவரப்பட்டத் தேவர்கள், முனிவர்கள் எல்லாரும் வந்து இருபுறமும் நிற்கிறார்கள். அவர்களுடைய முகங்களில் வியப்பும் பக்தியும் காணப்படுகின்றன."[67] இவ்வாறு மாமல்லபுரத்துச் சிற்பக் காட்சிகள் பற்றிச் சிறப்புற வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் தாய்நாட்டிற்குக் கப்பலில் வந்துகொண்டிருந்தபோது, தான் மாமல்லத் துறைமுகத்தில் இறங்கவேண்டும் என எண்ணினான். "அவன் குழந்தையாய் இருந்தக் காலத்திலிருந்து, மாமல்லபுரச் சிற்ப வேலைகளைப் பற்றிக் கேட்டிருக்கிறான். அவற்றைப் பார்க்க வேண்டுமென்று நெடுநாளாக ஆசை அவனுக்கு உண்டு. ஆதலால் அங்கே இறங்கவேண்டும்"[68] என எண்ணினான். இவ்வாறு மாமல்லபுரம் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

**திருச்சி**

இன்று ஒரு மாவட்டத்தின் தலைநகராக, தமிழ்நாட்டின் நடுப் பகுதியாகக் காட்சியளிக்கிறது. "உச்சிப் பிள்ளையார் கோவில் தீபம் தெரிகிறது. அங்கிருந்து தீவர்த்திகளுடன் சிலர் இறங்கி வருவது தெரிந்தது"[69] எனப் பொன்னன் வள்ளியிடம் கூறுகிறான். இதன் மூலம் திருச்சியிலுள்ள உச்சிப் பிள்ளையார் கோயில் பற்றி அறியமுடிகிறது.

பார்த்திபன் தன் மகனிடம், நம் முன்னோர்கள் 'சிராப்பள்ளிப் பெருமானையும், திருவரங்கநாதனையும் குலதெய்வங்களாகப் போற்றி வந்தார்கள்' எனக் கூறுகிறான். சிராப்பள்ளி என்பது திருச்சிராப்பள்ளியைக் குறிப்பதாகும்.

விக்கிரமன் சிவனடியாரிடம், "சுவாமி! நேற்றிரவு கனவில் என் தந்தை வந்து 'சிராப்பள்ளி' மலைக்கு என்னை அழைத்துக் கொண்டுபோய், அங்கேப் பறந்து கொண்டிருந்த பல்லவர்களின் சிங்கக் கொடியைக் காட்டினார்"[70] என்று கூறுகிறான். இவ்வாறு திருச்சிராப்பள்ளி இடம்பெற்றுள்ளது.

**திருவரங்கம்**

*வைணவத் தலங்கள் 108 இல் குறிப்பிடத்தக்க தலம். போரில் காயங்களுடன் கிடந்த பார்த்திபனைக் காணச் சென்ற சிவனடியாரைப் பார்த்து அவன், "எங்கள் குலதெய்வமான 'ஸ்ரீரங்கநாதனே' வந்திருப்பது போலுள்ளது"[71] என்கிறான்.*

*"ஸ்ரீரங்கநாதரின் ஆலயத்தில் அர்த்தஜாமப் பூஜைக்குரிய மணிச் சத்தம் 'ஓம்ஓம்' என்று கிளம்பி, நள்ளிரவின் நிசப்தத்தை மீறிக்கொண்டு வானவெளியெங்கும் வியாபித்து எதிரொலி செய்தது"[72] என நள்ளிரவில் எனும் அத்தியாயத்தில் திருவரங்கநாதரின் ஆலயப் பூசைப் பற்றிச் சுட்டப்பெற்றுள்ளது.*

*அதே அத்தியாயத்தில், "ஸ்ரீரங்கநாதரின் அர்த்த ஜாம ஆராதனையைத் தரிசித்துவிட்டுத் திரும்பிய அந்தப் பக்தர் குழாத்தில் சக்கரவர்த்தி நரசிம்மரை மட்டும் காணவில்லை"[73] எனவும் சொல்லப்பட்டுள்ளது.*

*"அநேக தீவர்த்திகளுடன் ஒரு கூட்டமும், அதன் மத்தியில் சிங்கக் கொடிப் பறந்ததையும் பார்த்தும், ஒருவேளை சக்கரவர்த்தி தன் பரிவாரங்களுடன் 'ஸ்ரீரங்கநாதர்' ஆலயத்துக்குப் போகிறாரோ என எண்ணித் தன் குதிரையிலிருந்து இறங்குகிறான் மாரப்பன்."[74] இவ்வாறு, திருவரங்கம் பற்றியும், அதன் ஆலயம் பற்றியும் சிறப்பான முறைகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இதேபோலவே, மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவிலும், பல்வேறு வரலாற்று இடங்கள் கூறப்பட்டுள்ளன.*

**மடிக்கேரி**

*குடகு என்னும் அழகிய மலைப்பகுதியைச் சிக்கவீர இராஜேந்திரன் ஆட்சி செய்தான். குடகுப் பகுதியின் முக்கியமான இடமாகக் கருதப்படுவது 'மடிக்கேரி.' சிக்கவீர இராஜேந்திரன் ஆண்டுவந்த நால்கு நாடு அரண்மனை இப்பகுதியில்தான் இருந்தது. வீரராஜன் தன் தங்கையைச் சிறைவைத்திருந்ததும் இந்த அரண்மனையில்தான்.*

மந்திரி லட்சுமிநாரயணய்யாவின் வீடு 'மடிக்கேரி' பார்ப்பண தெருவில் இருப்பதுபோலவும், லிங்கராஜனின் அண்ணனும் அவனது மகனும் மடிக்கேரியை நோக்கி வருவது போலவும், தீட்சிதரின் வீடும் 'மடிக்கேரி' ஓங்காரேசுவரர் கோயிலின் அருகில் இருப்பது போலவும் சித்திரிக்கப்பட்டுள்ளன.

தேவம்மாஜிக்குக் குழந்தைப் பிறந்தவுடன், மடிக்கேரி அரண்மனைக்குச் சொல்லியனுப்பப்படுகிறது. குழந்தை, அரிவாளால், கொள்ளப்பட்டதும், வீரராஜன் அளவிற்கு அதிகமாக மது அருந்தி சித்தபிரமை கொண்டவராய் ஆனதும், என எல்லாமே இந்த மடிக்கேரியிலுள்ள நால்குநாடு, அரண்மனையில்தான் நடைபெறுகிறது. ஆங்கிலேயர் முற்றுகையிட்டபோது, இந்த மடிக்கேரி அரண்மனையிலுள்ள சுரங்கப்பாதை வழியாக அரசன் தப்பிச் செல்வதாகக் கூறப்படுகிறது. மொத்தத்தில் இப்புதினத்தில் 'மடிக்கேரி'ப் பகுதி முக்கியமான இடமாகத் திகழ்கிறது.

**குடகு**

தற்பொழுது தலைக் காவிரி உற்பத்தியாகும் இடம் இது. "ஐந்து யோசனை நீளமும், மூன்று யோசனை அகலமுமுள்ள இந்த மலைநாடு சிறப்பான மக்கள் கூட்டத்தாரின் இருப்பிடமாக இருந்து வந்திருக்கிறது."[75] அவர்கள் தான் குடகர்கள். இந்த மக்கள் ஒரு கூட்டமாக வாழ்ந்து ஒரு வாழ்க்கையை நடத்தியதில் இவர்களின் இருப்பிடம் தானாக வேறொரு விதமான நாடாயிற்று. நாட்டின் சிறப்பான வாசிகளானாலும், குடகர்கள் இந்த நாட்டை என்றைக்கும் ஆண்டதாகத் தெரியவில்லை. குடகரல்லாத கதம்ப, கங்க, சோழ, சாளுக்கிய, ஹொய்சள வம்சங்கள் இதன் மீது தமது ஆதிக்கத்தைச் செலுத்தியுள்ளனர்.

"ஒரு பக்கம் மைசூர், ஒரு பக்கம் மலையாளம், ஒருபக்கம் மங்களூர் அரசாங்கங்கள் இருந்ததனால் இவைகளின் இடையே இருந்த குடகின் அரசர்கள் தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்காக

வெகுவாகப் போரிடவேண்டியதாயிற்று. இது மலைக்காடு ஆதலால் வெளி இராஜ்யங்கள் இவர்களைத் தோற்கடிப்பது இல்லாமறபோயிற்று."[76]

குடகைப் பற்றி ஆங்கிலேயர்கள், "குடகின் மலை, காடு, நதி, கணவாய், வயல், தோட்டம் இவை தங்களது பைபிளில் சொல்லப்பட்டுள்ள ஈடான் தோட்டத்திற்குச் சமமாக விளங்கச் செய்தன என்றும், தமது நாட்டின் ஸ்காட்லாந்துப் பகதியிலுள்ள மலைப் பிரதேசங்கள் மிகவும் அழகானவை, குடகின் அழகு ஸ்காட்லாந்தின் மலைப்பிரதேசத்து அழகைவிட ஒருபடி மேல் என்று சொல்லும்படியாக இருந்தது என்றும் கூறுகின்றனர்."[77]

மைசூரை விழுங்கியதைப் போல, குடகையும் விழுங்குவதற்குப் பல ஆங்கிலேயர்களின் வாயில் நீரூறிக் கொண்டிருந்தது. இவ்வாறு குடகு பற்றிய வருணனை உள்ளது.

**அப்பங்கொளம்**

மடிக்கேரியிலுள்ள அரண்மனை, நால்குநாடு அரண்மனை என்று அழைக்கப்படுவது போல், அப்பங்கொளத்திலுள்ள அரண்மனை, 'அப்பங்கொளத்து அரண்மனை' என்று அழைக்கப்படுகிறது. இந்த அரண்மனை லிங்கராஜன் தன் மகள் தேவம்மாஜிக்குச் சீதனமாகக் கொடுத்ததாகும்.

இந்த அப்பங்கொளத்து அரண்மனையிலிருந்துதான், சென்னபசவன் வீரராஜனை ஆட்சியிலிருந்து விலக்கவேண்டும் எனக் கடிதம் எழுதியதாகவும், தேவம்மாஜிக்கு இங்குக் குழந்தைப் பிறந்ததாகவும், குழந்தையுடன் தப்பித்து மங்களூருக்குச் சென்றதாகவும் எடுத்துரைக்கப்படுகிறது.

வீரராஜனால் சிறைபடுத்தப்பட்ட தேவம்மாஜியும், சென்னபசவனும், அப்பங்கொளத்து அரண்மனையைவிட்டுச் செல்லமுடியாதவாறு காவலர்களை நியமிக்கிறான். அதையும் மீறி அவர்கள் தப்பிச்செல்ல, அரண்மனைக் காவலாளி சோமனையும், வேலைக்காரியையும் அரசன்

கொன்றுவிடுகிறான். இவ்வாறு, அப்பங்கொளம் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**பெங்களூர்**

அப்பங்கொளத்திலிருந்து தப்பிய தேவம்மாஜியும், சென்னபசவனும் 'பெங்களூரை' அடைந்தனர். ஆங்கில அதிகாரி மற்றும் முதன்மை ஆணையர் அவருடைய பிரதிநிதி அவர்களை வரவேற்று, விடுதிக்கு அழைத்துச்சென்று ராஜ மரியாதையுடன் அவர்களை உபசரித்து, "தாங்கள் பிரயாணக் களைப்பை ஆற்றிக் கொள்ளுங்கள் பிறகு தங்கள் சௌகரியத்தை அனுசரித்துப் பெரிய அதிகாரியைப் பார்க்கலாம்"[78] என்றான்.

பெங்களூரிலிருந்த ஆங்கிலேய ராஜபிரதிநிதியான அதிகாரியிடம் இருந்தும் அவனது துணைவனான இன்னொரு ஆங்கிலேயனிடம் இருந்தும் மடிக்கேரிக்குக் கடிதங்கள் வந்தன.

அக்கடிதத்தில், "வீரராஜனிடம், தாங்கள் அழைத்தது போன்று விருந்துண்ண வருகிறோம். எந்த தேதி எனக் கூறுமாறு கேட்டுக்கொள்கிறோம்"[79] என விளக்கப்படுகிறது.

விருந்தை முடித்துக்கொண்டு குறித்தக் காலத்தில் 'பெங்களூரை' அடைந்த ஆங்கில அதிகாரிகள், சென்னை ஆளுநருக்கு ஒரு கடிதத்தை எழுதுகிறார். அக்கடிதத்தில், "குடகு நாட்டு மக்கள் அரசனின் கொடுமையினால் உள்ளம் கொதித்துக் கொண்டிருக்கிறார்கள். எந்த நேரமும் அரசரைப் பட்டத்திலிருந்து இறக்கலாம்"[80] என்று விளக்குகிறார். இவ்வாறு பெங்களூர் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

**மங்களூர்**

மங்களூரில் ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனியின் பிரதிநிதியாக வீற்றிருந்த மாவட்ட ஆட்சியர் வீரராஜனுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், 'மங்களூரின் நமது வட்டாரத்தின் பாணே எனும் சிற்றுரிலிருந்து

ஒருவரின் வீட்டு மருமகளைக் கடத்திச் சென்றிருக்கிறார்கள். விசாரித்ததில் உங்களது மந்திரி ஸ்ரீபசவன் எனத் தெரியவந்துள்ளது. எனவே எனக்கு விளக்கம் அளிக்குமாறுக் கேட்டுக் கொள்கிறேன்' என இடம்பெற்றுள்ளது.

இதேபோல, மங்களூர் ஆட்சியர், சென்னை ஆளுநர், பெங்களூர் அதிகாரி துரைக்கும் கடிதம் எழுதி, வீரராஜன் ஆட்கள் தங்கள் நாட்டுப் பெண்ணைக் கடத்திச் சென்றார்கள் என விளக்கியிருந்தான்.

வீரராஜனை ஆட்சியிலிருந்து விலக்க வேண்டும் என மங்களூரிலிருந்து வந்தக் கடிதத்தில் பரிந்துரைக்கப் பெற்றிருந்தது. வீரராஜனின் தங்கை தேவம்மாஜி, அப்பங்கொளத்திலிருந்து, மடிக்கேரி, பெங்களூர் வழியாக, மங்களூருக்குத் தப்பிச் செல்ல திட்டமிட்டிருக்கிறாள் என மங்களூர் பற்றி இடம்பெற்றுள்ளது.

**மைசூர்**

கருநாடகாவிலுள்ள இரண்டாவது பெரிய பகுதி இது. உடையார்களின் அரண்மனை இங்கு வரலாற்றுச் சின்னமாக விளங்குகிறது. "மைசூர் மன்னரின் கொடும் சூட்சியினால், மைசூர் மக்களை அராஜகப் பிடியிலிருந்து விடுவித்துக் காப்பதற்காகக் கம்பெனி சர்க்கார் இரண்டு வருடங்களுக்கு முன்னர் அந்தப் பிரதேசத்தின் ஆடசியை நடத்தும் பொறுப்பைத் தன் தோள்களின் மீது ஏற்றுக்கொண்டது"[81] என்றுள்ளது.

இரண்டு வருடங்களுக்கு முன்னால் 'மைசூரின்' அரசன் திப்பு சுல்தான் நாட்டைச் சரியாக ஆளவில்லை என்ற குற்றஞ்சாட்டி ஆங்கிலேயர்கள் அவனைப் பட்டத்திலிருந்து நீக்கித் தாங்களே அரசாட்சியை ஏற்றுக்கொண்டார். "குடகின் அரசன் அயோக்கியனாக இருக்கிறான். அவனையும் பட்டத்திலிருந்து நீக்கி, குடகை மைசூரோடு சேர்த்து ஆட்சிப் பீடத்தை எற்றுக் கொள்ளுங்கள்"[82] என ஆங்கிலேயருக்குக் கடிதம் எழுதப் போவதாகச் சிக்கண்ண செட்டியின் அண்ணன் மகன், சிக்கராம செட்டி தன் உறவினர்களிடமும்

நண்பர்களிடமும் கூறுகிறான். இவ்வாறு மைசூர் இடம்பெறும் இடங்கள் பற்றியச் செய்திகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

**பாகமண்டலம்**

மைசூருக்கு அருகில் உள்ள ஒரு மலைப்பகுதிப் பாகமண்டலம் ஆகும். "இப்பகுதி முஸ்லீம்களின் கையில் அகப்பட்டு இருந்த நேரத்தில் பாகமண்டலத்துப் பிராமணர்கள் ஊரைவிட்டு ஓடிவிட்டனர். சுவாமி தலையில் இரண்டு செம்பு தண்ணீர் ஊற்ற ஆள் இல்லை.

மற்றவர்கள் சண்டைப் போட்டுக்கொண்டிருக்கும் பொழுது, நான் மட்டும் நான்கு மாத காலம் காடபாளையத்திலிருந்து பாகமண்டலத்திற்கு ஒரு பிராமணச் சிறுவனைத் தோள்மேல் தூக்கிக் கொண்டு வந்து, குளிப்பாட்டி அவன் கையால் பூசை செய்து, விளக்கு அணையாமல் பார்த்துக் கொண்டேன்"[83] என பாகமண்டலத்துக் கோயில் பற்றி கிழவன் உத்தய்யன் கூறுகின்றான்.

நாடு ஆங்கிலேயர் வசம் சென்ற பிறகு, பாகமண்டலத்தில் இதுவரை நடந்துவந்த பூசைகள் யாவும் தொடர்ந்து நடைபெற வேண்டும் என ஆணையர் துரை சிறப்புக் கட்டளைப் பிறப்பித்தார். இதன் மூலம், 'பாகமண்டலம்' இடம்பெறும் செய்தியை அறியமுடிகிறது.

இவைத் தவிர, காசி, ஜாபால சேத்திரம், ஜகந்நாதபுரி, காளஹஸ்தி, சிம்மாசலம், திருப்பதி, காஞ்சிபுரம், திருவரங்கம், மதுரை, இராமேசுவரம், கன்னியாகுமரி, திருவனந்தபுரம் போன்ற இடங்கள் பற்றியக் குறிப்புகளும் மாஸ்தியின் புதினத்தில் இடம்பெற்றுள்ளன.

**காலம்**

புதினாசிரியர் புதினத்தைத் தொடங்கும் முன்னர் காலவரையறை செய்துகொண்டு கதைக் கருவைப் பொருத்தமான இடங்களில் அமைக்கின்றார். அதனால் சரியான நேரத்துக்கு உரிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. "கால ஓட்டத்தை 'ஆறு வாரங்கள் சென்றன,' 'இரு வாரங்களுக்குப் பின்னர்' என எழுதுவது புதினச் சுவையினைக் கூட்டாது. பலவகை உத்திகளைக் கையாண்டு குறிப்பாகக் காலத்தை

உணரத்துவது ஆய்வாளரை மகிழ்விக்கும் எனப் புதின நடப்பின் கால அளவு பற்றிய பல்வேறு கருத்துக்கள் ஆய்வாளரிடையே நிலவி வருகின்றன. எனினும் கதையில் கால அளவே அனைத்துமாக நிற்கிறது எனக் குறித்து அதன் இன்றியமையாத நிலையைச் சுட்டுவர்”[84] எட்வின் மூயர்.

கல்கியின் புதினம் பத்தாண்டு நிகழ்ச்சிகளைக் கூறுவதாகவும், மாஸ்தியின் புதினம் அறுபது ஆண்டுகளுக்கும் மேலான நிகழ்வுகளைக் கூறுவதாகவும் படைக்கப்பட்டுள்ளன. இவ்விருவரும் கால அளவினையும், நிகழ்ச்சிகளின் நடப்பினையும் சுட்டிச் சென்றுள்ளமையை நோக்கும் பொழுது, நிகழ்ச்சிகளை விளக்கும் முறையும் ஆற்றலும் வெளிப்பட்டு நிற்பதை உணர முடிகின்றது.

**பார்த்திபன் கனவு**

பார்த்திபன் கனவு எழுதப்பட்ட ஆண்டு 1943. இதில், இராசராச சோழனின் ஆட்சிக்கு 300 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த சோழ அரசுப் பற்றிச் சுட்டப்பட்டுள்ளது.

இராசராசன் ஆட்சி செய்த ஆண்டு கி.பி.985-1014. பார்த்திப மகாராஜாவின் ஆட்சிக்காலம் கி.பி.685 என அறிய முடிகிறது. இதில் பல்லவர்களிடையே நிகழ்ந்த போர்கள் பற்றியும், வெற்றி, தோல்விகள் பற்றியும் சிறப்புற எடுத்துரைக்கின்றார்.

409 பக்கங்களைக் கொண்ட ‘பார்த்திபன் கனவு’ பத்தாண்டு நிகழ்ச்சிகளைக் கூறுகின்றது. கல்கி ஒரு நாள் நிகழ்ச்சிகளைக் காலை முதல், இரவு வரை நிகழ்ந்தனவாகவும், சிலவற்றை நாளின் ஒரு பகுதியில் நடந்தனவாகவும் காட்டுகிறார்.

நாளை மறுநாள், ஒருவாரத்திற்கு முன்பு என நாட்களின் ஓட்டதையும், ஆறு வருடங்களுக்குப் பின்னர், பத்து ஆண்டுகளுக்கு முன்னால், ஏறக்குறைய மூன்று வருடங்கள் ஆகிவிட்டன என ஆண்டுகளின் விரைவினையும் அமைக்கின்றார்.

*"புதினத்தில் தொடக்கத்தில் அமைந்த 48 பக்கங்கள் ஒரு நாளில் நடந்த நிகழ்ச்சிகளை விளக்குகின்றன. பல்லவ தூதன் வருகை, சோழ மன்னர் பார்த்திபர் கப்பம் கட்ட மறுத்து நரசிம்மப் பல்லவரைப் போர்க்களத்தில் சந்திக்கச் சொல்லியமை, மாரப்பனின் பண்பு, பார்த்திபன் தன் மனைவியிடம் சோழர் குலப் பெருமையை உணர்த்தும் வாள், திருக்குறள், அடங்கியப் பெட்டியைக் காட்டி வரம் வேண்டியமை, சோழ மன்னர் தம் கனவையெல்லாம் சித்திரமாக்கியக் கூடத்திற்கு மகன் விக்கிரமனை அழைத்துச் சென்று காட்டியமை எனப் பல நிகழ்ச்சிகளைக் காலை முதல் இரவு முடிய நடைபெற்றனவாகக் குறிப்பிடுகிறார்."[85]*

*விக்கிரமன் தாய்நாட்டிற்கு வந்தபொழுது குந்தவியைச் சந்தித்ததையும், மாரப்பன் மாறுவேடத்திலிருந்த விக்கிரமனை அறிந்து கொண்டதையும் காலை நிகழ்ச்சிகளாக்குகிறார். விக்கிரமனின் உறையூர்ப் பயணமும், வழியில் கபாலிகரிடம் சிக்கியதும், நரசிம்மர் துணை பெற்றதும் மாலை நிகழ்ச்சிகளாக அமைகின்றன. பின்னர் நரசிம்மருடன் சிற்ப வீட்டில் தங்கியது, நரசிம்மர் சிவகாமியின் காதல் வாழ்வு, சிவகாமியின் சபதம், வாதாபி மீது படையெடுப்பு என நரசிம்மரின் கடந்த காலத்தை அறிந்தமை இரவு நிகழ்ச்சிகளாக உருக்கொள்கின்றன.*

*"பௌர்ணமி இரவில் வெண்ணாற்றங்களை நிகழ்ச்சிகளையும், 13 ஆம் நாள் காலை செண்பகத் தீவில் இறங்கிய விக்கிரமனுக்குக் கிடைத்த வரவேற்பினையும் குறிப்பிட்டவர், அமாவாசைக்கு முன்னிரவு நடந்த நிகழ்ச்சிகளைப் பெரிதும் விளக்குகிறார். மாரப்பனின் பிடியிலிருந்துப் பொன்னன் விக்கிரமனை விடுவிப்பது, விக்கிரமனின் தாய் அருள்மொழியைக் காண்பது, கபாலிக பைரவன் நீலகேசி என்ற உண்மை, கபாலிக சமயத்தின் கொடுமைப் பற்றிச் சிறுத்தொண்டர் விளக்கிக் கூறுவது, நீலகேசியும் மாரப்பனும் சாவது என ஓர் இரவு நிகழ்ச்சிகளை விளக்குகிறார்."[86]*

*பத்தாண்டு நிகழ்ச்சிகளைக் கூறும் இப்புதினம் காலை முதல் நள்ளிரவு வரைநடந்த ஒரு நாள் நிகழ்ச்சிகளை முழுமையாகக் காட்டுவதையும், சிலவிடத்து இரவு, பகல் என ஒரு நேரத்தில் மட்டும் நடந்த நிகழ்ச்சிகளை விளக்கமாகக் கூறுவதையும் காணமுடிகிறது. புதினத்தில் கால வளர்ச்சியில் ஆசிரியர் நாட்களின், ஆண்டுகளின் எண்ணிக்கையைக் குறிப்பதையும் காணமுடிகின்றது.*

**சிக்கவீர இராஜேந்திரன்**

*வீர இராஜேந்திரன் கி.பி.1820 முதல் 1834 வரை மொத்தம் 14 ஆண்டுகள் ஆட்சிபுரிந்தார். இது குடகு மன்னரைப் பற்றிய வரலாறு. 1956 இல் குடகு புதிய மைசூர் மாநிலத்தின் ஒரு பகுதியாயிற்று. இவர் காலத்தில் ஆங்கிலேயர் குடகைத் தம் வசமாக்கிக் கொள்வதற்கு முன்பு நடந்த வரலாற்று நிகழ்ச்சிகளை மாஸ்தி பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.*

*சிறையிலிருக்கும் வீரராஜனின் தங்கை தேவம்மாஜிக்கு இராணி கௌரம்மாஜி, உணவு கொடுத்து ஆறுதல் கூறியது, சோமவார்ப் பேட்டை மடிக்கேரி மார்க்கத்தில் இரண்டு வழிப் போக்கர்கள் மடிக்கேரியை நோக்கி வந்தது. மந்திரி லட்சுமிநாராயணய்யாவைப் பார்க்கச் சூரிய நாராயணன் வந்தது, மந்திரி போபண்ணா வீட்டிற்குக் குடவக் கிழவன் உத்தய்யன் வந்தது என இவை ஒரு நாளில் காலை நிகழ்ச்சியாகவும், மங்களூரிலிருந்து வீரராஜனுக்குக் கடிதம் வந்தது நண்பகல் நிகழ்ச்சியாகவும், அதே நாளில், அந்தணர் குடியிருப்பில் ஒரு வீட்டில் தீட்சிதர் ஓலைச் சுவடி படித்துக் கொண்டிருந்ததும், அவரைப் பார்க்க பகவதி வந்ததும் மாலை நிகழ்ச்சியாகவும் கூறப்படுகிறது.*

*“தீட்சிதர் பாப்பாவின் சரித்திரத்தை நினைத்துப் பார்க்கும் போது, ஐம்பது வருடங்களுக்கு முன்னால் நடைபெற்ற நிகழ்வினை நினைத்துப் பார்ப்பதாகச் சொல்லப்படுகிறது.”*[87]

*சிக்கண்ண செட்டி இராணியைப் பார்க்கச் சென்றது, பசவனும் பகவதியும் சந்தித்தக் காட்சி, தீட்சிதர் இராணியிடம், தங்கையை அப்பங்கொளத்துக்கு அனுப்புமாறுக் கூறியது, தீட்சிதரைப் பகவதி*

சென்று சந்தித்தது, உத்தய்யனின் படி நிறுத்தப்பட்டதைப் பற்றி விவாதிப்பதற்காகப் போபண்ணா லட்சுமிநாராயணய்யாவின் வீட்டிற்கு வந்தது. போபண்ணா உத்தய்யன் நிமித்தமாக அரசனைப் பார்க்க வேண்டுமென பசவனிடம் கூறியது, லட்சுமிநாராயணய்யா - அரசன் சந்திப்பு, அரண்மனையில் ஆங்கிலேயருக்கு விருந்து, வீரராசனை ஆங்கிலேயர் சிறைப்பிடித்தது இவை மாலை நிகழ்வுகளாக இடம்பெற்றுள்ளன.

போபண்ணா - லட்சுமிநாராயணய்யா சந்திப்பு, அரசன் - உத்தய்ய தக்கன் சந்திப்பு, ஆங்கிலேயர்கள் அரண்மனை ஆபரணங்களைப் பார்வையிட்டது, அரசனைப் பதவியிலிருந்து நீக்கியன காலை நிகழ்வுகளாகவும், அப்பாஜியும், வீரண்ணாவும் மடிக்கேரியை வந்தடைந்ததும், பாதிரி மேக்லிங் மதம் பற்றியப் பிரச்சாரம் செய்ததும் நண்பகல் நிகழ்வுகளாகவும், தேவம்மாஜி, சென்ன பசவன் குழந்தையுடன் மங்களூருக்கு அப்பங்கொளத்திலிருந்து தப்பிச் சென்றது இரவு நிகழ்வுகளாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

வீரராசன் பதவியிலிருந்து விலகி வேலூருக்குச் சென்ற 'நான்கு மாதங்கள்' கழித்து உத்தய்யணும், தக்கனும் அங்குச் சென்று இராணியிடம், உத்தய்யன் - இராஜகுமாரி திருமணம் பற்றிப் பேசியதாகக் விளக்கப்படுகிறது.

ஒருவருடம் கழித்து இராணி காசிக்குச் சென்றதும், "பத்து வருடங்களுக்கு மேல் ஓடிவிட்டன. குடகின் மக்கள் தமது முன்னால் அரசன் வீரராசன் தன் மகளுடன் இங்கிலாந்து சென்றதாகக் கேள்விப்பட்டனர்."[88]

"இப்போது, குடகு ஆங்கிலேயர்கள் கைக்கு வந்து முப்பது வருடங்கள் சென்றுவிட்டன. குடகின் மக்கள் இவை எதையும் அறியாமலே வாழ்ந்தனர்"[89] என இறுதியில் சொல்லப்படுகிறது.

இன்னும் அறுபது வருடங்கள் சென்றன என்றும், இராசகுமாரியின் மகளும் உத்தய்யனின் பேரனும் எதேச்சையாக

இங்கிலாந்தில் சந்தித்துப் பழைய கதைகளை உரையாடியதையும் முடிவுரையில் சுட்டியுள்ளனர்.

இவ்வாறு, காலம் பற்றிய செய்திகள் இரண்டு புதினங்களிலும் சிறப்பான முறையினில் விளக்கப்பட்டுள்ளன.

**ஒப்பீடு**

இரண்டு புதினங்களின் வரலாற்றுக் கூறுகளையும் ஒப்பிடும் பொழுது, வரலாற்று நிகழ்வுகள் என்பது பார்த்திபன் கனவில் குறைந்த அளவிலும், சிக்கவீர இராசேந்திராவில் அதிக அளவிலும் இடம்பெற்றுள்ளன.

கல்கி மூன்று வரலாற்று நிகழ்வுகளை மட்டும் கொண்டு வரலாற்றுப் புதினத்தைப் படைத்துள்ளார். மாஸ்தி ஏழு வரலாற்று நிகழ்வுகளைக் கூறித் தம் புதினங்களைப் படைத்துள்ளார்.

வரலாற்று நிகழ்வினில் கல்கி அன்னியர் வருகையாகச் சீனர்களைப் பற்றியும், மாஸ்தி ஆங்கிலேயர் வருகைப் பற்றியும் கூறியிருக்கின்றனர்.

கல்கி தம் புதினத்தைத் தமிழகத்தில் தொடங்கி சில இடங்களில் வடமாநிலத்திற்குக் கொண்டு சென்று முடித்துள்ளார். மாஸ்தி தம் புதினத்தைக் கருநாடகத்தின் பல்வேறு இடங்களுக்குக் கொண்டு சென்றதோடு, இறுதியில் ‘இங்கிலாந்து’ வரை சென்றுத் தம் புதினத்தைப் படைத்துள்ளார்.

கல்கி நிகழ்ச்சி நடந்த களங்களாக உறையூர், காஞ்சி, மாமல்லபுரம், திருச்சி, திருவரங்கம் என குறைந்த இடங்களையே கையாண்டிருக்கிறார். மாஸ்தி, மடிக்கேரி, பாகமண்டலம், பெங்களூர், மங்களூர், மைசூர், அப்பங்கொளம் என கர்நாடகம் முழுவதையும் நிகழ்ச்சிக் களங்களாகக் கொண்டு இறுதியில் இங்கிலாந்தினையும் களங்களின் வரிசையில் சேர்த்துக் கொண்டுள்ளார்.

கல்கி பத்தாண்டுக் கால நிகழ்வுகளைத் தம் புதினத்தில் வெளிப்படுத்தியிருக்கிறார். காலை முதல் நள்ளிரவுவரை நடந்த ஒரு நாள் நிகழ்ச்சிகளையும் இரவு, பகல் என ஒரு நேரத்தில் மட்டும் நடந்த நிகழ்ச்சிகளையும் கல்கியின் புதினத்தில் காணமுடிகிறது.

மாஸ்தியின் புதினத்தில் இரண்டு, மூன்று மாதங்களுக்குப் பிறகு, பத்தாண்டுகளுக்குப் பிறகு, முப்பது வருடங்கள் சென்றன. அறுபது வருடங்கள் கழிந்தன எனக் கூறி கிட்டத்தட்ட 'அறுபது' வருட நிகழ்வினைத் தம் புதினத்தில் கொடுத்துள்ளார்.

வரலாற்று நிகழ்வுகளுக்குக் கல்கியை விட, மாஸ்தி அதிக அளவினில் முக்கியத்துவம் கொடுத்தள்ளார் என்பதைக் காணமுடிகிறது.

**தொகுப்புரை**

- ♦ வரலாற்றை அப்படியே கூறுவது வரலாற்றுப் புதினம் அன்று. வரலாற்று ஆசிரியனுக்கு வேண்டியவை கற்பனை கலந்த வருணனையுடன் கூடிய நடையாகும். கற்பனையை வரலாற்றில் இடம்பெற்ற முக்கிய நிகழ்வுகளுடன் பின்னும் பொழுதுதான் வரலாற்றுப்புதினம் உருவாகிறது.
- ♦ ஒவ்வொருவருக்கும், ஒவ்வொன்றிற்கும் கடந்த காலம் என்ற ஒன்று உண்டு. நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் கடந்தகாலம் என்பது ஓர் உண்மைதான்.
- ♦ வரலாறு என்பது யார், என்ன, எப்பொழுது, எங்கே, ஏன், எப்படி என்ற ஆறு கேள்விகளுக்கு விடையளிக்கும் வகையில் இருக்க வேண்டும்.
- ♦ உண்மைகளை வைத்துக் கொண்டு, கற்பனையில் உருவாக்குவது வரலாற்றுப் புதினம் என்பது நேரடியாகச் சொல்லும் பொருளாகும்.
- ♦ இத்தகைய வரலாற்றுப் புதினத்தின் வரலாற்றுக் கூறுகளாக, வரலாற்று நிகழ்வுகள், இடம், காலம் போன்றவை அமைகின்றன.
- ♦ கல்கியின் புதினத்தில் நரசிம்ம பல்லவரின் வாதாபி வெற்றி, நரசிம்மர் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம், சீன வழிப் போக்கர் யுவான்-சுவாங் காஞ்சி வருகை போன்றவை வரலாற்று நிகழ்வுகளாக இடம்பெற்றுள்ளன.

♦ மாஸ்தியின் புதினத்தில், மன்னனின் தங்கையும் மைத்துனனும் கம்பெனியாரிடம் அடைக்கலம் வேண்டியது ; மன்னன் கேட்டுக் கொண்டபடி அவர்களைக் கம்பெனி விட்டுவிடாமல் பெங்களூரில் வைத்திருந்தது ; வீர இராஜேந்திரனின் செயல், அநியாயங்களைப் பற்றிப் புகார் வந்திருக்கிறது என்று சென்னை ஆளுநர் கடிதம் எழுதியது ; கம்பெனியின் பிரதிநிதிகளில் கருணாகர மேனன் என்பவனை அரசன் கைது செய்தது ; கம்பெனிப் படைகள் குடகை முற்றுகையிட்டபோது, அமைச்சர் போபண்ணா கர்னல் பிரேசரிடம் சேர்ந்தது ; அரசன் கைதியானது இங்கிலாந்து சென்றது; அவன் மகள் கிறித்தவ மதத்தில் சேர்ந்தது; என அனைத்தும் வரலாற்று நிகழ்வுகளாகக் காணப்படுகின்றன.

♦ கல்கியின் புதினத்தில் நிகழ்ச்சி நடந்த களங்களாக உறையூர், காஞ்சி, மாமல்லபுரம், திருச்சி, திருவரங்கம் ஆகிய இடங்களும், மாஸ்தியின் புதினத்தில் மடிக்கேரி, பாகமண்டலம், பெங்களூர், மங்களூர், மைசூர், அப்பங்கொளம், இங்கிலாந்து ஆகிய இடங்களும் சுட்டப்பட்டுள்ளன.

♦ கல்கியின் புதினம் பத்தாண்டு கால நிகழ்வுகளையும், மாஸ்தியின் புதினம் அறுபது ஆண்டுகளுக்கும் மேலான நிகழ்வுகளையும் சிறப்புற எடுத்து இயம்புகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.42
2. அ.கருணாணந்தன், வரலாறு என்றால் என்ன?, ப.1
3. மேலது, ப.1
4. இரா.பாலசுப்பிரமணியம், நாவல் களம், ப.1
5. மு.உலகநாதன், சோழர் வரலாறு, ப.4
6. வரலாறு என்றால் என்ன?, ப.3
7. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.vii
8. மேலது, ப.viii
9. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.52

10. மேலது, ப.55

11. கல்கி, பார்த்திபன் கனவு, ப.67

12. மேலது, ப.351

13. மேலது, ப.351

14. மேலது, ப.221

15. மேலது, ப.222

16. மேலது, ப.222

17. மேலது, ப.287

18. மேலது, ப.287

19. மேலது, ப.287

20. மேலது, ப.287

21. மேலது, ப.288

22. மாஸ்தி, சிக்கவீரஇராஜேந்திரன், ப.XV

23. மேலது, ப.291

24. மேலது, ப.291

25. மேலது, ப.291

26. மேலது, ப.354

27. மேலது, ப.355

28. மேலது, ப.360

29. மேலது, ப.358

30. மேலது, ப.358

31. மேலது, ப.362

32. மேலது, ப.358

33. மேலது, ப.363

34. மேலது, ப.364

35. மேலது, ப.364

36. மேலது, ப.364

37. மேலது, ப.430

38. மேலது, ப.431

39. மேலது, ப.431

40. மேலது, ப.431

41. மேலது, ப.432

42. மேலது, ப.432

43. மேலது, ப.432

44. மேலது, ப.432

45. மேலது, ப.433

46. மேலது, ப.446

47. மேலது, ப.454

48. மேலது, ப.455

49. மேலது, ப.455

50. குடவாயில் பாலசுப்பிரமணியன், சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும் ஓவியங்களும், ப.5

51. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.52

52. கல்கி, பார்த்திபன் கனவு, ப.33

53. மேலது, ப.39

54. மேலது, ப.193

55. மேலது, ப.22

56. மேலது, ப.127

57. மேலது, ப.212

58. மேலது, ப.193, 194

59. மேலது, ப.230

60. மேலது, ப.254

61. மேலது, ப.288

62. மேலது, ப.331

63. மேலது, ப.68

64. மேலது, ப.73

65. மேலது, ப.73

66. மேலது, ப.77

67. மேலது, ப.78

68. மேலது, ப.181

69. மேலது, ப.19

70. மேலது, ப.62

71. மேலது, ப.55

72. மேலது, ப.151

73. மேலது, ப.153

74. மேலது, ப.155

75. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.2

76. மேலது, ப.3

77. மேலது, ப.101

78. மேலது, ப.354

79. மேலது, ப.140

80. மேலது, ப.286

81. மேலது, ப.223

82. மேலது, ப.98

83. மேலது, ப.25

84. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.122

85. மேலது, ப.126

86. மேலது, ப.126

87. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.30

88. மேலது, ப.499

89. மேலது, ப.500.

# மாந்தர் படைப்பு

## முன்னுரை

*ஒரு படைப்பு சிறந்து விளங்க அடித்தளமாக அமைவது மாந்தர் படைப்பு ஆகும். கருத்துப் பொருளாக இருக்கும் ஒன்றைக் காட்சிப் பொருளாகக் காட்டுவது அதில் உலாவரும் மாந்தர்கள் ஆவர். சமுதாய நலனை விரும்பும் படைப்பாளர்கள் மேம்பாட்டுச் சிந்தனைகளை மாந்தர்களின் வழியே வெளிப்படுத்துகின்றனர்.*

*ஆசிரியன் தான் படைக்கும் புதினங்களில் கதைக்கருவுக்கு முக்கியத்துவம் கொடுப்பது போல், மாந்தர்களை உயிரோட்ட முடையவர்களாகப் படைத்துப் புதினத்தைச் சிறப்படையச் செய்கிறான். மாந்தர்கள் தெளிந்த நீரோடையைப் போல், வாசகர்கள் எளிதாகப் புரிந்துகொள்ளும் வண்ணம் சிறப்பான பண்புகளுடன் படைக்கப்பட வேண்டும். கதையின் விறுவிறுப்பான இயக்கத்திற்குக் கதைமாந்தரின் பங்களிப்பு இன்றியமையாத ஒன்றாகும்.*

*புதினத்தில் தேர்ந்தெடுத்துக் கொண்ட களத்திற்கேற்ப மாந்தர்களை அமைக்க வேண்டும். வரலாற்றுப் புதினம் என்றால் வரலாற்றுப் பின்புலம் பிரதிபலிக்கும் வகையில் வரலாற்று நாயகர்களை, மாந்தர்களை உருவாக்க வேண்டும்.*

*கதைக்கருவிற்கு உயிரையும், உணர்வையும் தருவது மாந்தர்கள் ஆவர். அவ்வகையில் கல்கி - மாஸ்தி புதினங்களில் இடம்பெற்றுள்ள மாந்தர் படைப்புகளைக் காண்பது இவ்வியலின் நோக்கம் ஆகும்.*

## மாந்தர் படைப்பு - விளக்கம்

*மாந்தர்களை உயிரோட்டமுடையவர்களாகப் படைக்க வேண்டும். "வாழ்க்கையில் உள்ளதைப் போன்று பாத்திரங்களைப் படைப்பது, புகைப்படம் எடுப்பது போன்றதாகும். இதைவிட உயிருள்ளவர்களாக உயிரோவியங்களாக பாத்திரங்களைப் படைப்பதே சிறந்த முறையாகும்"[1] என்பர்.*

ஒரு புதினம் படைக்கப்படும் பொழுது அப்புதினம் தோன்றிய பின்புலத்தை மட்டும் காட்டுவது சிறப்புடையது ஆகாது. மாந்தர்களைப் படைக்கும் பொழுது, அந்தப் பின்புலத்தில் வாழும் மக்களைச் சரியான கோணத்தில் படம்பிடித்துக் காட்ட வேண்டும். அப்பொழுதுதான் மாந்தர் படைப்புச் சிறப்பானதாக அமையும். நடை, உடை, பாவனை, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை நுட்பமாகக் கவனித்திருந்தால்தான் மாந்தர் படைப்பை உயிரோட்டமாக இயங்க வைக்க முடியும்.

மாந்தர் படைப்பு புதினத்தின் சிறந்த கூறுகளை வெளிக்காட்ட வேண்டும். "மனித வாழ்க்கை சிக்கல் நிறைந்தது. அதைப் போன்றே மனிதரின் பண்பு நலன்களும் அமைகின்றன. அப்பண்புகளைப் பிரதிபலிப்பதாக மாந்தர் படைப்பு அமைய வேண்டும்."[2] படைப்பாளி மாந்தர்களைப் படைக்கும் பொழுது வீணான வருணனைகளைத் தவிர்க்க வேண்டும்.

"கதைப்பின்னல் புதினங்களின் எலும்புக்கூடாக அமைகின்றது என்றால் பாத்திரங்களும், சூழலமைவும் அவ்வெலும்புக் கூட்டின் மீது பொருந்தி உள்ள தசையும் நாடி நரம்புகளுமாக உள்ளன."[3] எனவே படைப்பாளியின் சிறப்பானப் படைப்பாக மாந்தர் படைப்பு அமைகின்றது.

## மாந்தர் படைப்பு - இலக்கண வரையறை

பாத்திரம் என்பது கதையில் இடம்பெறும் ஒருவரைக் குறிக்கும். அவர் ஒரு ஆணாகவோ, பெண்ணாகவோ அல்லது அஃறிணை உயிர்களாகவோ அதற்கு மேற்பட்டோ இருக்கலாம். அம்மாந்தர்களினால் கதைச் சிறப்புப் பெறுகிறது. இத்தகைய மாந்தர் படைப்பைப் பற்றிப் பலர் தங்கள் கருத்தக்களை எடுத்துரைக்கின்றனர்.

"எழுத்தாளன் படைப்பிலேயே மிகவும் தலையாயதும், அரியதுமானதும் மாந்தர் படைப்புத்தான். இது மிகவும் அரிய பல்வேறு

உணர்வுகளும் கலந்த ஒன்றாகும்”[4] என்று இலியா ரெணிபர்க் கூறுவதாக த.மணிமாறன் கூறுகிறார்.

“படைப்பிலக்கிய ஆசிரியர்க்கு உலக அனுபவம் வேண்டும். எந்தச் சூழ்நிலையில் மாந்தர்களைப் படைக்க விரும்புகின்றானோ, அந்தச் சூழ்நிலைப் பற்றிய முழு அறிவும் அவனுக்கு வேண்டும். அதாவது உலகத்தில் அந்தச் சூழ்நிலை எங்குக் காணப்படுகின்றதோ, அங்கு அவன் பழகியிருத்தல் வேண்டும். இல்லையேல் அவன் மாந்தர்கள் நிலத்தில் கிடக்கும் மீன் போலத் தவிக்க நேரிடும்”[5] என்று கூறுகிறார் இரா.பாலசுப்பிரமணியன்.

இத்தகைய மாந்தர்களின் படைப்பு என்பது கல்கியின் பார்த்திபன் கனவிலும், மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவிலும் சிறப்புற அமையப்பெற்றுள்ளது. மாந்தர்களின் படைப்பிற்கு இரண்டு புதினாசிரியர்களும் அதிகளவில் முக்கியத்துவம் கொடுத்துள்ளனர்.

மாந்தர்களை முன்புல மாந்தர்கள், பின்புல மாந்தர்கள் எனப் பிரித்து, இரண்டிலும் வரும் வரலாற்று மாந்தர்கள் யார், கற்பனை மாந்தர்கள் யார் என வகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது. அவற்றிற்கான அட்டவணை பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளது.

இவ்விருப் புதினங்களிலும் வரும் மாந்தர்களை ஆறு பிரிவுகளில் அடக்கிக் கூறப்பட்டுள்ளது. அவை,

- தலைமை மாந்தர்கள்
- இணை மாந்தர்கள்
- துணைமை மாந்தர்கள்
- பிற நாட்டு மாந்தர்கள்
- அஃறிணை மாந்தர்கள்
- பிற மாந்தர்கள்

என்பனவாகும். இவற்றைக் கூறும் விதமான அட்டவணைப் பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளது.

| வ. எண். | மாந்தர் படைப்புக்கள் | பார்த்திபன் கனவு | சிக்கவீர இராஜேந்திரன் |
|---|---|---|---|
| 1. | தலைமை மாந்தர் | 1.பார்த்திபச் சோழர்<br>2. நரசிம்ம பல்லவச் சக்கரவர்த்தி | 1.சிக்கவீர இராஜேந்திரன் |
| 2. | இணை மாந்தர்கள் | 1.விக்கிரமன்<br>2. அருள்மொழி | 1.நொண்டி பசவன்<br>2. இராணி கௌரம்மாஜி |
| 3. | துணை மாந்தர்கள் | 1.குந்தவி தேவி<br>2. மாரப்ப பூபதி<br>3. பொன்னன்<br>4. வள்ளி<br>5. வீரபத்திர ஆச்சாரி<br>6. நீலகேசி (கபால ருத்திர பைரவன்)<br>7. பரஞ்சோதி அடிகள் | 1. போபண்ணா<br>2. லட்சுமிநாராயணய்யா<br>3.இராஜகுமாரி<br>4.தேவம்மாஜி<br>4.சென்ன பசவன்<br>6.பகவதி<br>7.தீட்சிதர் |
| 4. | பிறநாட்டு மாந்தர்கள் | 1.யுவான் சுவாங் | 1. ஆங்கில அதிகாரி<br>2. பிரேசர் துரை<br>3. கேப்டன் துரை<br>4. விக்டோரியா மகாராணி<br>5. எடித் சாது<br>6. லூஸி<br>7. ஹெலன்<br>8. பாதிரி மேக்லிங் |
| 5. | அஃறிணை மாந்தர்கள் | 1.பாரிஜாதம்<br>2.புஷ்பகம்<br>3.பட்டத்து யானை | ---- |
| 6. | பிற மாந்தர்கள் | ஆண் = 16; பெண்=5 | ஆண் = 38; பெண்=4 |

## தலைமை மாந்தர்கள்

மாந்தர்களில் முதன்மை இடம்பெறுபவர் தலைமை மாந்தர் ஆவர். "வரலாற்றுப் புதினங்களில் இருவகை மன்னர்கள் இடம்பெறுவர். ஒருவர் நாட்டை ஆள்பவர். மற்றொருவர் படையெடுத்து வரும் பகை மன்னர்."[6] அவ்வகையில் பார்த்திபன் கனவில் ஆளும் மன்னராக வரும் பார்த்திபச் சோழரும், படையெடுத்து வரும் மன்னரான நரசிம்மப் பல்லவச் சக்கரவர்த்தியும் தலைமை மாந்தர்களாகக் காணப்படுகின்றனர்.

## பார்த்திபன்

தமிழ்நாட்டில் காவிரியின் இரு கரைகளின் பக்கங்களில் ஆட்சி செய்தவர்கள் சோழர்கள். "சோழ நாடு அந்த நாளில் தன்னுடைய

புராதானப் பெருமையை இழந்து ஒரு சிற்றரசாகத்தான் இருந்தது. தெற்கே பாண்டியர்களும், வடக்கே புதிதாகப் பெருமை அடைந்திருந்த பல்லவர்களும் சோழநாட்டை நெருங்கி அதன் பெருமையைக் குன்றச் செய்திருந்தார்கள்”[7] என்கிறார்.

இக்காலக்கட்டத்தில் பார்த்திபன் பல்லவ சாம்ராஜ்யத்திற்குக் கப்பம் கட்டிக்கொண்டு, சோழநாட்டை ஆட்சி புரிந்துவந்தான். இதனை விரும்பாத பார்த்திபன், சோழநாடு சுதந்திரமான நாடாக வேண்டும் என கனவு கண்டுவந்தான்.

## நாட்டுப் பற்று

புலிகேசியின் மீது படையெடுத்துச் சென்ற நரசிம்மச் சக்கரவர்த்தி, பார்த்திபனையும் தன்னுடன் அழைக்க, அதற்குப் பார்த்திபன், “அப்படியே செய்கிறேன், ஆனால் அதற்குப் பிரதியாக, அன்று முதல் உறையூரிலிருந்து கப்பம் வாங்குவதை நிறுத்திட வேண்டுமென்றும், சோழ நாட்டின் புலிக்கொடிக்குச் சமமரியாதை கொடுக்க வேண்டும் என்றும் கூறினான்.”[8] இதன் மூலம் பார்த்திபனின் நாட்டுப்பற்றுச் சிறப்பாக விளங்கி நிற்கிறது.

## மனைவியிடம் கேட்ட வாக்குறுதி

பார்த்திபன் தன் மனைவி அருள்மொழியிடம், “உன் பிள்ளைக்கு என்னால் சாம்ராஜ்யப் பட்டாபிஷேகம் செய்து வைக்க முடியாது. ஆனால், வீரத் தந்தையின் புதல்வன் என்ற பட்டத்தை நிச்சயம் அளிப்பேன்”[9] எனக் கூறுகிறான்.

பார்த்திபன் ஒரு பெட்டியிலிருந்த வீரவாளினையும், ஓலைச் சுவடியையும் கொடுத்து, “கரிகால் வளவனும், நெடுமுடிக் கிள்ளியும் இந்த உடைவாளைத் தரித்து உலகத்தை ஆண்டார்கள். ஓலைச் சுவடியிலுள்ளது நமதுத் தமிழகத்தின் தெய்வப் புலவர் அருளியத் திருக்குறள். இந்த உடைவாளும், குறளுந்தான் சோழர் குலத்தின் புரதானக் கருவூலங்கள்.

*எப்பொழுது விக்கிரமன் ஒரு சின்னஞ்சிறு பிரதேசத்துக்காவது சுதந்திர மன்னனாகிறானோ, அப்போதுதான், இந்த உடைவாளைத் தரிக்கலாமென்று கூற வேண்டும். அக்காலத்தில் இந்த உடைவாளைத் தரித்து, இந்தத் தெய்வத் திருக்குறளில் சொல்லியிருக்கும் வண்ணம் இராஜ்ய பாரம் செய்யும்படியும் கூறவேண்டும். இந்தப் பொறுப்பை உன்னிடம் ஒப்படைக்கிறேன். அதை நிறைவேற்றுவதற்காகத் தெய்வ சன்னிதானத்தில் எனக்கு வாக்குறுதி அளிக்க வேண்டும். விக்கிரமனை வீரமகனாக நீ வளர்க்க வேண்டும்"*[10] *என தன் மனைவி அருள்மொழியிடம் வரம் கேட்கிறான்.*

**மகனிடம் வெளிப்படுத்திய நாட்டுப்பற்று**

*தான் வரைந்த சித்திரங்களைத் தன் மகனைக் காணச் செய்த பார்த்திபன்; அவனிடம், "என் கனவை நிறைவேற்றுவதற்காக நீ உயிர்வாழ வேண்டும். சோழநாட்டின் உன்னதமே உன் வாழ்க்கையின் நோக்கமாயிருக்க வேண்டும். சோழர் குலம் பெருமையடைவதே அல்லும் பகலும் உன் நினைவாயிருக்கவேண்டும். சோழரின் புலிக்கொடி வேறு எந்த நாட்டுக் கொடிக்கும் தாழாமல் வானளாவிப் பறக்க வேண்டுமென்று சதா காலமும் நீ சிந்திக்க வேண்டும்"*[11] *எனக் கூறுகிறான். இதன் மூலம் தன் மகனிடம் தன்னுடைய நாட்டுப் பற்றை வெளிப்படுத்துகிறான்.*

**சிவனடியாரிடம் கேட்ட வரம்**

*போர்க்களத்தில் காயம்பட்ட பார்த்திபன், அங்கு வந்த சிவனடியாரிடம், "விக்கிரமன் வீரமகனாய் வளரவேண்டும். சோழநாட்டின் மேன்மையே அவன் வாழ்க்கையின் இலட்சியமாயிருக்க வேண்டும். உயிர் பெரிதல்ல. சுகம் பெரிதல்ல. மானமும் வீரமுமே பெரியவை என்று அவனுக்குப் போதிக்க வேண்டும்."*[12] *இந்த வரத்தைத் தனக்குத் தர வேண்டும் என பார்த்திபன் சிவனடியாரிடம் கேட்கிறான்.*

**பார்த்திபனின் கனவு**

*மன்னர்களின் கனவுகள் பெரும்பான்மை நாட்டின் வளர்ச்சி, மக்கள் முன்னேற்றம் பற்றியதாகக் காணப்படுகின்றன. "சோழ நாடு*

*முன்னைப் போல் சுதந்திர நாடாக வேண்டும். மகோன்னதமடைய வேண்டும். தூரதூர தேசங்களில் எல்லாம் புலிக்கொடி பறக்க வேண்டும் என்று கனவு கண்டுவந்தான். தன்னுடைய வாழ்க்கையில் அது கனவாகவே முடிந்தது. தன்னுடைய மகன் காலத்திலாவது அது நனவாக வேண்டுமென கனவு கண்டான்.”*[13]

“*விக்கிரமன் காலத்தில் அது முழுமையாக நிறைவேறவில்லை என்றாலும், மூன்று நூற்றாண்டுகளுக்குப் பிறகு இராஜராஜன், இராஜேந்திரன் காலத்தில் பார்த்திபனின் கனவு பரிபூரணமாக நிறைவேறியது.”*[14] இதன் மூலம், நாட்டுப் பற்றுக் கொண்டவனாகவும், சோழ நாட்டைச் சுதந்திர நாடாக ஆக்க வேண்டுமென்றும், அதனைத் தன் மகன் சுதந்திரமாக ஆட்சிபுரிய வேண்டுமென்றும் என்னும் விதத்தில், பார்த்திபனின் பாத்திரம் இடம்பெற்றுள்ளது.

## நரசிம்மப் பல்லவச் சக்கரவர்த்தி

அந்தக் காலத்தில், காஞ்சி நரசிம்மவர்ம சக்கரவர்த்தியின் புகழ் எண்டிசையிலும் பரவியிருந்தது. பாரத நாடெங்கும் அவருடைய கீர்த்தி வியாப்பித்திருந்ததோடு, கடல் கடந்து வெளிநாடுகளுக்கும் சென்றிருந்தது. “*தெற்கே காவிரி ஆற்றங்கரையிலிருந்து வடக்கே கிருட்டிணா நதிக்கரைவரையில் பல்லவர்களின் சிங்கக் கொடிக் கம்பீரமாகப் பறந்தது*”[15] என்கிறார்.

“*தட்சிணக் தேசத்தில் நரசிம்ம வர்மரைப் போல் ஒரு சக்கரவர்த்தி இதுவரையில் தோன்றியதுமில்லை. இனிமேல் தோன்றப் போவதுமில்லை என்று அந்தக் காலத்தில் பல்லவ சாம்ராஜ்யத்தில் வாழ்ந்த மக்கள் நம்பினார்கள்*”[16] என்பதும் நோக்கத்தக்கது.

## அன்பு உள்ளம் கொண்டவர்

நரசிம்ம சக்கரவர்த்தி தன் மகள் குந்தவியின்பால் மிகுந்த அன்பும், அக்கறையும் கொண்டவராகக் காணப்படுகிறார். “*அவருடைய பிராணனே குந்தவியாக உருக்கொண்டு, வெளியில் நடமாடுகிறது என்று கருதும்படி இருந்தது. அவருடைய விசாலமான இருதயமானது*

ஒரு சில காரணத்தினால் பல ஆண்டுக்காலம் வறண்டு பசையற்றுப் பாலைவனமாயிருந்தது. அப்படிப்பட்ட இருதயத்தில் குந்தவியின் காரணமாக மீண்டும் அன்பு தளிர்த்து ஆனந்தம் பொங்கத் தொடங்கியது."[17]

"தன் மகள் சோழ இளவரசன் விக்கிரமனை விரும்புவதை அறிந்த நரசிம்மர் தன் மகளின் எண்ணப்படி அவனையே அவளுக்குத் திருமணம் செய்துவைக்கிறார் நரசிம்மர்."[18] இதன்மூலம் அவரின் அன்பு உள்ளம் வெளிப்பட்டு நிற்கிறது.

**இரக்கக் குணம் கொண்டவர்**

நரசிம்மர் இரக்கக் குணம் கொண்டவராகத் திகழ்கின்றார். போர்க்களத்தில் கிடந்த பார்த்திபனைச் சிவனடியார் வேடத்தில் சந்தித்து அவனுடைய மனோரதத்தைக் கேட்டு, அதனை நிறைவேற்றுவதற்காகப் பாடுபடுகிறார். சிராப்பள்ளி மலையின் மீது, பல்லவர்களின் கொடியை இறக்கி, சோழர்களின் கொடியை ஏற்றியதினால் கைது செய்யப்பட்ட விக்கிரமனுக்கு மரண தண்டனை கொடுக்காமல், அவனை நாடு கடத்துவதுபோல் செய்து, தூரத்திலிருக்கும் செண்பகத் தீவிற்கு அரசனாக்குகிறார்.

நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் திரும்பி தாய்நாட்டிற்கு வந்தபோது, அவனுக்கு மரண தண்டனை அளிக்காமல், "இன்று முதல் சோழ நாடு சுதந்திர இராஜ்யமாகிவிட்டது. இதன் பாரம் முழுவதையும் விக்கிரம சோழரும், அவருடைய சந்ததிகளும் தான் இனிமேல் தாங்கியாக வேண்டும்"[19] எனக் கூறி விக்கிரமனைச் சுதந்திர மன்னனாக்குகிறான். இதன் மூலம் நரசிம்மரின் இரக்கக் குணம் வெளிப்பட்டு நிற்கிறது.

**மாறுவேடம்**

நரசிம்மர், சிவனடியார், ஒற்றர் படைத் தலைவன் ஆகிய வேடங்களைத் தரித்துப் பல்வேறு நன்மைகளைப் புரிகின்றார். சிவனடியார் வேடமிட்டுக் கொண்டு, பார்த்திபனின் மனோரதத்தைக் கேட்டு, அதனை நிறைவேற்றப்பட்டது, அருள்மொழிக்கு ஆறுதல் கூறி

விக்கிரமனை வீரமகனாய் வளர்க்க உறுதுணையாய் இருந்தது. "விக்கிரமன் நாடுகடத்தப்பட்டு கப்பலில் செல்லும்போது, அவனை ஆசீர்வதித்து அனுப்பியது,"[20] விக்கிரமனின் வீர செயல்களை எடுத்துக்கூறி அருள்மொழியைத் தேற்றியது, குந்தவியை விக்கிரமனுக்கு மணம்புரிந்து வைக்குமாறு அருள்மொழியிடம் வரம் கேட்டது, பொன்னனுடன் சேர்ந்து நரபலி கூட்டத்தைக் கண்டுபிடித்தது எனப் பல்வேறு நன்மைகளைச் செய்கிறார்.

அதேபோல, ஒற்றர் படைத் தலைவன் போல் வேடமிட்டுக் கொண்டு "வீரசேனன் என்ற பெயரில் விக்கிரமனை வழிப்பறிக் கும்பலிடமிருந்து காப்பாற்றுகிறார்."[21] பின்னர் தன் குதிரையைக் கொடுத்துப் பாதுகாப்பாக அவனை அனுப்பிவைக்கிறார். இவ்வாறு மாறுவேடமிட்டுக் கொண்டு பல்வேறு நன்மைகளைப் புரிகின்றார் நரசிம்ம சக்கரவர்த்தி அவர்கள்.

**நரபலியைக் கண்டறிதல்**

அக்காலத்தில் நினைத்த செயல் நிறைவேறினால் நரபலி கொடுப்பதாகத் தெய்வத்தின் முன் வேண்டுதல் வழக்காகக் காணப்படுகிறது. "மகேந்திர பல்லவர் காலத்திலும், நரசிம்மவர்மரின் காலத்திலும் தமிழ்நாட்டில் மிகச் சிலரான மக்களிடையே நரபலியைத் தூண்டும் பயங்கரமான கபாலிகம், சாக்தம், பைரவம் என்னும் மதங்கள் எப்படியோ இரகசியமாகத் தோன்றிவந்தன. இந்த மதங்களை அவலம் பித்தவர்கள் மிதமிஞ்சிய மூடநம்பிக்கையினால் தங்களுடைய சிரங்களைக் காளிகோயில்களிலும், துர்க்கை கோயில்களிலும் தாங்களே அநாயாசமாக வெட்டி எறிந்து கொண்டார்கள்."[22]

இப்படிப்பட்ட நரபலியைச் செய்யும் அக்கூட்டத் தலைவரான கபால ருத்ர பைரவன் என்னும் ஒற்றைக் கை மனிதனைக் கண்டறிந்து, அவனிடம் சிக்கிக் கொண்ட இராணி அருள்மொழியையும், விக்கிரமனையும் காப்பாற்றுகிறான்.

இவ்வாறு நரசிம்ம பல்லவன் அன்புள்ளம் மற்றும் இரக்கக் குணம் கொண்டவனாகவும், மாறுவேடமிட்டுப் பல்வேறு நன்மைகள்

*புரிபவனாகவும், நரபலி என்னும் கொடிய பழக்கத்தைக் கண்டறிபவனாகவும் திகழ்கின்றான்.*

*இதேபோல சிக்கவீர இராஜேந்திராவில், சிக்கவீர இராஜேந்திரன் தலைமை மாந்தராகக் கூறப்படுகிறான்.*

**சிக்கவீர இராஜேந்திரன்**

*குடகின் ராஜ வம்சத்தில் இவன் கடைசி அரசன். இவனது ஆட்சியின் பதினான்காவது வருடத்தில் குடகு ஆங்கிலேயரின் வசமாயிற்று. "சிக்கவீரராஜேந்திரன் தனது வம்சத்திற்குப் புகழ் தேடித் தரவில்லை."[23] மாறாகக் கலங்கத்தை ஏற்படுத்தினான்.*

*"வீரராஜன் பிறவி துஷ்டன் அல்ல. ஆனால் அவன் வாழ்ந்த முப்பத்து மூன்று வருடங்களில் தன்னைவிட துஷ்டன் இன்னொருவன் இருக்க முடியாது என்ற அபிப்ராயத்தைப் பல பேர்களுக்கு உண்டாக்கி விட்டான்"[24] என்று சுட்டப்பெற்றுள்ளது.*

**தீய நட்பு**

*இடுக்கண் கலைவதாம் நட்பு என்பர். உண்மையான தொடர்பு நட்பாகும். நண்பனை வைத்து ஒருவனை இனம் காணலாம். "வீரராஜன் எட்டு வயது பையனாக இருக்கும்போது நொண்டி பசவன் அவனுக்கு நண்பனானான். பசவனின் மூலம் பல்வேறு கெட்ட பழக்க வழக்கங்களுக்கு ஆளானான்."[25] "இவர்கள் இருவரும் சேர்ந்து குழந்தையை நாய் துரத்தவிட்டு அது அழுவதைக் கண்டு ரசிப்பார்கள், பெண்கள் ஜோடியாகப் படுத்திருக்கும் இடங்களுக்குச் சென்று பல்வேறு சேட்டைகள் செய்வர் அல்லது பெண்களைப் பிடித்து தங்களது இருப்பிடத்திற்குக் கொண்டு வந்து குறும்புகள் செய்வார்கள்."[26] சீட்டாட்டம் ஆடுவது, காலிப் பையன்களுடன் சேர்ந்து சண்டையில் ஈடுபடுதல் என பல்வேறு கெட்ட பழக்கத்திற்கு ஆளானான் வீரராஜன். "தந்தை இறந்து தாய் உடன்கட்டை ஏறி, தான் அரசனாகும் போது வீரராஜன் காலிகளின் கும்பலில் ஒருவனாக இருந்தான்"[27] போன்ற பதிவுகள் காணப்படுகின்றன.*

**மது, மாது அடிமை**

*வீரராஜன் மதுவிற்கும், மாதுவிற்கும் அடிமைப்பட்டவனாக இருந்தான். "மது அருந்திவிட்டு வீட்டிற்கு வருவது, போதையில் தள்ளாடுவது, மனைவியை அடிப்பது என பல்வேறு கெட்ட செயல்களில் ஈடுபட்டான்."[28]*

*"அளவிற்கு அதிகமான மது அருந்தியதன் மூலம் வீரராஜன் உடல் கெட்டு மெலிந்து முப்பது வயதில் வயோதிகத் தோற்றம் பெற்றுக் காணப்பட்டான்."[29] முதலில் பதினைந்து நாளும், பிறகு ஒரு மாதமும் என படுக்கையிலிருந்து மீள அவனுக்கு வெகு நாட்கள் ஆயிற்று. "இறுதியில் அதிக மதுவின் மூலம் சித்த பிரமை பிடித்து பகவதியின் மூலம் காப்பாற்றப்படுகிறான்."[30]*

*குடவப் பெண்களைப் பிடித்திருந்தால் உடனே அவர்களைக் கடத்திக் கொண்டு வந்து அரண்மனை அந்தப்புரத்தில் வைத்து அழகு பார்ப்பது வீரராஜனின் வழக்கம். அப்படி ஒருமுறை "சூரியநாராயணன் என்பவனின் மனைவியைக் கடத்திக் கொண்டு வந்ததன் மூலம், ஆங்கிலேயரால் கண்டிக்கப்பட்டான்."[31] இதுவே அவன் பதவியிலிருந்து விலக்குவதற்கு அடித்தளமாக அமைந்தது.*

**மனைவியை மதிக்காதவன்**

*வீரராஜனின் மனைவி கௌரம்மாஜி கணவனின்பால் மிகுந்த அக்கறை கொண்டிருந்தாலும், வீரராஜன் ஒருபோதும் அவளை மதிக்கமாட்டான். அவளை வேசி, தாசி, விபச்சாரி என்றெல்லாம் பல்வேறு வார்த்தைகளால் விமர்சிப்பான். ஒருமுறை அரண்மனைச் செய்தி பற்றி மந்திரி போபண்ணாவிடம் பேசிக் கொண்டிருந்த தன் மனைவியிடம் அவன், "என்ன விபசாரம் செய்து கொண்டிருக்கிறாய்"[32] என கூறி அவளை அடித்தான்.*

*சிறையிலிருந்த தேவம்மாஜியைக் காணச் சென்றதற்கு வீரராஜன், "என் பேச்சை மீறி நடக்கும் பெண்ஜாதி, என் பெண்ஜாதி அல்ல, தாசி"[33] எனக் கூறுகிறான். இவ்வாறு வீரராஜன் மனைவியை மதிக்காதவனாகக் காணப்படுகிறான்.*

## மந்திரி, மக்களின் வெறுப்புக்குள்ளானவன்

வீரராஜனின் கெட்ட நடத்தைகளினால் அவன் மந்திரிகள், மக்களிடம் வெறுப்புக்குள்ளானவன் ஆனான். பசவனுக்கு அளவிற்கு அதிகமாக இடம் கொடுத்திருந்ததினால் அரசனின் மீது இவ்வெறுப்பு ஏற்பட்டது எனலாம்.

அரச சபையில் பசவனுக்குப் புதிதாக ஆசனம் போடப்பட்டதைக் கண்டித்து போபண்ணா அரசனிடம், "நாவிதனுக்கு ஆசனம் போடுவதை குடகன் ஒப்புக்கொள்ள மாட்டான்"[34] என்கிறான். அதற்கு அரசன், "அது என் விருப்பம், அரசன் நீயா, நானா?"[35] எனக் கேட்கிறான். இதன்மூலம் இருவருக்குமிடையே மன வேறுபாடு ஏற்பட்டது.

இதனால் போபண்ணா வீரராஜனைப் பட்டத்திலிருந்து இறக்கி அவனது மனைவி அல்லது மகளைப் பட்டத்தில் அமர்த்த மக்களின் உதவியுடன் ஆங்கிலேயரிடம் முறையிடுகிறான். மேலும், பெண்களைக் கடத்திச் சென்றதன் மூலமும், பல்வேறு கொலைகளைச் செய்ததன் மூலமும், "தன் தங்கையைச் சிறையிலடைத்து துன்புறுத்தியதன் மூலமும்"[36] வீரராஜன் மக்களின் வெறுப்பிற்கும் உள்ளானான்.

## பதவி நீக்கம்

தங்கையைச் சிறையிலிட்டுத் துன்புறுத்தியதன் மூலமும், அவளது குழந்தையைக் கொன்றதன் மூலமும் சென்ன பசவன் அரசனைப் பட்டத்திலிருந்து நீக்க வேண்டும் என ஆங்கிலேயரிடம் முறையிட்டான். அதேபோல, போபண்ணா, லட்சுமிநாராயணய்யா போன்ற மந்திரிகளும், மக்களும் அரசனைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும் என முறையிட்டனர். இதனால், ஆங்கிலேயர்கள் "வீரராஜனைப் பதவியிலிருந்து நீக்கி குடகை தம் வசப்படுத்தி, அரசனை வேலூருக்கு நாடுகடத்தினர்"[37] என்கிறார்.

## இங்கிலாந்து சென்றான்

தன் மகளுடன் இங்கிலாந்து சென்ற வீரராஜன் தன் மகளைக் கிறித்தவ மதத்திற்கு மாற்றினான். "அங்குச் சில காலம் வாழ்ந்த பின்னர்

இங்கிலாந்திலேயே மரணமடைந்தான்."[38] இவ்வாறு வீரராஜன் பல்வேறு கெட்ட குணங்களைக் கொண்டு வாழ்ந்ததினால் அவனது ஆட்சிகாலம் மக்களால் விரும்பப்படாத ஒன்றாக இருந்தது.

**இணை மாந்தர்கள்**

தலைமை மாந்தர்களை அடுத்துப் புதினத்தில் இணை மாந்தர்கள் சிறப்பிடம் பெறுகின்றனர். இம்மாந்தர்கள் புதினத்தின் ஓட்டத்திற்கு இன்னும் அழகு சேர்க்கின்றனர். பார்த்திபன் கனவில், விக்கிரமனும், அருள்மொழியும் இணைமாந்தர்களாகக் காணப்படுகின்றனர்.

**விக்கிரமன்**

பார்த்திபனுக்கும், அருள்மொழிக்கும் விக்கிரமன் மகனாகப் பிறந்தபொழுது அவர்கள் இன்ப வாழ்க்கையின் எல்லையை அடைந்தார்கள். "சோழ நாட்டின் இளவரசரான இவன் தந்தையைப் போல் நாட்டுப்பற்றுக் கொண்டவனாகக் காணப்பட்டான்."[39]

**விக்கிரமனின் சப்தம்**

விக்கிரமன் உறையூரில் உள்ள சித்திரமண்டபத்திற்குத் தன் தந்தையுடன் சென்று, அங்குத் தன் தந்தை வரைந்த சித்திரங்களைக் கண்டு வியப்புறுகிறான். பின் தந்தையை நோக்கி, "இந்தச் சித்திரங்கள் எல்லாம் எவ்வளவு தத்ரூபமாய், உணர்ச்சி பெற்று விளங்குகிறது. இவற்றை ஏன் இந்த திருட்டு மண்டபத்தில் பூட்டி வைத்திருக்கிறீர்கள்? என விக்கிரமன் ஆத்திரமாய்க் கேட்கிறான்."[40]

மேலும், பார்த்திபன் தன் மகனிடம், "சோழர் குலம் பார்த்திபன் மகனால் பெருமையடைந்தது என மக்கள் கூற வேண்டும்."[40] இதனை நீ நிறைவேற்ற வேண்டும் எனக் கேட்கிறான். அதற்கு விக்கிரமன், "செய்வேன் அப்பா! சத்தியமாக செய்வேன்!"[42] என்று சபதம் செய்கிறான்.

**விக்கிரமனின் ஆவேசம்**

விக்கிரமன் சிவனடியாரிடம், "நேற்றிரவு தன் தந்தை என் கனவில் வந்து பல்லவர்களின் கொடியைக் காட்டினார். இனிமேல் பொறுக்க

*மாட்டேன். பல்லவர்களின் கொடியை இறக்கி சோழர்களின் புலிக்கொடியை ஏற்றப் போகிறேன்”[43] என உணர்ச்சிப் பொங்கக் கூறினான். இதனால் கைது செய்யப்பட்டான்.*

**நாடு கடத்தல்**

*கப்பம் கட்ட மறுத்ததால் விக்கிரமன் நரசிம்மவர்மனால் நாடு கடத்தப்பட்டான். மேலும் நரசிம்மரிடம் “நீர் வீரன் என்பது உண்மையானால் என்னிடம் வாட்போர் செய்து ஜெயித்துவிட்டுப் பிறகுக் கப்பம் கேளும்”[44] என ஆவேசமாகப் பேசினான்.*

**செண்பகத் தீவின் அரசனானான்**

*நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் செண்பகத்தீவிற்குச் சென்று அரசனானான். மூன்று வருடங்களுக்கும் மேலாக அங்கு ஆட்சிபுரிந்த அவன் தாய்நாட்டைக் காணும் ஆவலில் இருந்தான்.*

**மாறுவேடம்**

*“தாயையும், தாய்நாட்டையும் தன் உள்ளம் கவர்ந்த பெண்ணையும் காண விக்கிரமன் தேவசேனன் என்னும் பெயருடன் இரத்தின வியாபாரிபோல் மாறுவேடமிட்டுக் கொண்டு தாய்நாட்டிற்கு வந்தான்.”[45] தன் தாயைக் கண்டு ஆசீர்வாதம் பெற்றான்.*

**விக்கிரமன் காதல்**

*காஞ்சி வீதியில் கைதாகிச் சென்றபோது, குந்தவியைக் கண்ட விக்கிரமன் அவளின்பால் காதல் கொண்டான். தாய்நாட்டிற்குத் திரும்பி வந்தபோது, அவளைக் கண்டுத் தன் காதலை வெளிப்படுத்தினான் விக்கிரமன். இவர்களின் காதல், திருமணத்தில் முடிந்தது.*

**கனவை நிறைவேற்றினான்**

*“சுதந்திரமான நாட்டிற்கு அரசனாய் வாழ்ந்து சோழர்குல பெருமையைக் காக்க வேண்டும் என்ற தன் தந்தையின் கனவினை விக்கிரமன் ஒரு சுதந்திர நாட்டிற்கு அரசனாகி நிறைவேற்றினான்.”[46]*

### அருள்மொழி

*அருள்மொழி அன்புக்குப் பாத்திரமானவள்; கற்புக்கு எடுத்துக்காட்டு, "சேரவம்சத்தைச் சேர்ந்த ஒரு சிற்றரசன் மகள். பார்ததிப சோழரை பதியாகத் தன் மனத்தில் வரித்து, வேறொருவரை மணக்க இசையேன் என்றவள்."[47] "கண்ண பிரானே பார்த்திபன் வடிவத்தில் வந்து தன்னை மணந்ததாக எண்ணிப் பூரிப்படைந்தவள்."[48]*

### கணவனுக்கு கொடுத்த வாக்குறுதி

*போருக்குச் செல்லும் முன் பார்த்திபன் அருள்மொழியிடம், "உன் மகன் விக்கிரமனை நீ வீரமகனாய் வளர்க்க வேண்டும். சோழர்குலப் பெருமையைக் கூறி வளர்க்க வேண்டும்"[49] எனக் கூறினான். அதற்கு அருள்மொழி, "கண்களில் நீர் ததும்ப, அப்படியே செய்கிறேன் மகாராஜா!"[50] என்றாள்.*

### இராணியின் துயரம்

*தன் மகன் நாடுகடத்தப்பட்டதை அறிந்த அருள்மொழி மிகுந்த துன்பத்திற்கு ஆளாகி உடல் மெலிந்து காணப்படுகிறாள். "தன் மகன் எங்கே? அவனைப் பார்க்க வேண்டும்"[51] என புலம்புகிறாள். மேலும் "தன் மகன், நரசிம்ம சக்கரவர்த்தியின் மகள் குந்தவியை விரும்புவதைச் சிவனடியாரின் மூலம் அறிந்த அவள் மிகுந்த துயரத்திற்கு ஆளாகிறாள்."[52]*

### அருள்மொழியின் யாத்திரை

*விக்கிரமனின் பிரிவினால் துயருற்ற அருள்மொழி மிகுந்த மனவேதனைக்கு உள்ளாகி யாத்திரை மேற்கொள்கிறாள். திருச்செங்காட்டாங்குடியிலே யாத்திரையின் போது நீராடுகையில் "குழந்தாய்! விக்கிரமா இதோ வந்துவிட்டேன்"[53] என கடலில் பாய்கிறாள்.*

### தாய் - மகன் சந்திப்பு

*தாய்நாட்டிற்குத் திரும்பிய விக்கிரமன் தன் தாயைப் பல்வேறு இடங்களில் தேடி இறுதியில் சந்திக்கிறான். "தன் மகனைக் கண்ட*

அருள்மொழி அவனை ஆரத் தழுவி கண்ணீர் சிந்தினாள்."[54] இவ்வாறு தன் மகனுக்காகவே வாழ்ந்தவளாக அருள்மொழி படைக்கப்பட்டிருக்கிறாள்.

சிக்கவீர இராஜேந்திராவில், நொண்டி பசவனும், இராணி கௌரம்மாஜியும் இணைப்பாத்திரங்களாகக் காணப்படுகின்றனர்.

## நொண்டி பசவன்

வீரராஜனின் நண்பனான நொண்டி பசவன் யார், என்ன என்று ஒருவருக்கும் தெரியாது. "அவன் வீரராஜனை விடக் கொஞ்சம் பெரியவன். கண்களிலே ஒரு பளபளப்பு ; நல்ல சுறுசுறுப்பு ; இளவயதில் காலில் ஏதோ அடிபட்டு கால் முறுக்கிக் கொண்டிருந்தது. திக்கற்ற சிறுவன் நொண்டியபடி நடந்ததால் ஊரெல்லாம் அவனை நொண்டி என்றே அழைத்தது."[55] இவ்வாறு பசவனின் பெயரே நொண்டி என்றாகியது.

## அரசனுக்கு விசுவாசமானவன்

சிறுவயது முதலே அரசனுக்கு நண்பனாக இருந்தமையால் வீரராஜன் அரியணை ஏறியதும் பசவனைத் தன் அமைச்சராக ஆக்கிக் கொண்டான். வீரராஜனின் மனமறிந்து அவனுக்குத் தேவையான எல்லாவற்றையும் செய்யக்கூடியவன் பசவன். வீரராஜன் பசவனை நொண்டி, வேசி மகன் என பலவாறு திட்டினாலும், அதையெல்லாம் பொருட்படுத்தாமல் அவனுக்கும் எப்பொழுதும் விசுவாசமாகவே இருந்து வந்தான்.

## அரசனின் விருப்பமறிந்தவன்

பசவன் வீரராஜனுக்கு எது தேவையோ அதனை உடனே நிறைவேற்றிக் கொடுப்பவன். அரசனுக்குத் தேவையான மது, மாது என எவற்றையும் ஏற்பாடு செய்து கொடுப்பான். ஒருமுறை "சிக்கண்ண செட்டியின் மருமகளின்பால் அரசன் ஆசைப்பட அவளைக் கடத்திக் கொண்டுவந்துவிடுகிறான் நொண்டிபசவன்."[56]

அரசனுக்குச் சோர்வாக இருக்கும் வேளைகளில் அவனைப் பார்க்க வருபவர்களுக்குத் தானே பதில்கூறி அரசனைத் தொந்தரவு செய்யாமல் பார்த்துக் கொள்கிறான்.

**பகவதியின் சந்திப்பு**

"பகவதியைக் காணச் சென்ற பசவனை அவள் இழுத்து அணைத்துக் கொண்டு விம்மி அழத் தொடங்கினாள். இதனால் பகவதி தன்னிடம் ஏதோ தாட்சண்யத்துடன் நடந்துகொள்வதை உணர்ந்தான்."[57] ஆனால் அவள் தான் தன் தாய் என்பதை இறுதிவரை அவன் அறிந்திருக்கவில்லை.

ஒருமுறை பகவதி பசவனிடம் "அரசன் உன்னை நாய்போல் வைத்திருக்கிறானே"[58] என்றாள். அதற்குப் பசவன், "என்ன காப்பாற்றி வளர்த்த தெய்வம் அரசன்."[59] ஆதலால் அவருக்கு எப்பொழுதும் நான் விசுவாசமாக இருப்பேன் என்று கூறுகிறான்.

**அரசனால் சுடப்பட்டான்**

வீரராஜனுக்கு அதிக அளவினில் விசுவாசமாக இருந்தாலும், ஆங்கிலேயர் வீரராஜனைக் கைது செய்தபோது, தன்னைக் காட்டிக்கொடுத்தவன் 'பசவன்'தான் என எண்ணி "பசவனைத் தன் துப்பாக்கியால் சுடுகிறான் வீரராஜன்."[60] தன்னைத் தன் முதலாளியே சுடுகிறாரே என எண்ணிய வண்ணம் நொண்டிபசவன் தரையில் விழுந்து இறந்து படுகிறான்.

**இராணி கௌரம்மாஜி**

கௌரம்மா குடகப் பெண். அவள் அழகியும் கூட. ஆனால் அவள் அழகைவிட அதிகமாக அவளைப் பார்ப்பவர்களின் மனத்தைக் கவர்ந்தது அவளுடைய கம்பீரமான நடத்தை. பெண்ணிற்குச் சிறிது அதிகமோ என்று சொல்லக்கூடிய உயரம். "நேராக நிற்பாள் ; நேராகப் பார்ப்பாள் ; பேச்சு அதிகமில்லை. அவள் மனத்தில் என்னென்ன ஓடிக்கொண்டிருக்கிறது என்று சுலபத்தில் அறிந்துகொள்ள முடியாது."[61]

## பொறுப்பும், பொறுமையும் கொண்டவள்

*வீரராஜன் வர்த்தகத் தலைவனான சிக்கண்ண செட்டியிடமிருந்து அளவிற்கு அதிகமாகப் பணம் பெற்றதனால், கடன் அதிகமாயிற்று, சிக்கண்ண செட்டி இராணியிடம் இதனைக் கூறுகிறான். இதனைக் கேட்ட இராணி, "தம் நகைகளை விற்றுக் கடனை அடைத்து அரண்மனையைக் காப்பாற்றுகிறாள்."[62] இதன் மூலம் அவளுடைய பொறுப்புத் திறம்பட விளங்கி நிற்கிறது.*

*"வீரராஜன் கௌரம்மாஜியை வேசி, தாசி, விபச்சாரி என்றெல்லாம் திட்டும் பொழுது பொறுமையாக இருந்து, தன் கணவனுக்குச் சித்தபிரமை பிடித்த பொழுது காப்பாற்றப் பல்வேறு பூசை முறைகளும், வைத்தியங்களும், பரிகாரங்களும் செய்கிறாள்."[63]*

## தேவம்மாஜியை காப்பாற்றினாள்

*வீரராஜனின் தங்கையான தேவம்மாஜி தன் அண்ணனால் சிறைபடுத்தப்பட்ட பொழுது, அவளைக் காப்பாற்றப் பல்வேறு முயற்சிகளை மேற்கொள்கிறாள். "தன் மகளிடம், அப்பாவிடம் சென்று அத்தையை அனுப்புமாறு கூறு"[64] எனக் கேட்கச் செய்கிறாள். இறுதியில் கிரகங்களின் நிலையைக் கூறி தேவம்மாஜியைக் காப்பாற்றி சிறையிலிருந்து விடுவித்து, அப்பங்கொளத்து அரண்மனைக்கு அனுப்பி வைக்கிறாள்.*

## கணவனை விட்டுக்கொடுக்காதவள்

*ஆங்கிலேயர்கள் வீரராஜனைக் கைது செய்து அவனை வேலூருக்கு நாடு கடத்தினர். அப்போது இராணியிடம், "நீங்கள் இங்கேயே இருக்கலாம். நாட்டை ஆளலாம்"[65] என்று கூறுகின்றனர். அதற்கு இராணி, "நான் ஒருபோதும் என் கணவருக்கு எதிராக நடந்து கொள்ள மாட்டேன். என் கணவன் இருக்கும் இடமே எனக்கு சொர்க்கம்"[66] எனக் கூறி, தானும் கணவனுடன் செல்கிறாள்.*

## இராணியின் யாத்திரை

*தன் மகள் கிறித்தவ மத்தின்பால் ஈடுபாடு கொண்டிருந்ததை இராணி விரும்பவில்லை. காசிக்கு யாத்திரை மேற்கொண்டாள்.*

யாத்திரை முடித்து திரும்பிவந்த இரண்டு திங்களுக்குள் இராணி இறந்துபட்டாள். இவ்வாறு இராணி கௌரம்மாஜி மறம் உடைய பெண்ணாகவும், கணவனை மதிப்பவளாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளாள்.

## துணைமை மாந்தர்கள்

வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்விலும் ஒரு துணை அவசியமாகிறது. ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் துணைகளாகின்றனர். அதுபோன்றே ஒரு புதினத்தில் தலைமை மாந்தர்களுக்கு இணையாகத் துணைமை மாந்தர்களும் செயல்புரிகின்றனர். "சில மாந்தர்கள் ஆங்காங்கே உள்ள நிகழ்ச்சிகளில் மட்டும் இடம்பெறும். இம்மாந்தர்களும் புதினம் வளர்ச்சிக்குத் துணைநிற்பனவாகும். அத்தகு மாந்தர்களைத் துணைமாந்தர்கள் என்று கூறலாம்."[67] 'பார்த்திபன் கனவில், துணைமை மாந்தர்களாகக் குந்தவி தேவி, மாரப்ப பூபதி, பொன்னன், வள்ளி, பரஞ்சோதி அடிகள், நீலகேசி, வீரபத்திர ஆச்சாரி போன்றோர் காணப்படுகின்றனர்.'

## குந்தவி தேவி

குந்தவி தாயில்லாப் பெண். "அவளின் தாயும், நரசிம்மப் பல்லவரின் மனைவியுமான வானமாதேவி, குந்தவி ஏழு வயதுக் குழந்தையாக இருந்தபோதே இறந்துவிட்டாள்."[68] "சக்கரவர்த்தியே அவளுக்குத் தாயும் தகப்பனுமாயிருந்து வளர்க்க வேண்டியதாயிற்று."[69]

"காஞ்சிபுர வீதியில் சோழ இளவரசன் விக்கிரமனைக் கண்டு காதல் வயப்படுகிறாள்."[70] அவன் தன் தந்தையால் நாடு கடத்தப்பட்ட போது மிகுந்த துன்பத்திற்கு ஆளாகின்றாள். சிவனடியார்தான் இளவரசரைத் தூண்டிவிட்டதாக எண்ணி, அவரைக் கண்டறிய மாரப்பனின் உதவியை நாடுகிறாள்.

"விக்கிரமன் இல்லாத மூன்று ஆண்டுகாலமும் குந்தவி மனவேதனையில் தவிக்கின்றாள்."[71] பின்னர் இரத்தின வியாபாரியாக வேடமிட்டுக் கொண்டு வந்தவன் விக்கிரமன்தான் என்பதையும்,

அவனும் தன்மீது காதல் கொண்டிருப்பதையும் அறிந்து பெரும் மகிழ்ச்சி அடைகின்றாள்.

"அருள்மொழியையும், அப்பர் பெருமானையும் சந்தித்து ஆசீர்வாதம் பெறுகின்றாள்."[72] நாடுகடத்தப்பட்ட விக்கிரமன் திரும்பி வந்ததனால் அவனுக்குத் தன் தந்தை மரண தண்டனை அளிப்பாரோ என எண்ணி, வேதனையடைகின்றாள். அவனுக்காகத் தந்தையிடம் வாதிடுகின்றாள். இறுதியில் தன் தந்தையின் மூலம் விக்கிரமனை மணந்து கொள்கின்றாள். இவ்வாறு குந்தவியின் காதல் எண்ணம் சிறப்பாக விவரிக்கப்பட்டுள்ளது.

## மாரப்பப் பூபதி

மாரப்பப் பூபதி அரசியல் சூழ்ச்சி செய்பவனாகவும், தான் ஆட்சியைப்பெற பல்வேறு இன்னல்களைக் கொடுப்பவனாகவும் படைக்கப்பட்டுள்ளான்.

பார்த்திபன் போருக்குச் செல்லும் போது, "தனக்கு உடல்நிலை சரியில்லை என்று கூறி ஒதுங்கிக் கொள்கிறான்."[73] விக்கிரமனைப் பல்லவ அரசனுக்கு எதிராகத் தூண்டிவிட்டு அவனைக் கைதுசெய்ய வைக்கின்றான்.

"நரசிம்மரின் மகள் குந்தவியைத் திருமணம் செய்துகொள்ள வீரபத்திர ஆச்சாரியிடம் சோசியம் கேட்டு அதற்காக முயற்சிக்கிறான்."[74]

பின்னர், அரியணை ஏறுவதற்காக நரபலி கும்பலுடன் சேர்ந்து கொண்டு விக்கிரமன், சிவனடியார், இராணி அருள்மொழி இவர்களைப் பலியிட ஏற்பாடு செய்கின்றான். இவ்வாறு கெட்ட குணங்களும், எண்ணங்களும் கொண்ட ஒரு அமைச்சராக மாரப்ப பூபதி படைக்கப்பட்டுள்ளான்.

## பொன்னன்

அரச குடும்பத்தோடு தொடர்புடையவனாகவும், அரசனுக்கும், அவரது குடும்பத்திற்கும் பல்வேறு நன்மைகள் புரிபவனாகவும் படகோட்டிப் பொன்னன் சித்திரிக்கப்பட்டுள்ளான்.

பார்த்திபனிடம், “அரசே தன்னையும் போருக்கு அழைத்துச் செல்லுங்கள்”[75] எனக் கூறும் போது அவனது நாட்டுப்பற்று விளங்குகிறது.

பார்த்திபன் போரில் வீரமரணம் அடைந்த பிறகு விக்கிரமனுக்கும், அருள்மொழிக்கும் எல்லா வகையிலும் உறுதுணையாக இருக்கிறான் பொன்னன்.

விக்கிரமனுடன் அச்சுதவர்மனின் தலைமையிலான படைகள் போரிட்ட போது, அவனுக்கு ஆதரவாகத் தானும் போரிட்டான். “அரண்மனையிலிருந்து உடைவாளும், ஓலைச்சுவடியும் இருந்த பெட்டியை மீட்டு அருள்மொழியிடம் சேர்ப்பிக்கிறான்.”[76]

காட்டாற்றில் மாட்டிக்கொண்ட விக்கிரமனைக் காப்பாற்றிக் கரையேற்றுகிறான். “சிவனடியாருடன் சேர்ந்து நரபலி கொடுக்கும் கும்பலைக் கண்டறிய உறுதுணையாக இருக்கிறான்.”[77] இவ்வாறு பொன்னன் தொடக்கம் முதல் இறுதி வரையில், அரச குடும்பத்துடன் தொடர்புடைய ஒரு பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளான்.

**வள்ளி**

பொன்னனோடு சேர்ந்து அவனது மனைவி வள்ளியும் அரசகுடும்பத்துடன் தொடர்புடையவளாகவும், அவர்களுக்கு உதவி புரிபவளாகவும் திகழ்கின்றாள். வாய் துடுக்கான வள்ளி கணவனின்பால் மிகுந்த அக்கறை கொண்டவளாகவும் திகழ்கின்றாள். “போருக்குப் போகிறேன் என்ற பொன்னனிடம், நீ போருக்குப் போனால் என்னையும் உடன் அழைத்துப்போ”[78] என்று கூறுகின்றாள்.

மாரப்பனிடமிருந்து குந்தவியைக் காப்பாற்ற பல்வேறு முயற்சிகளை மேற்கொள்கிறாள். “சிவனடியார் யார் என்ற உண்மையைத் தான் அறிந்திருந்த போதிலும், அதனைத் தன் கணவனிடம்கூட சொல்லாமல் மறைத்து வைத்திருந்தாள்.”[79]

“பொன்னனுடன் சேர்ந்து சோழர் குலக் கருவூலங்கள் இருந்த பெட்டியை எடுக்க உறுதுணையாக இருக்கிறாள்.”[80] இவ்வாறு வள்ளி, அரச குடும்பத்திற்கு உதவி புரிபவளாகவும், கணவன்மீது மிகுந்த அன்பு கொண்டவளாகவும் காணப்படுகிறாள்.

**பரஞ்சோதி அடிகள்**

சிறுத்தொண்டர் எனப் பெயர் மாற்றிக்கொண்ட பரஞ்சோதி, நரசிம்மப் பல்லவனுக்குப் பலவகையினில் உதவி புரிபவனாகத் திகழ்கின்றார். “வாதாபி மீது படையெடுத்துச் சென்றபோது, நரசிம்மனுடன் தானும் சென்று புலிகேசியைத் தோற்கடிக்க உறுதுணையாக இருந்தான்.”[81] கபால பைரவன் சிவனடியாரையும், விக்கிரமனையும் கடத்திச் சென்றபோது, பரஞ்சோதி ஆட்களுடன் அங்குச் சென்று இருவரையும் காப்பாற்றுகின்றார். இதன் மூலம் நரசிம்ம சக்கரவர்த்திக்கு உறுதுணையாக இருக்கும் பாத்திரமாகப் பரஞ்சோதி படைக்கப்பட்டுள்ளார்.

**வீரபத்திர ஆச்சாரி**

வள்ளியின் தாத்தாவான வீரபத்திர ஆசாரி மிகுந்த நாட்டப்பற்று மிகுந்தவராகக் காணப்படுகிறார். மேலும் சோசியம் பார்க்கும் தொழிலையும் செய்துவந்தான். “மாரப்பப் பூபதிக்குப் பலநேரங்களில் சோசியம் கூறியிருக்கிறான்.”[82]

விக்கிரமன் சிங்கக் கொடியை இறக்கிப் புலிக்கொடியை ஏற்ற முயற்சித்தபோது, “அச்சுதவர்மன் தலைமையிலான படைகள் அவனுடன் போரிட்டனர். இதனைக் கண்ட வீரபத்திர ஆசாரி, தானும் அவர்களுடன் போரிட்டு எட்டுப் பல்லவ வீரர்களின் தலையைச் சாய்த்தான்”[83] என்று குறிப்பிடப் பெற்றுள்ளது.

இவனது வீரத்தை மெச்சிய அச்சுதவர்மன் அவருக்கு இராஜமரியாதைக் கொடுத்து, இறுதிச் சடங்கு நடத்தப்பட்டது. இவ்வாறு வீரபத்திர ஆச்சாரி நாட்டுப் பற்று மிகுந்தவராகக் காணப்படுகிறான்.

இதேபோல, சிக்கவீர இராஜேந்திராவில், போபண்ணா, லட்சுமிநாராயணய்யா, இராஜகுமாரி, தேவம்மாஜி, சென்னபசவன், பகவதி, தீட்சிதர் போன்றோர் துணைமை மாந்தர்களாகக் கூறப்படுகின்றனர்.

**போபண்ணா**

குடவ மந்திரிகளில் ஒருவரான போபண்ணா அரசனின் செயல்களை வெறுப்பவனாகவும், சற்று முன்கோபம் கொண்டவராகவும் காணப்படுகிறார். இவர் குடவ இராணி கௌரம்மாஜிக்கு உறவுமுறை. அரசனை எதிர்த்துப் பேசி வாதிடும் ஒரு அமைச்சராகவும் திகழ்கின்றார்.

“அரச சபையில் பசவனுக்குப் புதிதாக இருக்கை போட்டபோதும், சூரிய நாராயணனின் மனைவியை அரசனின் ஆட்கள் கடத்திச் சென்ற போதும், கௌரம்மாஜியுடன் தன்னைச் சேர்த்து வைத்துப் பேசிய போதும் போபண்ணா அரசனுடன் எதிர்த்துப் பேசி விவாதம் செய்கிறான்.”[84]

“மற்ற மந்திரிகள், மக்களுடன் கலந்தாலோசித்து, ஆங்கிலேயர்களின் உதவியுடன் வீரராஜனைப் பட்டத்திலிருந்து நீக்குவதற்கு உறுதுணையாக இருக்கிறான்.”[85] மொத்தத்தில் அரசனை எதிர்க்கும் ஓர் அமைச்சராகச் சித்திரிக்கப்பட்டுள்ளான்.

**லட்சுமிநாராயணய்யா**

போபண்ணாவைப் போன்றே லட்சுமிநாராயணய்யாவும் அரசனின் செயல்களை வெறுப்பவன். ஆனாலும், அவனை எதிர்த்துப் பேசாமல் சாதுவாக நடந்து கொள்வான்.

“போபண்ணாவிற்கும், அரசனுக்கும் விவாதம் நடக்கும் போது, இடைமறித்து அவர்களைச் சமாதானப்படுத்தும் மந்திரியாக லட்சுமிநாராயணய்யா திகழ்கின்றான்.”[86]

“அரசன் சிக்கண்ண செட்டியின் மருமகளைக் கடத்திச்செல்லத் திட்டமிடும்பொழுது, தனது தாயின் உதவியுடன் அவளைக் காப்பாற்றுகிறான்.”[87]

தொடக்கம் முதல் இறுதிவரை இராணிக்கு உறுதுணையாகவும், போபண்ணாவிற்கு உற்ற நண்பனாகவும், அரசனின் செயலை வெறுத்தாலும் அவனிடம் சாதுவாக நடந்துகொள்ளும் ஒரு பாத்திரமாக லட்சுமிநாராயணய்யா சித்திரிக்கப்பட்டுள்ளான்.

### இராஜகுமாரி

வீரராஜன், கௌரம்மாஜியின் மகளான இராஜகுமாரி, இரக்கக் குணம் கொண்டவளாகவும், அத்தைக்கு வாதிடும் ஒரு பெண்ணாகவும் படைக்கப்பட்டுள்ளாள்.

தன் தாயிடம் கூறி, சிறையிலிருக்கும் அத்தையைக் காண மாமாவான சென்னபசவனை வரவழைக்கிறாள். தன் தந்தையிடம் சென்று, "அப்பா அத்தையை அப்பங்கொளத்திற்கு அனுப்பிவிடுங்கள்"[88] என்று கூறி, இறுதியில் அத்தைக்கு விடுதலை வாங்கிக் கொடுக்கிறாள்.

போபண்ணாவின் உறவினரான உத்தய்யனைத் தான் விரும்பியபோதும், தந்தைக்கு அதில் விருப்பமில்லாததை அறிந்து தன் காதலை மறைத்துக்கொள்கிறாள். தன் தந்தையின் விருப்பப்படி தலைவன் துரையைத் திருமணம் செய்து, கிறித்தவ மதத்திற்கு மாறுகிறாள். இவ்வாறு இராஜகுமாரி தந்தையை மதித்து நடப்பவளாகவும், பெரியோரை மதிப்பவளாகவும், இரக்கக் குணம் கொண்டவளாகவும் படைக்கப்பட்டுள்ளாள்.

### தேவம்மாஜி

வீரராஜனின் தங்கையான தேவம்மாஜி, அண்ணனின் மீது வெறுப்பு கொண்ட ஒரு பாத்திரமாக அமைக்கப்பட்டுள்ளாள். அண்ணனால் சிறைப்படுத்தப்பட்டுப் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகின்றாள்.

"அப்பங்கொளத்திலிருந்து தப்பிச் செல்லும்போது, வழியில் தவறவிட்டத் தனது குழந்தையை அண்ணன் கொலை செய்ததைக் கேட்டதும், அவன் மீதான வெறுப்பும் இன்னும் அதிகமாகியது."[89]

*தான் பட்டத்திற்கு வந்து, அண்ணனைப் பட்டத்திலிருந்து இறக்கப் பலவாறு போராடினாள்.*

**சென்ன பசவன்**

*தேவம்மாஜியின் கணவனான சென்ன பசவன், வீரராஜனைப் பட்டத்திலிருந்து இறக்கப் பலவாறு போராடுகின்றான். தன் மனைவி அரியணையில் ஏறவேண்டுமென்றும், அதன்மூலம் தான் நாட்டை மறைமுகமாக ஆளவேண்டுமென்றும் சென்னபசவன் நினைக்கின்றான்.*

*ஆங்கிலேயர்களிடம் சென்று, "மன்னனின் ஆட்சி சரியில்லை. அவனைப் பட்டத்திலிருந்து நீக்கி, தன் மனைவிக்குப் பட்டத்தைக் கொடுங்கள்,"[90] எனக் கூறுகின்றான். மேலும் பல்வேறு புகார் கடிதங்களையும் எழுதுகின்றான். இதனால் அரசனின் வெறுப்பிற்கு உள்ளானான். இவ்வாறு சென்னபசவன் பாத்திரம் அமைந்துள்ளது.*

**பகவதி**

*பகவதி என்னும் பெயருடையப் பாப்பா, ஒரு காலத்தில் லிங்கராஜனின் ஆசை நாயகியாக இருந்தவள் என சித்திரிக்கப் பட்டுள்ளது. இவள், மிக்கக் கம்பீரமும், சாதுவும் கூடியவளாகவும், பல்வேறு மந்திரங்களின் மூலம் நோய்களைக் குணப்படுத்தும் மலையாள மாந்திரீகராகவும் படைக்கப்பட்டுள்ளாள்.*

*"தன் மகன் பசவன், அரசனுக்கு வேலைக்காரன் போல் இருப்பதை விரும்பாத பகவதி அவனை அரியணையில் அமர்த்தப் பல்வேறு முயற்சிகளை மேற்கொள்கிறாள். ஆங்கிலேயரின் உதவியுடன் அதனை நிறைவேற்றப் பாடுபடுகிறாள்."[91]*

*இறுதியில் தன் மகன் அரசனால் கொல்லப்பட்டதை அறிந்து கண்காணாத இடத்திற்குச் சென்றுவிடுகின்றாள். இவ்வாறு மகனுக்காகப் போராடும் ஒரு பாத்திரமாகப் பகவதி சித்திரிக்கப் பட்டுள்ளாள்.*

**தீட்சிதர்**

புதினத்தின் தொடக்கம் முதல் இறுதிவரை வரக்கூடிய ஒரு ஊன்று பாத்திரமாகத் தீட்சிதர் படைக்கப்பட்டிருக்கிறார். இராணிக்குப் பல்வேறு நிலைகளில் ஆலோசனைகள் கூறுபவராகவும் திகழ்கின்றார்.

"கம்சன், தேவகி சாதகம் போல் அரசனின் சாதகம் உள்ளது. எனவே சிறையிலிருக்கும் தேவம்மாஜியை அனுப்பிவிடுங்கள்"[92] என எச்சரிக்கும்போது, அரசக் குடும்பத்தின் மீது கொண்டப் பற்று விளங்கி நிற்கிறது. மேலும், திருவிழாவிற்கும், ஆங்கிலேயர்களின் வருகைக்கும் நாள் குறித்துக் கொடுப்பதன் மூலம் அரண்மனைச் சோதிடராகவும் கூறப்படுகிறார்.

இறுதியில் இராணி கௌரம்மாஜி இறந்த பிறகு அவளுக்காகப் பல்வேறு, புண்ணிய இடங்களுக்கு யாத்திரை மேற்கொண்டு அவளின் ஆத்மா சாந்தியடையச் செய்கிறார்.

**பிற நாட்டு மாந்தர்கள்**

பிறநாட்டு மாந்தர்கள் என்பது இரண்டுப் புதினங்களிலும் சிறப்பான முறையினில் படைக்கப்பட்டுள்ளது. பார்த்திபன் கனவில் ஒரு பாத்திரமும், சிக்கவீர இராஜேந்திராவில் எட்டுப் பாத்திரங்களும் பிறநாட்டுப் பாத்திரங்களாகக் காணப்படுகின்றனர். பார்த்திபன் கனவில், சீன யாத்திரிகரான யுவான் சுவாங் பிறநாட்டுப் பாத்திரமாகச் சுட்டப்படுகிறார்.

**யுவான் சுவாங்**

சீன தேசத்து யாத்திரிகரான யுவான் சுவாங் பற்றிச் சொல்லப்படுகிறது. விக்கிரமன், குந்தவியிடம் மகேந்திரன் எங்கே? எனக் கேட்கிறான். அதற்குக் குந்தவி, "சீன தேசத்திலிருந்து யாரோ ஒரு யாத்திரிகர் வந்திருக்கிறாராம். அவர் இந்தப் பாரத நாடு முழுவதும் யாத்திரை செய்துவிட்டுக் காஞ்சிக்கு வருகிறாராம். 'யுவான் சுவாங்' என்ற விசித்திரமானப் பெயரையுடையவராம். அவரை வரவேற்று உபசரிக்க மகேந்திரன் சென்றிருக்கிறார்"[93] எனக் கூறுகிறாள். இவ்வாறு

பார்த்திபன் கனவில், பிறநாட்டு மாந்தர்களாக யுவான் சுவாங் மட்டும் காணப்படுகிறார்.

சிக்கவீர இராஜேந்திராவில் ஆங்கில அதிகாரி, பிரேசர் துரை, கேப்டன் துரை, விக்டோரியா மகாராணி, எடித்சாது, லூஸி, ஹெலன், பாதிரியார் மேக்லிங் போன்ற எட்டு மாந்தர்கள் பிறநாட்டு மாந்தர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

**ஆங்கில அதிகாரி**

வீரராஜன் நண்பராக வரும் ஆங்கில அதிகாரி அவனின் அழைப்பை ஏற்று விருந்துக்கு வருகிறான். "அங்கு நடைபெற்ற திருவிழா நிகழ்வுகளிலும் சிறப்பாகக் கலந்து கொள்கிறான்"[94] ஆனபோதிலும், வீரராஜனின் மீது புகார் கடிதம் வந்தபோது, அவனைப் பட்டத்திலிருந்து இறக்க உறுதுணையாக இருக்கிறான்.

**பிரேசர் துரை**

ஆங்கிலத் தளபதியான பிரேசர் துரை வீரராஜனை ஆட்சியிலிருந்து இறக்கப் படைகளைத் திரட்டிக் கொண்டுப் போரிட வருகிறான். பின்னர், போபண்ணா, "நாங்களே அரசனை பட்டத்திலிருந்து விலக்கிவிட்டோம்"[95] எனக் கூற உடனே பிரேசர்துரை அதனை ஒப்பந்தமாகப் போபண்ணாவிடம் எழுதிவாங்கிக் கொண்டான். அதில், தாங்கள் படைதிரட்டிக் கொண்டுவந்ததற்கான செலவைத் திருப்பித் தரவேண்டும் எனக் கூறப்பட்டிருந்தது.

பிரேசர் தலைமையில், வீரராஜன் பட்டத்திலிருந்து நீக்கப்பட்டதாகக் கடிதத்தில் அறிவிக்கப்பட்டது. அக்கடிதத்தில் "குடகு நாட்டு மக்கள் இனிமேல் தங்களுக்கு வீரராஜேந்திர உடையார் அரசராக இருக்கக் கூடாதென்றும், கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆங்கில சர்க்கார் இந்த நாட்டை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்றும், ஏகமனதாகத் தீர்மானித்ததனால் அந்த அரசர் இதுவரை ஆண்டுவந்த இந்த நாட்டை இந்திய தேசத்தின் ஆளுநர் துரையவர்கள் மகிழ்ச்சியுடன் கனம் கம்பெனி அரசின் ஆட்சியின் கீழ் எடுத்துக்கொண்டுள்ளார்"[96] எனக்

*கூறப்பட்டிருந்தது. இவ்வாறு பிரேசர்துரை அவர்கள் வீரராஜனைப் பதவிநீக்கம் செய்யும் ஆங்கில அதிகாரியாகப் படைக்கப்பட்டுள்ளார்.*

**கேப்டன்துரை**

*வீரராஜனின் மகளான இராஜகுமாரியின் கணவனாக கேப்டன் துரை கூறப்படுகிறான். "இங்கிலாந்து சென்ற வீரராஜன் அங்கு தன் மகளுக்கும் கேப்டன் துரைக்கும் திருமணம் செய்துவைத்தான்"[97] எனக் கூறப்பட்டுள்ளது.*

**விக்டோரியா மகாராணி**

*இங்கிலாந்தில் தனது மகளைக் கிறித்தவ மதத்தில் சேர்ப்பதற்காக "விக்டோரியா மகாராணிக்கு வீரராஜன் விண்ணப்பம் செய்தான்"[98] எனக் விளக்கப்படுகிறது.*

**எடித் சாது**

*வீரராஜனின் மகளான இராஜகுமாரிக்கும், கேப்டன் துரைக்கும் பிறந்த மகள் எடித் சாது. இவள் தாய், தந்தையின் மீது மிகுந்த பற்றுக் கொண்டவளாகக் காணப்படுகிறாள். தன் பூர்வீக நாடான குடகைக் காண ஆவலாக இருக்கும் பெண்ணாகச் சித்திரிக்கப்பட்டுள்ளாள்.*

**லூஸி**

*ஆங்கில அதிகாரியுடன் வீரராஜனின் விருந்துக்கு வரும் ஆங்கிலப் பெண்ணாக லூஸி கூறப்படுகின்றாள். இவள் குடகின் அழகிலும், அரண்மனை ஆபரணங்களிலும் பற்றுக் கொண்டவளாகக் காணப்படுகின்றாள்.*

**ஹெலன்**

*லூஸியுடன் விருந்துக்கு வந்த மற்றொரு பெண்ணாக ஹெலன் கூறப்படுகிறாள். இவளும் அரண்மனை ஆபரணங்களின் மீது ஆர்வம் கொண்டவளாகச் சித்திரிக்கப்பட்டுள்ளாள்.*

**பாதிரியார் மேக்லிங்**

*குடகில் மதப்பிரச்சாரம் செய்யும் ஆங்கில பாதிரியாராக மேக்லிங் படைக்கப்பட்டிருக்கிறார். "மதப் பிரச்சாரத்தின் மூலம்*

குடகர்களைக் கிறித்தவ மதத்திற்கு மாற்றுவதே இவரின் நோக்கமாக இருந்தது."[99] இவ்வாறு பிறநாட்டு மாந்தர்கள் பற்றிச் சிறப்பாக எடுத்துரைக்கப்படுகிறது.

## அஃறிணை மாந்தர்கள்

அஃறிணைப் படைப்புக்கள் சிக்கவீர இராஜேந்திராவில் கூறப்படவில்லை. ஆனால், பார்த்திபன் கனவில், பாரிஜாதம், புஷ்பகம் போன்ற குதிரைகள் பற்றியும், சோழர்களின் பட்டத்து யானைப் பற்றியும் விளக்கப்படுகிறது.

## பட்டத்து யானை

பார்த்திபச் சோழர் போருக்குப் புறப்படும் பொழுது அறிமுகப்படுத்தப்பட்டது அவருடைய பட்டத்து யானை. போரில் இறந்துபட்ட வீரர்களுக்கிடையே மன்னரைத் தேடிக்கண்டு, தன் கையால் தடவிக்கொடுத்துப் பின்னர்ச் சோகமும், தீனமும் கலந்த பிளிற்றொலியை எழுப்பிக் குன்றெனச் சாய்ந்து, அதிர்ந்து அமைதி அடைந்தது. "பிணங்களுக்கிடையே அவற்றை மிதிக்காமல் சர்வ ஜாக்கிரதையாக அது நடந்து சென்றது. உயிரற்ற உடல்கள் குவியலாக இருக்கக் கண்டு, ஒவ்வொரு உடலாக எடுத்து அப்பால் மெதுவாக வைத்ததைப் பார்க்கும் பொழுது, வீரர்கள் இறந்த பின் அவர்களுக்கு மரியாதை காட்டுவது போல் அது செயல்பட்டது."[100] "மன்னரின் உடலைத் தடவிக் கொடுத்த காட்சி, தான் ஈன்று புறந்தந்த குழந்தையை மடிமீதிட்டு அன்னை தன் கையால் தழுவிக் கொள்ளும் காட்சியை விவரிக்கின்றது. அதன் பிளிற்றொலி அன்னையின் அடிவயிற்றிலிருந்து எழும் அலை ஒலியை நினைப்பூட்டுகிறது சாய்ந்து சில நொடிகளில் சலனமற்ற நிலையை அடைந்ததை நோக்கும் பொழுது ஆவி ஒக்க விடும் உயிர்த்துணையாகக் காட்சியளிக்கின்றது."[101] இது நண்பனாய், உயிர்த்தோழனாய், அன்னையாய், இல்லாளாய் இருக்க வேண்டியவரின் பண்பனைத்தும் ஒருங்கே பெற்றதாய், அந்த யானை திகழ்கின்றது.

**புஷ்பகம்**

*நரசிம்மரின் இரண்டு குதிரைகளில் ஒன்றின் பெயர் புஷ்பகம், நரசிம்மர் ஒற்றர் படைத்தலைவன் போல் வேடமிட்டுக் கொண்டு, விக்கிரமனைக் காப்பாற்றிச் சிற்பியின் வீட்டிற்குச் செல்லும் பொழுது. "புஷ்பகம் நேரே கூடம், முற்றம் எல்லாவற்றையும் தாண்டிப் பின்புறத்திற்குப் பழக்கப்பட்டது போல் செல்கிறதாகப் படைக்கப்பட்டுள்ளது."*[102]

**பாரிஜாதம்**

*இரண்டு குதிரைகளில் மற்றதன் பெயர் பாரிஜாதம். இதனைப் பற்றிய செய்திகள், குறிப்புக்கள் இடம்பெறவில்லை. இவ்வாறு பார்த்திபன் கனவில் அஃறிணைப் பாத்திரங்கள் பற்றிக் கூறப்படுகிறது. ஆனால், சிக்கவீர இராஜேந்திராவில், அஃறிணை மாந்தர் பற்றியக் குறிப்புக்கள் இடம்பெறவில்லை.*

**பிற பாத்திரங்கள்**

*பார்த்திபன் கனவில் பிற மாந்தர்களாக இருபத்தி ஒன்று பேரும், சிக்கவீர இராஜேந்திராவில், நாற்பத்து ஒன்று பேரும் கூறப்பட்டுள்ளனர். கதையின் ஓட்டத்திற்கு இம்மாந்தர்கள் உயிரோட்டம் கொடுத்துள்ளனர்.*

*பார்த்திபன் கனவில் வரலாற்று மாந்தர்களில் சீராளன், திருநாவுக்கரசு, மகேந்திரன், திருவெண்காட்டு நங்கை போன்றோரும், கற்பனை மாந்தர்களில், அச்சுதப் பல்லவராயன் (தூதன்), அச்சுத வர்மர், அர்ச்சகர், ஆசாரிய ஸ்தபதி, உதயவர்மர், உதயவர்மரின் ஆள், கப்பல் தலைவன், குமரப்பன், சித்தார்த்தன், சித்ர குப்தன் (குள்ளன்) விஷ்ணு சர்மர், வேலப்பன், வைத்தியன், கிழவி, தங்கம், மரகதம், வள்ளியின் பாட்டி போன்றோரும் பிற மாந்தர்களாக விளக்கப்பட்டுள்ளனர்.*

*சிக்கவீர இராஜேந்திராவில் வரலாற்று மாந்தர்களில், லிங்கராஜன், மங்களூர் ஆட்சியர், சென்னை ஆளுநர் போன்றோரும் அரண்மனைச் சேவகன், அப்பாஜி, வீரண்ணா, சூரிய நாராயணன், பாணேபுரோகிதன், உத்தய்ய தக்கன், சேவகன் பித்தய்யா, சென்னவீரன், உத்தய்யன், அபரம்பரர், பார்சண்ணா, ராமப்பா, சூரப்பா, மோகலிங்கம், சிக்கண்ண*

செட்டி, சிக்கராமசெட்டி, பொன்னப்பா, காரியப்பா, அபரம்பரசுவாமி, நாராயணன், ராமசெப்பு, முத்தன், விசுவம், மாசன், பெரிய அதிகாரி, பார்க்கர், இராஜபார்ட், சோமன், லக்கன், துக்ரன், உக்ரி, மணியக்காரர், கொக்கன், போபண்ணாவின் கணக்கப்பிள்ளை, மாதப்பன், சாவித்ரம்மா, நாகம்மா, கொக்கனின் மனைவி, அரண்மனை வேலைக்காரி முதலியோர் கற்பனை மாந்தர்களில் பிற மாந்தர்களாகக் காணப்படுகின்றனர்.

**ஒப்பீடு**

மாந்தர்கள் படைப்பு இரண்டு புதினங்களிலும் சிறப்பான முறையினில் படைக்கப்பட்டுள்ளது. தலைமைப் பாத்திரங்களில், பார்த்திபன் கனவில் வரும் பார்த்திபச் சோழரும், நரசிம்மரும் நல்ல குணம் கொண்டவர்களாகவும், பிறருக்கு உதவுபவர்களாகவும், இரக்கக் குணம் கொண்டவர்களாகவும் சித்திரிக்கப்பட்டிருக்கின்றனர்.

சிக்கவீர இராஜேந்திராவில் கூறப்படும் தலைமை மாந்தரான சிக்கவீர இராஜேந்திரன் எல்லாவித கெட்ட பழக்க வழக்கங்கள் கொண்டவனாகவும், அனைவராலும் வெறுக்கக் கூடிய ஒரு மாந்தராகவும் படைக்கப்பட்டிருக்கிறான்.

இணை மாந்தர்களாகப் பார்த்திபன் கனவில் கூறப்படும் விக்கிரமன் நாட்டுப் பற்று கொண்டவனாகவும், தந்தையின் கனவை நிறைவேற்றப் பாடுபடும் மகனாகவும் இடம்பெற்றுள்ளான். அதேபோல மற்றொரு இணைப் பாத்திரமான அருள்மொழி, கணவனின் ஆணைப்படி மகனை வளர்க்கும் தாயாகச் சித்திரிக்கப் பட்டுள்ளாள்.

மாஸ்தியின் புதினத்தில் வரும் இணை மாந்தரான நொண்டிபசவன் அரசனுக்கு எல்லா கெட்ட பழக்க வழக்கங்களையும் கற்றுக் கொடுப்பவனாகவும், இறுதிவரை அரசனுடன் இருப்பவனாகவும் படைக்கப்பட்டுள்ளான். அதே புதினத்தில் மற்றொரு இணை மாந்தரான இராணி கௌரம்மாஜி கணவனைத் திருத்தப் பாடுபடும்

மனைவியாகவும், அரண்மனைக்கு நற்பெயரைப் பெற்றுத்தரக்கூடிய இராணியாகவும் படைக்கப்பட்டுள்ளாள்.

பார்த்திபன் கனவில் கூறப்படும் மந்திரி கெட்டவனாகவும், நாட்டைச் சீரழிக்கும் ஒரு நபராகவும், பட்டத்தின் மேல் ஆசை கொண்டவனாகவும் கூறப்பட்டுள்ளான். ஆனால் சிக்கவீர இராஜேந்திராவில் கூறப்பட்டுள்ள மந்திரிகள், நாட்டடப்பற்றுக் கொண்டவர்களாகவும், தீய எண்ணம் கொண்ட அரசனிடமிருந்து நாட்டைக் காப்பாற்ற வேண்டும் என எண்ணுபவராகவும் திகழ்கின்றனர்.

பிற நாட்டு மாந்தர்களாகப் பார்த்திபன் கனவில், யுவான் சுவாங் என்னும் சீன யாத்திரிகர் ஒருவர் மட்டும் கூறப்பட்டுள்ளார். சிக்கவீர இராஜேந்திராவில், ஆங்கில அதிகாரி, பிரேசர் துரை, கேப்டன் துரை, விக்டோரியா மகாராணி, லூஸி, ஹெலன், பாதிரி மேக்லிங், எடித்சாது போன்ற எட்டு அயல்நாட்டு மாந்தர்கள் இடம்பெற்றுள்ளனர்.

அஃறிணைப் பாத்திரங்கள் பார்த்திபன் கனவில் இடம்பெற்றுள்ளன. மாஸ்தியின் புதினத்தில் அது இல்லை. பிற மாந்தர்களாகப் பார்த்திபன் கனவில் 21 மாந்தர்கள் கூறப்பட்டுள்ளனர். சிக்கவீர இராஜேந்திராவில் 42 பிறமாந்தர்கள் படைக்கப்பட்டுள்ளனர்.

இரண்டினையும் ஒப்பிடும்பொழுது, பார்த்திபன் கனவினைவிட சிக்கவீர இராஜேந்திராவில் மாந்தர்கள் அதிகளவிலும், சிறப்பான முறையிலும் படைக்கப்பட்டுள்ளனர்.

**தொகுப்புரை**

- புதினம் சிறந்து விளங்க அடித்தளமாக அமைவது மாந்தர் படைப்பு. கருத்துப் பொருளாக இருக்கும் ஒன்றைக் காட்சிப் பொருளாகக் காட்டுவது அதில் உலாவரும் மாந்தர்களாவர்.
- மாந்தர்கள் படைப்புப் பற்றிப் பலர் தங்களின் கருத்துக்களைக் கூறியிருக்கின்றனர்.

* மாந்தர்கள் முன்புல மாந்தர்கள், பின்புல மாந்தர்கள் எனப் பிரிக்கப்பட்டுக் கொடுக்கப்பட்டுள்ளனர். முன்புல மாந்தர்களாகப் பார்த்திபன் கனவில் 21 மாந்தர்களும், பின்புல மாந்தர்களாக 11 மாந்தர்களும் காணப்படுகின்றனர்.
* சிக்கவீர இராஜேந்திராவில் முன்புல மாந்தர்களாக 41 மாந்தர்களும், பின்புல மாந்தர்களாக ஒன்பது மாந்தர்களும் சிறப்பான முறையில் இடம்பெற்றுள்ளனர்.
* தலைமை மாந்தர்களாகப் பார்த்திபன் கனவில் பார்த்திபச் சோழரும், நரசிம்ம பல்லவச் சக்கரவர்த்தியும், சிக்கவீர இராஜேந்திராவில் சிக்கவீர இராஜேந்திரனும் சுட்டப்பட்டுள்ளனர்.
* இணை மாந்தர்களாக விக்கிரமன், அருள்மொழி, பார்த்திபன் கனவிலும், நொண்டிபசவன், கௌரம்மாஜி சிக்கவீர இராஜேந்திராவிலும் படைக்கப்பட்டுள்ளனர்.
* கல்கியின் புதினத்தில் துணை மாந்தர்களாக, குந்தவி தேவி, மாரப்ப பூபதி, பொன்னன், வள்ளி, வீர பத்திர ஆசாரி, நீலகேசி, பரஞ்சோதி போன்றோரும் மாஸ்தியின் புதினத்தில் போபண்ணா, லட்சுமிநாராயணய்யா, இராஜகுமாரி, தேவம்மாஜி, சென்னபசவன், பகவதி, தீட்சிதர் போன்றோரும் வார்க்கப்பட்டுள்ளனர்.
* கல்கியின் புதினத்தில் அயல்நாட்டு மாந்தர்களாக யுவான் சுவாங்கும் மாஸ்திரியின் புதினத்தில் ஆங்கில அதிகாரி, கேப்டன்துரை, பிரேசர்துரை, விக்டோரியா மகாராணி, எடித்சாது, லூஸி, ஹெலன், பாதிரி மேக்லிங் போன்றோர் இடம்பெற்றுள்ளனர்.
* அஃறிணை மாந்தர்களாகப் பட்டத்து யானை, புஷ்பகம், பாரிஜாதம், குதிரைகள் பார்த்திபன் கனவில் கூறப்பட்டுள்ளன. சிக்கவீர இராஜேந்திராவில் அஃறிணை மாந்தர்கள் இடம்பெறவில்லை.
* பிற மாந்தர்களாக கல்கியின் புதினத்தில் 21 மாந்தர்களும், மாஸ்தியின் புதினத்தில் 41 மாந்தர்களும் சிறப்பான முறையில் படைக்கப் பட்டுள்ளனர்.

## சான்றெண் விளக்கம்

*1. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.69*

*2. இரா.மோகன், டாக்டர் மு.வ.வின் நூல்கள், ப.49*

*3. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக் கலை, ப.280*

*4. தி.வெ.இராஜேந்திரன், ஆயிரம் கைகள் உயரட்டும், ப.69*

*5. இரா.பாலசுப்பிரமணியம், நாவல் கலையியல், ப.115*

*6. கலா.கே.தாக்கர், கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப.282*

*7. கல்கி, பார்த்திபன் கனவு, ப.14*

*8. மேலது, ப.29*

*9. மேலது, ப.36*

*10. மேலது, ப.38*

*11. மேலது, ப.46*

*12. மேலது, ப.54*

*13. மேலது, ப.54*

*14. மேலது, ப.368*

*15. மேலது, ப.67*

*16. மேலது, ப.67*

*17. மேலது, ப.88*

*18. மேலது, ப.367*

*19. மேலது, ப.367*

*20. மேலது, ப.98*

*21. மேலது, ப.205*

*22. மேலது, ப.222*

*23. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.3*

*24. மேலது, ப.35*

*25. மேலது, ப.36*

*26. மேலது, ப.38*

*27. மேலது, ப.39*

*28. மேலது, ப.41*

29. மேலது, ப.39

30. மேலது, ப.39

31. மேலது, ப.33

32. மேலது, ப.92

33. மேலது, ப.8

34. மேலது, ப.46

35. மேலது, ப.46

36. மேலது, ப.3

37. மேலது, ப.3

38. மேலது, ப.499

39. கல்கி, பார்த்திபன் கனவு, ப.35

40. மேலது, ப.44

41. மேலது, ப.47

42. மேலது, ப.47

43. மேலது, ப.63

44. மேலது, ப.106

45. மேலது, ப.106

46. மேலது, ப.367

47. மேலது, ப.35

48. மேலது, ப.34

49. மேலது, ப.38

50. மேலது, ப.38

51. மேலது, ப.101

52. மேலது, ப.109

53. மேலது, ப.233

54. மேலது, ப.233

55. மாஸ்தி, சிக்கவீரஇராஜேந்திரன், ப.36

56. மேலது, ப.77

57. மேலது, ப.118

58. மேலது, ப.118

59. மேலது, ப.128
60. மேலது, ப.456
61. மேலது, ப.39
62. மேலது, ப.94
63. மேலது, ப.92
64. மேலது, ப.152
65. மேலது, ப.479
66. மேலது, ப.479
67. வி.ஆனந்தவல்லி, கமலா சடகோபனின் குயில்தோட்டம், ப.42
68. கல்கி, பார்த்திபன் கனவு, ப.87
69. மேலது, ப.88
70. மேலது, ப.85
71. மேலது, ப.98
72. மேலது, ப.99
73. மேலது, ப.50
74. மேலது, ப.25
75. மேலது, ப.12
76. மேலது, ப.161
77. மேலது, ப.272
78. மேலது, ப.272
79. மேலது, ப.273
80. மேலது, ப.290
81. மேலது, ப.145
82. மேலது, ப.25
83. மேலது, ப.65.

# உத்தியும் நடையும்

**முன்னுரை**

ஓர் இலக்கியத்திலுள்ள மையக் கருவைப் புலப்படுத்தப் பயன்படும் வழிமுறைகளை உத்தி என்பர். உவமை, அணி, குறியீடு, உள்ளுறை, இறைச்சி, படிமம், பொருள்கோள், நிகழ்ந்தது நினைத்தல், வருணனை, கற்பனை, பழமொழி, சொலவடை, பிறமொழிக் கலப்பு, வட்டார மொழிநடை போன்றவை உத்திகளாகப் பயன்படுகின்றன.

கதைகளில் ஒரு கருத்தைச் சுவைபடக் கூறவேண்டுமாயின் தகுந்த உத்திகளையும், நடையையும் பயன்படுத்த வேண்டும். உத்தி என்பது ஆங்கிலத்தில் ‘Technique’ எனவும், நடை என்பது ‘Style’ எனவும் வழங்கப்படுகின்றன. படைப்பின் அழகு வெளிப்படுவதற்கு இவை இரண்டும் உறுதுணையாக உள்ளன. இத்தகைய உத்தியையும், நடையையும் ஆய்வுக்குரிய புதினங்களில் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**உத்தி**

உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டு முறை உத்தி ஆகும். கருத்தை விளக்குவதற்குப் படைப்பாளி பயன்படுத்தும் சொல் திட்டமாகும்.

“நூல்களில் திரட்டிக் கூறியவற்றை விரித்துக் கூறி, அதனால் ஒரு பயன் உண்டென அறிதற்கு உத்திகள் இன்றியமையாதன. மேலும் நூற்பொருளை எளிதில் உணர்தற்குரிய கருவிகள் உத்திகளே.”[1] இங்ஙனம் ஒரு நூலை இலக்கியம் என்ற தகுதிக்கு உரியதாக்க உதவும் கூறுகளில் உத்தி முதன்மை இடத்தைப் பெறுகிறது எனலாம்.

“உத்திகளைத் தலைப்பில் உத்தி, மாந்தர் பெயரில் உத்தி, உரையாடல் உத்தி, வடிவ உத்தி, பாடல் உத்தி, எழுத்து உத்தி, உள்ளீட்டு உத்தி, இசைக்குறிப்பு உத்திகள் என்று ஒருசாரார் பகுப்பர்.”[2] உத்திகள் காலந்தோறும் மாறும் தன்மையுடையனவாகும்.

**உத்தி - இலக்கணம்**

பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் முப்பத்திரண்டு உத்திகளை,

"ஒத்த காட்சி, உத்திவகை விரிப்பின்
நுதலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந்நிறுத்தல்
...................................................
மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்து கொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனிதகு புலவர் கூறிய நூலே"[3]

என உணர்த்துகிறது.

பவனந்தி முனிவர் தம் நன்னூலில் தொல்காப்பியர் குறிப்பிடும் உத்திகளையே பெரும்பான்மை குறிப்பிடுகிறார். இதனை,

"நுதலிப்படுத்தல் ஒத்த முறைவைப்பு தொகுத்துச் சுட்டல்
வகுத்து காட்டல் முடித்துக்காட்டல் முடிவிடங்கூறல்
...................................................
மிக வெடுத்துரைத்தல், சொல்லின் முடிவில் அப்பொருள் முடித்தல்
ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல், உய்த்துரை வைப்பு"[4]

என்பன மூலம் உணரலாம். நன்னூல் உரையாசிரியரான சிவஞான முனிவர் உத்தி இலக்கணத்தை, ஓரிலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்தி உணர்த்தி அப்பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும் ஏற்குமிடம் அறிந்து இவ்விடத்திற்கு இஃதும் எனக் கருதத்தக்க வகையாகச் சொல்லுவது தந்திரவுத்தியாகும் என்று குறிப்பிட்டுள்ளார்.

**உத்தி இலக்கண வரையறை**

உத்தி என்பது ஆங்கிலத்தில் 'Technique' என வழங்கப்படுகிறது. நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்-தமிழ் அகராதி 'உத்தி' என்னும் சொல்லுக்கு அனுமானம், அறிவு, சேர்தல், இசைவு, இணக்கம்,

செல்வம், சொல், தந்திரஉத்தி, திருவுறுப்புத் தாக்கங்கள் ஆகிய பல பொருள்களைக் குறிப்பிடுகின்றது.

உத்தி என்பது கருத்தை விளக்குவதற்குப் படைப்பாளி பயன்படுத்தும் சொல் திட்டமாகும். படைப்பாளன் அழகு வெளிப்படுவதற்கு இது உறுதுணையாக அமைகிறது.

உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டு முறையே உத்தியாகும். "ஒரு கலைஞன் தன் துறையில் செவ்விய வெளியீட்டிற்கும், பயன் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படுகிறது"[5] என்கிறார் சி.இ.மறைமலை.

"ஆக்குவோனின் படைப்பாற்றலும், தனித்தன்மையும் ஒவ்வொரு கூற்றிலும் வெளிப்படும் போது புலமை வண்ணம் தெரிகிறது. அதனை நனித்து உணர்ந்து கொள்ள உத்தியாய்வு உதவுகின்றது"[6] என்கிறார் ச.வே.சுப்ரமணியன்.

"பொதுவாகப் படைப்பாளன் தான் கூறவந்த செய்தியினை உள்ளடக்கத்தை வெளிப்படுத்தும் முறையை உத்தி எனலாம். சிறுகதை ஆசிரியன் தன் உள்ளத்தில் கண்டதை அப்படியே படிப்பவனுடைய உள்ளத்திற்கு மாற்ற உத்திகள் கை கொடுக்கின்றன"[7] என்கிறார் இரா.தண்டாயுதபாணி.

"ஒரு செயலை உரிய கருவியின் முறையறிந்து அத்துறைச் சார்ந்த அறிவோடு செய்தலே உத்தி எனலாம். 'சிறு உளியால் கல்லும் தகரும் கனங்குழாய் தகராக் கொல்லுலைக் கூடத்தினால்' என்பது போல் உளிக் கொண்டு கல்லை உடைபடும் இடமறிந்து உடைக்கும் செயல்நுட்பம் உத்தியாகும்"[8] என்கிறார் கு.வெ.பாலசுப்பிரமணியன்.

"உத்தி என்பது கலை ஆக்கமுறை. படைப்பில் முத்திரைப் பதிவாய் அமைவது. அவன் ஆளுமைத்திறத்தின் தனித்தத்துவங்களைச் சுட்டிக்காட்ட வல்லது"[9] என்கிறார் சி.இ.மறைமலை.

"உத்தி என்பது தான் கூறவந்த செய்தியில் உள்ள பக்கத்தை வெளிப்படுத்தும் முறையே"[10] என்கிறார் ந.பிச்சமுத்து.

"ஒருவர் ஒன்றைச் செய்யும்போது பயன்படுத்தும் தொழிற்கலை நுட்பக் கூறுகளே உத்தி என்கிறோம்"[11] என்கிறார் க.செல்லப்பன்.

இலக்கியத்தில் புலப்படுத்தும் முறை பல உத்திகளை உள்ளடக்கியது. "உயிர் தாங்கிய எலும்புக்கூட்டிற்குப் பிற அழகு தருகிற பல்வேறு உறுப்புக்களைப் போன்றது உத்திகள் (Technique) எனலாம்"[12] என்கிறார் இரா.பாலசுப்பிரமணியன்.

**புதினத்தில் உத்திகள்**

இக்கால இலக்கிய வகைகளுள் ஒன்றான புதினம் உத்திகளால் சிறப்பிடம் பெறுகின்றது. நீண்ட கதையாக அமையும் இப்புதினங்களில் பல்வேறு வகையான உத்திகள் பயன்படுத்தப்படவில்லை என்றால் அப்புதினமோ, படைப்பாளனோ வரவேற்பு பெறுவதில்லை. கதையில் ஏற்படும் தொய்வு அதன் வீழ்ச்சிக்கு வழி வகுத்துவிடும். ஆதலால் புதினங்களில் உத்தியைப் பயன்படுத்துதல் தேவையானதாகிறது.

பொதுவாகப் புதினங்களில் உவமை, உருவகம், புராணக் குறிப்புக்கள், கடிதம், கிளைக்கதை, கனவு, நனவோடை, வருணனை, முன் உணர்த்துதல், கற்பனை, முரண், பழமொழி, கவிதை, நடை போன்ற உத்திகளைப் பயன்படுத்துவர். இவை தவிர மக்களின் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், ஓவியக் குறிப்புகள், மருத்துவம், வானியல், உளவியல், சமுதாயப் பின்னணி, இலக்கியக் குறிப்புகள் போன்ற செய்திகளும் புதினங்களில் இடம்பெறுகின்றன. இவை காலத்தின் வளர்ச்சி மாறுபாட்டிற்கேற்ப புதிது புதிதாகச் சொல்லப்பட வேண்டிய சூழ்நிலையில் சேர்க்கப்பட்டனவாகும். இத்தகையப் புதுமை நோக்குகள் இருப்பதால் தான் இது புதினம் எனப்பட்டது என்றும் கருத இடமுண்டு.

**வரலாற்றுப் புதினங்களில் உத்திகள்**

கல்கியின் பார்த்திபன் கனவினையும், மாஸ்தியின் சிக்கவீர இராஜேந்திராவையும் உத்திகளுக்கு உதாரணமாகக் கூறலாம். இவ்விரு புதினங்களிலும் பல்வேறு வகையான உத்திகள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

உவமை, உருவகம், புராணக் குறிப்பு, கடிதம், கிளைக்கதை, கனவு, நனவோடை, வருணனை, முன் உணர்த்துதல், கற்பனை, பழமொழி போன்ற உத்திகள் இவ்விரு புதினங்களிலும் கையாளப் பட்டுள்ளன.

**உவமை**

அணிகளில் தாயணி உவமை அணியாகும். பார்த்திபன் கனவிலும், சிக்கவீர இராஜேந்திராவிலும் பலதரப்பட்ட உவமைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றை அழகு, இன்பம், துன்பம், மெய்ப்பொருளியல் சார்ந்தவைகளாகப் பகுக்கலாம். உத்திகளில் தலைசிறந்தது உவமையாகும். உவமைகள் எளிதாய் பயன்படுத்தப் பட்டு இலக்கியத்திற்கு எழில் சேர்கின்றன. "அறிந்த பொருளைக் கொண்டு அறியாத பொருளைப் பிறர்க்கு அறிவுறுத்த ஊன்றுகோல் போல உதவுவது"[13] உவமை என்று சிவ.மாதவன் குறிப்பிடுகின்றார்.

"ஒருபுடை ஒப்புமை பற்றி உணர்த்தினமையின் உவமை எனப் பெயர் பெற்றதாக இளம்பூரணர் கூறுகிறார்."[14] ஒரு கருத்தை விளக்க ஒப்புமையுடையப் பொருளைச் சுட்டுவது உவமையாகும். இது வினை, பயன், மெய், உரு என்ற நான்கு பொருண்மைகளில் அமைவதாகத் தொல்காப்பியமும்,

"பண்புந் தொழிலும் பயனுமென்று இவற்றின்
ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவ துவமை" (தண்டி.31)

என்று தண்டியலங்காரமும் உவமையைப் பற்றி கூறுகின்றன.

பார்த்திபன் கனவில், வள்ளி தனது தாத்தாவான வீரபத்திர ஆச்சாரியைக் காணச் செல்லும்போது அங்கு முற்றத்தில் வாளும், வேலும் கிடக்கின்றன. அதைக் கண்ட அவள், இதெல்லாம் எதற்காகத் தாத்தா...? எனக் கேட்கிறாள். அதற்கு ஆச்சாரி, "தேங்காய்க் குலை சாய்ப்பது போல் எதிராளிகளின் தலைகளை வெட்டிச் சாய்ப்பதற்கு"[15] எனச் சொல்லுகிறார்.

சோழர்களின் பட்டத்து யானைப் பற்றிக் கூறும்போது, போர்க்களத்தில் அது "கருங்குன்று ஒன்று நகர்ந்து வருவது போல் வந்தது"[16] என்றும், போரில் இறந்த பார்த்திபனைக் கண்ட அந்த யானை "குன்று சாய்ந்தது போல் கீழே விழுந்தது"[17] என்றும், அதன் பேருடல் "பூகம்பத்தின் போது மலை அதிர்வது போல் இரண்டு தடவை அதிர்ந்தது"[18] என்றும் உவமைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பல்லவ சக்கரவர்த்தியினால் கைதுசெய்யப்பட்டு விசாரணை நடத்தும் போது விக்கிரமன் "மலையைப்போல் அசையாமல் நின்றான்"[19] என்று உவமை சொல்லப்படுகிறது. அதேபோல, நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் கப்பலில் செல்லும்போது, "கடலின் ஆழத்தில் குடிகொண்டிருக்கும் எல்லையற்ற மோன அமைதியைப் போல், அவனுடைய இருதயத்தின் அடிவாரத்திலும் விவரிக்க வொண்ணாத பரிபூர்ண சாந்தி நிலவிற்று"[20] என்றும் உவமை இடம்பெற்றுள்ளது.

பல்லவ சக்கரவர்த்தியிடம், பொன்னனால் மாரப்பன் குற்றம் சாட்டப்பட்டபோது, அவனின் நிலையை "ஆயிரம் தேள் கொட்டியவன் போல் துடிதுடித்தான்"[21] என்று உவமை பயன்படுத்தப்படுகிறது.

நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் இரத்தின வியாபாரியாகத் தாய்நாட்டிற்கு வந்தபோது, காஞ்சி வீதியில் பார்த்த குந்தவியை மீண்டும் பார்க்கிறான். அப்போது, அவளின் முகவாட்டத்தை உணர்கிறான். இந்த உணர்வை விளக்க, "அன்றைக்கு அவளுடைய முகம் சூரியன் அஸ்தமித்த பிறகு நீலக்கடலில் உதயமாகும் பூரண சந்திரனைப் போல் பசும்பொன் காந்தியுடன் பிரகாசித்தது. இன்றோ அதிகாலை நேரத்தில் மேற்குத் திசையில் அஸ்தமிக்கும் சந்திரனைப் போல் வெளிறிய பொன்னிறமாயிருந்தது"[22] என்று கூறும் உவமை பொருத்தமானதாக அமைந்துள்ளது.

இதேபோல, சிக்கவீர இராஜேந்திராவில் பல்வேறு உவமை உத்திகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. சிக்கவீர இராஜேந்திரனைச் சுற்றிப் பல்வேறு பிரச்சினைகளும், மக்கள், மந்திரிகளின் வெறுப்புக்களும் வந்து

கொண்டிருந்தன. இதனை விளக்க, "மாலை வேளையில் சுற்றிலும் இருள் சூழ்ந்து வருவதைப் போல வீரராஜனைச் சுற்றிலும் அபாயங்கள் வந்து கொண்டிருந்தன"[23] என்னும் உவமை மூலம் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

வீரராஜனின் விரோதிகளில் ஒருவரான அப்பாஜியும், வீரண்ணாவும் ஒருநாள் இரவில் சூரப்பாவின் வீட்டில் தங்க அனுமதி கேட்கின்றனர். அப்போது சூரப்பா, உத்தய்ய தக்கன் என்னும் கிழவன் இங்கு இருக்கிறான், அரசனிடம் சென்று கூறிவிடுவான். "அவன் வேட்டை நாயைப் போல் மோப்பம் பிடிப்பவன்"[24] என்று கூறி மறுக்கிறான்.

மேலும் சூரப்பா, அப்பாஜியிடம், மன்னனிடம் மந்திரியாக மாட்டிக் கொண்டிருக்கும் போபண்ணாவின் பாடுதான் திண்டாட்டம் எனக் கூற அதற்கு அப்பாஜி, "மந்திரிக்கு கஷ்டம் என்று சொல்வது செருப்புக்கு முள் என்று சொல்வது போல்"[25] என்று எடுத்துரைக்கிறார்.

அளவிற்கு அதிகமாகக் குடித்ததன் மூலம் வீரராஜனுக்கு உடல்நிலை சரியில்லாமல் போயிற்று. ஒருமுறை அவனுக்குத் தலைசுற்றுதல் வரும்போது, பசவனை அழைக்கிறான். "டேய் நொண்டி, இன்று நான் படுத்தது முதல் அடிக்கடி தலைக்குள் ஏதோ முறையிடுகிறாற்போல இருக்கிறது. குயவனின் சக்கரம்போல் தலை சுற்றுகிறது"[26] என்று உவமைபடக் கூறுகின்றான். இவ்வாறு இவ்விரு புதினங்களிலும் பல்வேறு உவமை உத்திகள் கையாளப்பட்டுள்ளன.

**உருவகம்**

புதினத்தில் உவமையைப் போன்றே உருவகங்களும் எண்ணற்றுக் காணப்படுகின்றன. உவமைக்கும் பொருளுக்கும் வேறுபாடின்றி அமைவது உருவகம் ஆகும். இதனை,

"உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து
ஒன்றென மாட்டினஃதுருவக மாகும்"[27]

என்று தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது. இப்புதினத்தில் உருவகங்கள் பலவிதப் பொருளில் பல இடங்களில் பயின்று வருகின்றன.

*பார்த்திபன் கனவில், வெண்ணாற்றங்கரையில் நடந்த போரில், காணப்பட்ட இரத்தத்தை நிலவின் பிம்பத்தோடு ஒப்பிட்டுக் கூறப்படுகிறது. "பகலெல்லாம் நதிக்கரையில் நடந்த பயங்கரமான யுத்தத்தில் மடிந்தவர்களின் இரத்தம் வெள்ளத்துடன் கலந்தபடியால், ஆற்றில் அன்றிரவு இரத்தவெள்ளம் ஓடுவதாகவே தோன்றியது. அந்த வெள்ளத்தில் பிரதிபலித்த பூரணச் சந்திரனின் பிம்பமும் செக்கச் செவேலென்ற இரத்த நிறமடைந்து காணப்பட்டது"[28] என்று இடம்பெற்றுள்ளது.*

*நரசிம்மப் பல்லவரையும், குந்தவி தேவியையும், சூரியன், சந்திரனோடு ஒப்பிட்டு, "அம்பாரியில் வீற்றிருந்த நரசிம்ம சக்கரவர்த்தியையும் அவர் அருமைப் புதல்வியையும் ஏக காலத்தில் பார்த்தவர்கள், உதய சூரியனையும், பூரணச் சந்திரனையும் அருகருகே பார்த்தவர்களைப் போல் திணறித் திண்டாடிப் போவார்கள்"[29] என்று வருணிக்கப்படுகிறது.*

*விக்கிரமனின் கடற்பிரயாணத்தின் போது, சந்திரன் உதயமாகிறது. இந்த மோகனக் காட்சியைக் கண்ட விக்கிரமனின் மனக்கண் முன்னால் குந்தவியின் முகம் மறுபடி எழுந்தது. "இந்த உதய சந்திரனுடைய பொன்னிறந்தான் அவளுடைய முகத்தின் நிறமும்"[30] என குந்தவியின் முகத்தைச் சந்திரனோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளனர்.*

*சிக்கவீர இராஜேந்திராவில், பசவனின் தீய நட்பினால் வழிதவறிப் போயிருந்த வீரராஜனைப் பற்றிக் கூறும்போது, "அவன் சேற்றில் புரள்வதே இன்பம் என நினைக்கும் எருமையைப் போன்று வழி தவறியிருந்தான்"[31] என வீரராஜனை எருமையோடு உருவகப்படுத்தி விளக்குகின்றார்.*

*அரசனையும், பசவனையும் கிண்டல் செய்து நாடகம் அரங்கேற்றிய லக்கனைப் பசவனின் ஆட்கள் பிடித்து வந்து அவன் முன்நிறுத்தினர். அவனைச் சுற்றிலும் நாய்கள் காணப்பட்டன. "பசவனின் முகமும் நாய்களின் கண்களும் அவனுக்கு எமலோகத்தை*

நினைவூட்டியது"[32] என பசவனின் முகத்தை எமலோகத்தோடு ஒப்பிட்டு உருவகப்படுத்தி விளக்கியிருக்கின்றனர்.

அப்பாஜியும், வீரண்ணாவும், மடிக்கேரிக்கு வந்துகொண்டிருக்கையில், வீரண்ணா, அப்பாஜியிடம், "வெள்ளையர்களை நாம் எப்படி நம்புவது எனக் கேட்கிறான்."[33] அதற்கு அப்பாஜி, "பாம்புக்கும், பாம்பாட்டிக்குமுள்ள உறவுதான் நமக்கும் அவர்களுக்கும் உள்ள உறவு. எச்சரிக்கையாகவே இருக்க வேண்டும்"[34] என அவர்களுக்கும், ஆங்கிலேயருக்குமான உறவைப் பாம்பு, பாம்பாட்டியோடு உருவகப்படுத்திக் கூறப்படுகிறது. இவ்வாறு, உருவக உத்தி இரண்டு புதினங்களிலும் கையாளப்படுகிறது.

## புராணக் குறிப்பு

புதினங்களில் புராணக் குறிப்புகள் ஆங்காங்கே பயன்படுத்துவதன் மூலம் அசிரியரின் கருத்துக்கு வலுச் சேர்க்கப்படுகிறது. மேலும் தெளிவையும் ஒப்பீட்டுத் தன்மையையும் காணமுடிகிறது.

புராணம் என்ற வடசொல்லிற்கு நேரிடைப் பொருள் தொன்மை, பழமை என்பனவாகும். புராணக் குறிப்பின் அடிப்படையில் அமைந்த கதைகளைத் தெய்வம் சார்ந்தது, மனிதன் சார்ந்தது என்று பகுக்கலாம். தெய்வம் சார்ந்ததில் சிவன், திருமால், பிரம்மன், இந்திரன், உமையம்மை, வருணன் போன்ற கடவுள்கள் பற்றிய கதைகளும், மனிதன் சார்ந்ததில் வெற்றிபெற்ற மனிதர்கள், அரசர்கள், வீரர்கள் போன்றோர்களின் கதைகளும் அடங்கும். மனிதர்கள் புராண, இதிகாச மாந்தராய் இருத்தல் அவசியமாகிறது.

பார்த்திபன் கனவில் நரசிம்மர், சீதையின் திருமணத்திற்கு ஜனகர் தந்திரம் செய்ததாகக் கூறி, அதனைத் தன் மகளின் திருமணச் செய்தியோடு சேர்த்துக் கூறுகிறார்.

"மாமல்லபுரத்திற்குத் தங்களின் பெயர் ஏன் வந்தது என கேட்கிறாள் குந்தவி. அதன் பின் நீங்கள் கூறவில்லையென்றால் யானையின் மீதிருந்து குதித்துவிடுவேன் என்கிறாள் விளையாட்டாக."[35] அதற்கு நரசிம்ம சக்கரவர்த்தி "அவ்வாறு கீழே விழுந்து காலை நீ

*ஒடித்துக் கொண்டால், அங்க, வங்க, கலிங்க இராஜகமாரர்களில் யாரும் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள மாட்டார்கள், அப்புறம் சீதை கல்யாண விசயத்தில் ஜனகர் செய்தது போல் நானும் ஏதாவது தந்திரம் செய்யவேண்டும்”*[36] *எனக் கூறி, பின்வரும் கதையைச் சொல்கிறான்.*

*“சீதை சிறு பெண்ணாயிருந்தபோது, ஒருநாள் ஒரு வில்லைத் தெரியாத்தனமாய்த் தூக்கி நிறுத்திவிட்டாள். இதனால் அவளை ஐம்பத்தாறு தேசத்து இராஜகமார்களும் கலியாணம் செய்துகொள்ள மறுத்துவிட்டார்கள்.*

*கடைசியில் சீதையின் தகப்பனார் விசுவாமித்திர ரிஷியை அனுப்பி இராமன் என்ற அசட்டு இராஜகுமாரனைத் தந்திரமாய் அழைத்துவரப் பண்ணினார். ஒரு பெரிய வில்லை நடுவில் முறித்து, முறிந்தது தெரியாதபடி தந்திரமாய் பெட்டிக்குள் வைத்திருந்தார். இராமன் அந்த வில்லை விளையாட்டாக எடுத்ததும், வில் முறிந்து இரண்டு துண்டாக விழுந்துவிட்டது. உடனே ஜனகர், “ஐயையோ! எங்கள் குல சம்பத்தாகிய வில்லை ஒடித்துவிட்டாயே! ஒன்று ஒடிந்த வில்லைச் சேர்த்துக் கொடு ; இல்லாவிட்டால் என் மகள் சீதையைக் கலியாணம் பண்ணிக்கொள் என்றார். இராமன் வேறு வழியில்லாமல் சீதையைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டியதாயிற்று”*[37] *என இராமாயணக் கதையை நகைச்சுவை வடிவத்தில் கூறி குந்தவியின் திருமண நிகழ்வுடன் பொருத்திக் காட்டுகிறார்.*

*பல்லவச் சக்கரவர்த்தி தன் மகள் குந்தவியிடம் “நான் இந்தப் பல்லவ சிம்மாசனத்தில் ஏறிய பிறகு கடற்பிரயாணம் செய்வதென்பது முடியாத காரியமாகிவிட்டது. எனக்குக் கிடைக்காத பாக்கியம் என் பிள்ளைக்காவது கிடைக்கட்டும் என்றுதான் உன் தமையனைச் சிங்களத் தீவுக்கு அனுப்பினேன். நீயும் ஆண் பிள்ளையாய் பிறந்திருந்திருந்தால் உன்னையும் கடல் கடந்து அனுப்பியிருப்பேன்”*[38] *எனக் கூறுகிறார்.*

*உடனே குந்தவி, நான் மட்டும் ஆண் பிள்ளையாய் பிறந்திருந்தால் இத்தனைக் காலமும் இந்தச் சிம்மாசனத்தில் உங்களை வைத்திருப்பேனா? “கம்ஸன் செய்ததைப் போல் உங்களைச் சிறையில்*

போட்டுவிட்டு நான் பட்டத்துக்கு வந்திருக்க மாட்டேனா?”[39] என விளையாட்டாகப் புராணச் செய்தியோடு எடுத்துரைக்கின்றாள்.

அதேபோல, விக்கிரமன் பொன்னனிடம் குந்தவி பற்றிக் கூறும்போது, கதைகளிலே நான் கேட்டிருக்கிறேன், காவியங்களிலே படித்திருக்கிறேன். பெண் மோகத்தினால் அழிந்தவர்களைப் பற்றி! அந்தக் கதி எனக்கும் நேர்ந்துவிடும் போலிருக்கிறது. “மேனகையின் மோகத்தினால் விசுவாமித்திரர் தபஸை இழந்தாரல்லவா? அம்மாதிரி நானும் ஆகிவிடுவேனோ? என்று பயமாயிருக்கிறது.”[40] அந்தப் பெண் அவ்வாறு என்னை அவளுடைய மோக வலைக்கு உள்ளாக்கி விட்டாள் எனக் கூறுகிறான். அதற்குப் பொன்னன், விசுவாமித்திரர் ரிஷி மேனகையால் கெட்டதை மட்டும் சொல்கிறீர்கள். ஆனால், பெண்களால் மேன்மையடைந்தவர்கள் இல்லையா, மகாராஜா! “சீதையால் ராமர் மேன்மையடையவில்லையா? கிருஷ்ணன் போய் ருக்மணியை எதற்காகக் கவர்ந்து கொண்டு வந்தார்? அர்ச்சுண மகாராஜா சுபத்திரையை அடைந்ததினால் கெட்டுப்போய்விட்டாரா? முருகக் கடவுள் வள்ளியைத் தேடித் தினைப் புனத்துக்கு வந்தது ஏன்? அதனால் அவர் கெடுதலை அடைந்தாரோ?”[41] எனக் கேட்கிறான்.

உடனே விக்கிரமன், பொன்னா சரியான கேள்விதான் கேட்கிறாய். “சீதையினால் ராமரும், ருக்மணியால் கிருட்டிணனும், சுபத்திரையினால் அர்ச்சுனனும், வள்ளியினால் முருகனும் மேன்மையடைந்தது மட்டுமல்ல. அருள்மொழி இராணியினால் பார்த்திப மகாராஜாவும், வள்ளியினால் பொன்னனும் மேன்மையடைகிறார்கள்”[42] எனக் கூறுகிறான். இவ்வாறு புராண உத்தி பார்த்திபன் கனவில் பயன்படுத்தப் பட்டுள்ளது.

சிக்கவீர இராஜேந்திராவில், சிறையிலிருக்கும் தேவம்மாஜியைக் காண கௌரம்மாஜி சென்றாள். இதனைக் கண்ட வீரராஜன், “உன்னை யார் இங்கே வரச் சொன்னது? இருக்கிற இடத்தில் மரியாதையாக இருந்து கொண்டிருக்க வேண்டும். என்னைக் கேட்காமல் யாரும் இங்கே அடி எடுத்து வைக்கக் கூடாது”[43] எனக் கர்ஜித்தான். அதற்கு

ராணி, ஜாதகம், யோகம் சரியாக இல்லை. "கம்சன், தேவகி கதை போல் இருக்கிறது"[44] ஜாக்கிரதை, என்று தீட்சிதர் எச்சரித்தார். அதற்காக நான் இங்கே வந்தேன். உங்கள் தங்கையை அவர் வீட்டுக்கு அனுப்பிவிடுங்கள் என்று கூறுகிறாள்.

"சிக்கண்ண செட்டியின் மருமகளை அரசனின் ஆட்கள் கடத்திச் சென்றதனால், அவனைப் பட்டத்திலிருந்து நீக்க வேண்டும் என மந்திரிகளான போபண்ணாவும், லட்சுமிநாராயணய்யாவும் பேசி முடிவெடுக்கின்றனர்."[45] அப்போது போபண்ணா, "புராணங்ளில் படித்ததில்லையா, ஐயா? ஊர்க் குழந்தைகளை நீரில் மூழ்கடித்தான் என்பதற்காக அரசனின் மகனைக் காட்டுக்கு விரட்டிவிட்டார்கள் என்று? நாட்டு மக்களைத் துன்புறுத்தியதற்காக மற்றொரு அரசனின் தலையைச் சீவிவிடவில்லையா? நல்ல அரசனாக இருந்தால் தலை வணங்குவோம். இல்லாவிட்டால், இப்படி வா, பட்டத்திலிருந்து விலகு என்போம்"[46] எனப் புராணச் செய்தியோடு ஒப்பிட்டு விளக்குகிறார்.

தங்கையைச் சிறையிலடைத்ததினால் வீரராஜனின் கிரகநிலை சரியில்லை என்பதை அறிகிறார் தீட்சிதர். "வீரராஜனின் முப்பாட்டனார் காலத்திலிருந்து அவர்கள் வீட்டில் பழைய காலத்தவை என்ற பெயரில் கிரகநிலைகளைக் காட்டும் சில சித்திரங்கள் இருந்தன. தீட்சிதர் அவைகளை அடிக்கடி எடுத்துப் பார்ப்பதுண்டு. இன்றைக்கு அவர் அந்தச் சித்திரங்களை எடுத்துப் பார்த்தார்"[47] அவைகளில், சகோதர துவேஷம் சம்பந்தப்பட்ட சித்திரங்களை எடுத்துப் பார்த்தால் "கம்சனின் கடைசி வருடத்திய கிரக நிலையும், வீர ராஜேந்திரனின் அந்த வருடத்திய கிரக நிலையும் ஒரே மாதிரியாக இருந்தன."[48] இதனால் வீரராஜனுக்கு ஆபத்து என்பதை உணர்ந்தார் தீட்சிதர். எனவே இராணியிடம் கூறி, தேவம்மாஜியைச் சிறையிலிருந்து அவர் வீட்டுக்கு அனுப்பிவிடுமாறு அரசனிடம் சொல்லச் சொல்ல வேண்டும் என எண்ணுகின்றார். இவ்வாறு புராண உத்திகள் இரு புதினங்களிலும் கையாளப்பட்டுள்ளன.

**கடித உத்தி**

இரு ஆசிரியர்களும் தங்கள் புதினங்களில் கடித உத்தியைப் பயன்படுத்தியிருக்கின்றனர். கடிதம், எழுதுபவரின் மனத்தை விளக்கப் பயன்படுகிறது. ஓலை, திருமுகம் போன்றவை கடித்திற்கான வேறு பெயர்கள் ஆகும். காப்பியங்களில் கடித உத்தியைப் பயன்படுத்துவதற்குச் சான்றாக காளிதாசரின் சாகுந்தலத்தில், சகுந்தலை துஷ்யந்தனுக்கு எழுதிய கடிதத்தையும், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தில், மாதவி கோவலனுக்கு எழுதிய கடிதத்தையும் குறிப்பிடலாம்.

பார்த்திபன் கனவில், மாமல்ல புரத்திற்கு விஜயம் செய்த நரசிம்ம பல்லவரும், மகள் குந்தவியும், மாமல்லபுரச் சிற்பங்களைக் கண்டு களித்தனர். அப்போது, "குதிரையின் மேல் வந்த ஒருவன் விரைவாக இறங்கி பயபக்தியுடன் சக்கரவர்த்தியின் அருகில் ஓர் 'ஓலையை' நீட்டினான்."[49]

அவன், "உறையூரிலிருந்து வந்தேன்! அச்சுத பல்லவராயர் இந்த ஓலையை ஒரு கணமும் தாமதியாமல் சக்கரவர்த்தியின் திருச் சமூகத்தில் சேர்ப்பிக்க வேண்டுமென்று கட்டளையிட்டார்"[50] என்றான். அக்கடிதத்தில், "சோழ இராஜகுமாரன் விக்கிரமன் இந்தப் புரட்டாசிப் பௌர்ணமயின்று சோழநாட்டின் சுதந்திரக் கொடியை உயர்த்த உத்தேசித்திருக்கிறான். அவனை என்ன செய்ய வேண்டும்"[51] என அச்சுத பல்லவராயர் கேட்பதாக இருந்தது. இதன் மூலம் பல்லவரின் சிங்கக் கொடிக்கு ஆபத்து என்பதையும், அதனைக் காக்கப்போரிட வேண்டும் என்பதையும் அறிய முடிகின்றது.

சபையில் ஏதேனும் புதிய செய்தி இருக்கிறதா? எனக் கேட்ட குந்தவியிடம் நரசிம்மர், "ஆமாம் உண்டு. இலங்கையிலிருந்து இன்றைக்குச் செய்தி வந்தது. அங்கே நடந்தப் பெரும் போரில், நமது படைகள் மகத்தான வெற்றியடைந்தனவாம். இலங்கை மன்னன் சமாதானத்தைக் கோருகிறான். என்ன செய்யட்டும் என்று உன் தமையன் ஓலை அனுப்பியிருக்கிறான்"[52] என்று கூறுகிறார்.

இவ்வோலையின் மூலம் இலங்கையிலும் பல்லவர்களின் புகழ் ஓங்கியிருந்தது என்பதை அறிமுடிகிறது.

போலிச் சிவனடியார் பற்றி அறிவதற்காக மாரப்பப் பூபதியை அழைத்துச் சக்கரவர்த்தி விசாரித்துக் கொண்டிருந்தான். அப்போது "ஒரு சேவகன் உள்ளே வந்து சக்கரவர்த்திக்கு அடிபணிந்து ஒரு ஓலையை நீட்டினான்."[53]

அது என்ன? என்று குந்தவி கேட்கவே, நரசிம்மர், "போலிச் சிவனடியார்ப் பற்றி இத்தனை நேரம் பேசிக் கொண்டிருந்தோமல்லவா? உண்மையான சிவனடியார் வருகிறாராம்."[54] "அவர் பெயர் பரஞ்சோதி. பல்லவ சாம்ராஜ்யத்தின் பழைய சேனாதிபதி, வாதாபிப் போரில் புலிகேசியைத் தோற்கடிக்க எனக்கு உறுதுணையாக இருந்தவர். தற்போது அவர் துறவறம் பூண்டு, தன் பெயரைச் 'சிறுத் தொண்டர்' என மாற்றிக் கொண்டுள்ளார். தன்னைக் காண தற்போது அவர் வருவதாகச் செய்தி வந்திருக்கிறது"[55] எனச் சொல்லுகிறார்.

சிக்கவீர இராஜேந்திராவில், வீரராஜனுக்கு மங்களூரிலிருக்கும் கிழக்கிந்தியக் கம்பெனியின் பிரதிநிதியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அக்கடிதத்தில், "மங்களூரின் நமது வட்டாரத்தின் பாணே எனும் சிற்றூரிலிருந்து, நமது பிரஜை ஒருவரின் வீட்டு மருமகளை இந்த வாரம் யாரோ கடத்திச்சென்றுவிட்டதாகப் புகார் வந்தது. விசாரித்ததில், இந்தக் கடத்தலைச் செய்தது, உங்கள் மந்திரி ஸ்ரீ பசவய்யனாக இருக்கும் என உங்கள் நாட்டு மக்கள் கூறுவதாக ஒரு செய்தி என் காதுக்கு எட்டியுள்ளது. எனவே இது விஷயமாக தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்வீர்கள் என்பது என் நம்பிக்கை"[56] என எழுதப்பட்டிருந்தது.

இதன் மூலம் அரசனின் ஆட்கள் பெண்களைக் கடத்தி மக்களின் வெறுப்புக்கு உள்ளாகின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

இதேபோல, ஆங்கில அதிகாரி, வீரராஜனுக்கு எழுதியக் கடிதத்தில், "அரசர் ஏற்கனவே நம்மை நமது பரிவாரங்களுடன்

மடிக்கேரிக்கு விருந்துண்ண வரவேண்டுமென்று அழைத்தது. இப்பொழுது அதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு மீண்டும் கட்டாயப்படுத்தி அழைப்பது இங்கே அனைவருக்கும் ஆனந்தத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அரசருக்கு அனுகூலமான நாளில் அரசரின் சன்னிதானத்துக்கு வருகிறோம். அந்தச் சந்தர்ப்பத்தில் சக்கரவர்த்தியின் பிரதிநிதிக்கும், அரசருக்கும் இடையே பேசவேண்டியிருக்கும் சில செய்திகளைக் குறித்துத்தங்களுக்கு நினைவூட்டி ஒரு முடிவு செய்ய வேண்டுமென விரும்புகிறோம்"[57] என எழுதியிருந்தது. இக்கடிதத்தின் மூலம், ஆங்கிலேயருக்கும், வீரராஜனுக்கும் இருந்த நட்பை உணரமுடிகிறது.

சென்னை ஆளுநர், ஆங்கில அதிகாரிக்கு எழுதியக் கடிதத்தில், "மைசூரின் மக்களை அராஜகப் பிடியிலிருந்து விடுவித்துக் காப்பதற்காகக் கம்பெனி சர்க்கார் இரண்டு வருடங்களுக்கு முன்னர் அந்தப் பிரதேசத்தின் ஆட்சியை நடத்தும் பொறுப்பைத் தன் தோள்களின் மீது ஏற்றுக் கொண்டது.

குடகின் அரசர் தம் கொடுஞ்செயல்களையெல்லாம் உடனே விடுத்து சரியான அரசாட்சியை ஏற்படுத்தினால் மிகவும் மகிழ்ச்சி. இது சம்பந்தமாக அவர் நமக்குத் திருப்திகரமான நம்பிக்கையை அளிக்காவிட்டால் மைசூர் அரசரைப் போல இந்த அரசரையும் தற்சமயத்திற்குச் சில வருடங்களுக்காவது ஆட்சிப் பொறுப்பிலிருந்து விடுவித்துக் குடகை அவர் சார்பில் ஆளும் பொறுப்பைக் கம்பெனி ஏற்றுக்கொள்ள வேண்டும். இது என்னுடைய உறுதியான நம்பிக்கை என்பதாக இன்றே ஆளுநர் ஜெனரல் பிரபு அவர்களுக்கு எழுதியுள்ளேன். நீங்களும் இந்த விசயத்தை மனத்தில் வைத்துக் கொண்டு மேற்கொண்டு நடக்க வேண்டியவைகளை நிச்சயித்துக் கொள்ள வேண்டும் எனக் கூறியிருந்தார்."[58] இதன் மூலம், சென்னை ஆளுநர், ஆங்கில அதிகாரி, மைசூர் துரை ஆகியோர் வீரராஜனைப் பதவியிலிருந்து நீக்க முடிவு செய்ததாகக் கூறப்படுகிறது. இவ்வாறு கடித உத்தி என்பது இரண்டு புதினங்களிலும் கையாளப்பட்டுள்ளது.

**கிளைக்கதை**

கதையின் இடையே கதைக்குள் கதையாக அமையும் கிளைக்கதைகளைக் கல்கி, மாஸ்தி இருவரும் பயன்படுத்தியுள்ளனர். இது புதினத்தின் சுவையைக் கூட்டவும், ஆசிரியரின் படைப்பு நோக்கத்தை நிறைவேற்றவும், ஆசிரியர் உணர்த்த விரும்பும் கருத்துக்கு விளக்கமளிக்கவும் அரண் செய்யவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"எபிசோடு என்ற ஆங்கிலச் சொல்லிற்கு நேரானத் தமிழ்ச் சொல்லாகக் கிளைக்கதை என்பதை அகராதிகள் சுட்டுகின்றன. மேலைநாடுகளில் நாடுகளுக்கிடையில் சுவையூட்டும் வண்ணம் அமைக்கப்படும் பகுதியைக் கிளைக்கதையாகக் கொண்டனர். கிரேக்க அவல நாடகங்களில் இரண்டு காட்சிகளினிடையே அமைக்கப்படுகின்ற பகுதி கிளைக்கதை எனப்பட்டது."[59] இவ்வாறு படிப்படியாக மாற்றம் பெற்று, இன்று கதைக்குள் கதையாக அமைவது கிளைக்கதையாகியுள்ளது.

பார்த்திபன் கனவில், "ஒற்றர் படைத்தலைவனாக மாறுவேடமிட்டுக் கொண்டு விக்கிரமனை ஆபத்திலிருந்து காத்து ஒரு சிற்பியின் வீட்டிற்கு அழைத்துச் சென்று தங்கவைக்கிறார் நரசிம்ம சக்கரவர்த்தி. அங்குச் சிவகாமியின் கதையைக் விக்கிரமனிடம் விளக்குகிறார்"[60] என்பதில் காணமுடிகிறது.

"இதோ, இந்த வீட்டில் முப்பது வருடங்களுக்கு முன்னால் ஆயனச் சிற்பியும், அவருடைய மகள் சிவகாமியும் வாழ்ந்தார்கள். சிவகாமி அற்புத நடனம் ஆடுவாள். அவளுடைய நடனத் தோற்றங்களைப் பார்த்துப் பார்த்து ஆயனச் சிற்பி சித்திரம் எழுதுவார்"[61] என்கிறார்.

"ஆயனருடைய அபூர்வ சிற்பத் திறமையைக் குறித்தும், அவருடையப் பெண்ணின் அற்புத சௌந்தரியத்தைப் பற்றியும், அவளுடைய நடனக் கலைத் திறனைப் பற்றியும், சொன்னார். நரசிம்மச் சக்கரவர்த்தி இளவரசராயிருந்த காலத்தில் அவருக்கும் சிவகாமிக்கும் ஏற்பட்டத் தெய்வீகக் காதலைப் பற்றி லேசாகக் குறிப்பிட்டார்.

வடக்கேயிருந்து இராட்சதப் புலிக்கேசிப் படையெடுத்து வந்ததினால் அந்தக் காதல் தடைப்பட்டது பற்றியும், சிவகாமியைப் புலிகேசி சிறைபிடித்துச் சென்றது பற்றியும், விவரித்தார். சிவகாமியை விடுவிக்க நரசிம்மர் செய்த முயற்சிகளையும், சிவகாமியின் சபதத்தையும், அதை நரசிம்மர் நிறைவேற்றி வைத்ததையும், இவ்வளவுக்கும் பிறகு சிவகாமி தன்னுடைய காதல் பூர்த்தியாக முடியாத காதல் என்பதை உணர்ந்து நெஞ்சு உடைந்ததையும் பற்றிச் சொன்னார்."[62]

கதையைக் கேட்டுக் கொண்டு வரும்போது விக்கிரமன் இடையில் பல தடவை கண்ணீர் விட்டு விட்டான். நீலகேசியைப் பற்றி சிறுத்தொண்டர் கூறும் விதமாக மற்றொரு கிளைக்கதை அமைகிறது. "கபாலருத்ர பைரவன் என்னும் பெயரில் நரபலி எனும் கொடுஞ்செயலைப் புரிகின்றான் நீலகேசி. அவனைக் கண்டறிந்து அவன் யார் எனும் கதையை மக்களிடம் கூறுகிறார் சிறுத்தொண்டர்"[63] என்பதாகும்.

"இருபது வருடங்களுக்கு முன்னால் வாதாபி அரசன் புலிகேசி நமது தமிழகத்தின் மீது படையெடுத்துவந்து பல்வேறு அட்டூழியங்களைச் செய்தான். அவனைப் பழிவாங்கும் பொருட்டு நரசிம்ம சக்கரவர்த்தியும், நானும் பெரும்படை திரட்டிக்கொண்டு போரிட்டு அவனைத்தோற்கடித்தோம். அப்போரில் கையை இழந்து, 'சரணாகதி' என்று காலில் விழுந்த ஒருவனைக் கொல்ல மனமில்லாமல் ஓடிப்போக அனுமதித்தேன். அந்த ஒற்கைக் கை மனிதன் தான் இதோ இந்த நீலகேசி. புலிக்கேசியைவிடக் கொடிய அவனுடைய சகோதரன் இவன்"[64] என்று கூறுகிறான்.

சிக்கவீரஇராஜேந்திராவில் பகவதி எனும் பெயரில் வரும் பாப்பாவின் கதை கிளைக்கதையாக எடுத்துரைக்கப்படுகிறது. "தீட்சிதரின் தம்பி மகளான பாப்பா முப்பது வருடங்களுக்குப் பிறகு தீட்சிதரைக் காணுகின்றாள். அவள் சென்ற பிறகு அவளின் கதையைத் தீட்சிதர் நினைவு கூறுகிறார்."[65]

“ஐம்பது வருடங்களுக்கு முன்பு நடந்த கதை, தீட்சிதருக்கு ஒரு தம்பி இருந்தான். அவனுக்குச் சங்கீதம், வைத்தியம், ஜோதிடம் எல்லாவற்றிலும் தேர்ச்சி உண்டு. இவனுக்கும் அரண்மனைப் பாடகியாக இருந்த ஒருத்திக்கும் தொடர்பு ஏற்பட்டது. இவர்களுக்கு ஒரு பெண்குழந்தைப் பிறந்தது. அவளை அனைவரும் பாப்பா என்று அழைத்தனர். இவள் மிக்க அழகியாக இருந்ததினால் இவளின் மீது லிங்கராஜன் மோகம் கொள்கிறான். இதனால் அவள் கர்ப்பமடைகிறாள். தீட்சிதரின் தம்பிக்குத் தனது மனைவி பாடகியாகவும், தாசியாகவும் இருந்தது இழிவாகப் படவில்லை. ஆனால் தனது மகளும் அவ்வாறு இருப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. எனவே லிங்கராஜனை வற்புறுத்தி அவளை இரண்டாவது மனைவியாக்க முயற்சித்தான்.”[66]

“அதன் பிறகு என்ன நடந்ததென்றே தீட்சிதருக்குத் தெரியாது. அரண்மனைப் பரிவாரத்திலிருந்து இந்தப் பெண்ணும், இவள் தாயும் எங்கோ சென்றுவிட்டார்கள்.”[67] இப்போது அந்தப் பெண் முதியவளாக வந்திருக்கிறாள் என தீட்சிதர் நினைத்துப்பார்க்கும் விதமாகக் கிளைக்கதைச் சொல்லப்படுகிறது.

அதேபோல, “சில வாரங்களுக்குப் பிறகு பகவதி தீட்சிதரிடம் தான் முப்பது வருடங்களுக்கு முன்னால் ஊரைவிட்டுப் போனதற்கான காரணம் கூறுவது கிளைக்கதையாக எடுத்துரைக்கப்படுகிறது.”[68]

“மகனைப் பெற்ற பிறகு லிங்கராஜனிடம், அதனைத் தூக்கிக்கொண்டு, நானும் தாயும் சென்றோம். அவன் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாக, அக்குழந்தையின் காலை முறுக்கி தூக்கி வீசினான். என் வயிறு இரத்தம் கக்கியது. மேலும் அவன், இக்குழந்தை உயிருடன் இருக்க வேண்டுமானால், ஊரை விட்டு செல்ல வேண்டும் எனக் கூறி, நகரின் எல்லைக்கப்பால் துரத்திவிட்டான்.

அங்குத் தாய் இறந்துபடவே, ஒரு குருவின் உதவியால் வைத்தியம், சோசியம், மலையாள மாந்திரீகம் போன்றவற்றைக் கற்று

இன்று பகவதியாக உங்கள் முன்னால் நிற்கிறேன்”[69] எனக் கூறுகிறாள். இவ்வாறு கிளைக்கதை என்பது இரண்டு புதினங்களிலும் சிறப்பாகக் கூறப்படுகிறது.

**கனவு உத்தி**

மனிதனின் நிறைவேறாத ஆசை கனவு என்பர். “கனவு இரண்டு வகைப்படும். 1.உண்மைக் கனவு 2.பகல் கனவு. கனவுகள் யாவும் நம் வாழ்வோடு தொடர்புடையவை. கனவுகள் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்ட உணர்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பிறக்கின்றன. அவை மனித வாழ்க்கையில் மனத்தில் ஊன்றிப் போகும் படியான சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு பிறக்கின்றன”[70] என்பதாகக் கனவு விளக்கப்படுகிறது.

கனவுகள் ஆழ்மனதோடு தொடர்புகொண்டவை. அவை ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவை போன்று தோன்றினாலும், மன உணர்வுகளையே வெளிப்படுத்துகின்றன. இத்தகையக் கனவு உத்தியை இரு ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் எடுத்தாண்டுள்ளனர். பார்த்திபன் கனவில், “நாடு கடத்தப்பட்ட விக்கிரமனை துறைமுகத்திற்குச் சென்று கண்ட குந்தவி அன்று இரவு முழுதும் உறங்கவில்லை. நள்ளிரவிற்குப் பிறகு சற்று கண்ணயர்ந்த போது பயங்கரமான கனவு வந்ததாகக் கூறப்படுகிறது.”[71] அக்கனவில், “சோழ இராஜகுமாரனைக் கழுத்து வரையில் பூமியில் புதைத்திருக்கிறது. அவனை நோக்கி மதயானை ஓடிவர, அவள் அதனை மறித்து நிற்கிறாள். உடனே அந்த யானை குந்தவியைத் தூக்கி முதுகில் வைத்துக் கொண்டு விக்கிரமனை நோக்கி ஓடுகிறது. ஐயையோ என்று அலறிக் கொண்டு கண் விழிக்கிறாள்”[72] அது கனவு.

“மீண்டும் கண்ணயர்ந்தபோது, கழுமரங்கள் வரிசையாக நிறுத்தப்பட்டிருக்க, சோழ இராஜகுமாரனை அங்கு கழுவிலேற்றக்கொண்டு வருகின்றனர். அங்கு வந்த குந்தவி மரங்கள் பற்றி எரியுமாறு வேண்டிக் கொள்ள, அம்மரங்கள் பற்றி எரிகின்றன. அவள் அவனை நோக்க, அந்தோ! அவனைச் சுற்றி பன்னிரண்டு பல்லவ வீரர்கள், பன்னிரண்டு

ஈட்டிகளை அவன்மீது செலுத்த சித்தமாயிருக்கிறார்கள். குந்தவி ஐயையோ! என்று கதறி மஞ்சத்திலிருந்து கீழே விழுகிறாள்."[73] இவ்வாறு குந்தவி விக்கிரமனைப் பற்றிக் கனவு காண்பதாகச் சொல்லப்படுகிறது.

அதேபோல, "கடும் காய்ச்சலினால் இருந்த விக்கிரமனைக் குந்தவி தன் இடத்திற்குக் கொண்டு சென்று சிகிச்சை அளிக்கிறாள். அப்போது, மயக்க நிலையில் இருந்த விக்கிரமன் கனவுகாண்பதாக விளக்கப்படுகிறது."[74]

"நாலாபுறமும் தீ எறிய, பார்த்திபன் விக்கிரமனிடம், குழந்தாய்! என் கனவை நிறைவேற்ற இந்தத் தீயில் இறங்குவாயா? எனக் கேட்க உடனே இறங்குகிறான். உடல் கொதிக்கிறது. அப்போது ஒரு குளிர்ந்த கை அவனை நெருப்பிலிருந்து மீட்கிறது."[75]

"புலிக்கொடி ஏந்தியக் கப்பலில் பிரயாணம் மேற்கொண்டபோது புயல் தாக்குகிறது. அப்போது, தண்ணீரில் தத்தளித்த அவனை ஒரு பெண்ணின் கை காப்பாற்றுகிறது."[76]

"கொடியப் பாலைவனத்தில் நடந்து கொண்டிருக்கும் போது, தண்ணீர் இல்லாமல் நாவறண்டு உயிர்போகும் நிலையில் மயங்கி விழும்போது, ஒரு கை அவனைத் தாங்குகிறது."[77] இவ்வாறு விக்கிரமனுக்குக் கனவு தோன்றுகிறது. அவன் கண்விழித்துத் தன்னை ஆபத்திலிருந்து காப்பாற்றிய அந்தப் பெண் யார் என்பதை நினைவுப்படுத்திப் பார்க்கும்போது, அவள் குந்தவி என்பதை அறிகிறான்.

சிக்கவீர இராஜேந்திராவில், "வீரராஜன் தன் மகள் இருக்கும் போது, தங்கையின் மகனுக்குப் பட்டங்கட்டுவதா என எண்ணி, அக்குழந்தையைக் கொல்ல வேண்டும் என முடிவுசெய்கிறான். அன்று இரவு முழுதும் தூக்கம் வரவில்லை. பின் அரைகுறைத் தூக்கத்தில் ஒரு கனவு கண்டான்."[78]

"தன் அருகில் தந்தை லிங்கராஜன் நின்றுகொண்டிருக்கிறார். எதிரே தங்கையின் குழந்தை உட்கார்ந்திருக்கிறது. யாரோ வந்தார்கள். சட்டென்று தன்னருகில் வந்து தன் தலைமீதிருந்த கிரீடத்தை எடுத்துக்

கொண்டு போய் அக்குழந்தையின் தலைமீது வைத்துவிட்டார்கள். குழந்தையின் ஒரு பக்கத்தில் தாய் தேவம்மாஜி, மற்றொரு பக்கத்தில் தந்தை சென்னபசவய்யன், எதிரில் ஆங்கில அதிகாரி, பெரிய அதிகாரி."[79]

"அரசனுக்கு இது மனப்பிராந்தியால் ஏற்பட்டது எனத் தோன்றவில்லை. பின்னால் நிகழப்போகும் சம்பவங்களின் முன்னறிவிப்பு என்றே நம்பினான்."[80] இவ்வாறு கனவு உத்திப் பற்றிக் கூறப்படுகிறது.

**நனவோடை உத்தி**

நனவோடை என்பது நடந்துமுடிந்த நிகழ்வுகளை மீண்டும் நினைவு கூர்வதாகும். "இக்காலப் புதியப் போக்குப் புதினங்களில் பெரிதும் குறிப்பிடத்தக்கது நனவோடை முறை ஆகும். காலம், இடம் இவைகளின் பின்னணியில் நிகழ்ச்சிகளை முறையாகக் கூறலாம். உள்மனதின் எண்ணங்களைப் பொழிவது இம்முறையின் பாற்படும்... ஜேம்ஸ் ஜாய்ஸ் என்பவர் எழுதிய யூலிசெய் என்ற ஆங்கிலப் புதினம் மிகச் சிறந்த நனவோடைப் புதினமாகப் போற்றப் பெறுகிறது."[81] தமிழில் விநாயகர் சதுர்த்தி என்ற சிறுகதையை நனவோடை உத்திக்குச் சான்றாதாரமாகக் காட்டுவர்.

பார்த்திபன் கனவில், போருக்கான நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. "அரண்மனை வனத்துக்குள் பிரவேசித்த இராணி அருள்மொழி ஒரு பளிங்குக் கல்லின் மீது அமர்ந்துகொண்டு பழைய ஞாபகங்களை நினைவுகூர்ந்தார்."[82]

"பன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால், இதே இடத்தில் பார்த்திபனுடன் உலாவியதுண்டு. அப்போது, அவன் புல்லாங்குழல் கொண்டு வந்து இசைப்பான். கண்ணபிரானே பார்த்திபனாக உருக்கொண்டு தன்னை மணந்ததாக எண்ணிப் பூரித்தாள். பிறகு விக்கிரமன் பிறந்தபோது, அவர்கள் இன்ப வாழ்வின் எல்லையை அடைந்தார்கள். அதே பளிங்குக் கல்லின் மீது விக்கிரமனை வைத்து இருவரும் கொஞ்சியதை அருள்மொழி நினைவுகூர்ந்தாள்."[83] இதன்

மூலம் போருக்கான நாள் நெருங்கிக் கொண்டிருப்பதால் அந்த மகிழ்ச்சி எப்போது கிடைக்கும் என எண்ணுவதாகச் சித்திரிக்கப்படுகிறது.

"வள்ளியின் குடும்பத்தில் அனைவரும் ஒரேநாளில் இறக்க, பொன்னனைப் போருக்கு அனுப்ப மறுக்கிறான் வள்ளியின் தாத்தா. அப்போது, வள்ளிக்குத் தன் குடும்ப அழிவின் பயங்கர சம்பவம் நினைவிற்கு வந்தது."[84]

"நான்கு வருடங்கக்கு முன்பு, கிழவனும், கிழவியும் தவிர குடும்பத்தார் அனைவரும் ஆற்றுக்கு அக்கரையில் நடந்த ஒரு கலியாணத்திற்காகப் படகில் ஏறிப் போய்க்கொண்டிருந்தார்கள். நடு ஆற்றில் திடீரென்று சூறாவளிக் காற்று அடித்துப் படகுக் கவிழ்ந்தது. அச்சமயம் கரையில் இருந்தப் பொன்னன் உடனே நதியில் குதித்து நீந்திப் போய்த் தண்ணீரில் விழுந்தவர்களைக் காப்பாற்ற முயன்றான். தெய்வபந்தனத்தினால் வள்ளியை மட்டுந்தான் அவனால் காப்பாற்ற முடிந்தது. மற்றவர்கள் எல்லாரும் நதிக்குப் பலியானார்கள்"[85] என்பதை நினைத்துப் பார்க்கும் விதமாக நனவோடை உத்தி அமைகின்றது.

சிக்கவீர இராஜேந்திராவில், "இராணி கௌரம்மாஜி தன் மாமனார் லிங்கராஜன் தன்னிடம் கூறியதை நினைத்துப் பார்க்கிறாள்."[86] லிங்கராஜன் தான் இறக்கும் தருவாயில், மகள் தேவம்மாஜிக்குச் சென்னபசவனைத் திருமணம் செய்துவைத்து அவர்களுக்கு அப்பங்கொளத்து அரண்மனையைக் கொடுத்தான். அந்த அரண்மனையில் ஏராளமான நகை நட்டுக்களையும், பாத்திரப் பண்டங்களையும் சேர்த்து வைத்திருந்தான். "ஒருநாள் வீரராஜனையும், தன்னையும் அழைத்து, தங்கையைப் பிரியத்துடன் பார்த்துக்கொள்ளப்பா"[87] என்று தன் கணவனிடமும், "நான் உனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை, உன் நாத்தனாருக்குக் கொடுத்திருக்கும் எந்த ஒரு துரும்பையும் நீ எடுத்துக் கொள்ளக்கூடாது என்று தன்னிடமும் கூறியதைக் கௌரம்மாஜி நினைவுகூர்ந்து பார்க்கிறாள்."[88] இதன்மூலம், இவ்வளவு அன்பாக வளர்த்த பெண்ணை அண்ணன் சிறைவைத்திருக்கிறானே என எண்ணி வருந்துகிறாள்.

பகவதி தன்னை அணைத்து அழுததைப் பசவன் நினைத்துப் பார்ப்பதாகக் கூறப்படுகிறது. "சிக்கவீரராஜனுக்கு உடல்நிலை சரியாகப் பகவதி அழைத்துவரப் பசவன் செல்கிறான். அங்கு அவனை அவள் அணைத்துக்கொண்டு விம்மி அழுகிறாள்."[89] அதனை வீட்டிற்கு வந்து நினைத்துப் பார்க்கிறான் பசவன்.

"அவள் ஏன் தன்னை அவ்வாறு அணைத்துக்கொண்டாள்? அழுது விம்மும் சப்தமும் கேட்டது. அவளுடையக் கண்ணீரால் தன் தலைமயிர் நனைந்திருந்தது. அந்த அழுகையும் விம்மலும் எதற்காக? இது ஏதாவது இந்த முறை சிகிச்சையின் ஒரு சம்பிரதாயமோ?"[90] என பசவன் எண்ணிப் பார்க்கிறான் பகவதி தன் தாய் என்பதை அறியாதவனாய். இவ்வாறு நனவோடை உத்தி பின்பற்றப்படுகிறது.

**வருணனை**

இயற்கையை அனுபவித்து எழுத்தால் வடிப்பது வருணனை ஆகும். இவ்விருபுதினங்களிலும் இயற்கையின் பல கோணங்களை ஆசிரியர்கள் அழகாக வருணித்துள்ளனர்.

"இயற்கையைப் பாடாத கவிஞர்கள் இல்லை. ஆனால் இயற்கை அழகை மட்டுமே பாடுவோர் பலர். இயற்கையை வாழ்வோடு இணைத்து இயற்கை சொல்லும் பல்வேறு உண்மைகளையும், தத்துவங்களையும் கூறுவோர் பலர்."[91] கல்கியும், மாஸ்தியும் அவர்களில் ஒருவராகத் திகழ்கின்றனர்.

பாரதியும், பாரதிதாசனும் இயற்கையைப் பாடியுள்ளனர். பாரதிதாசனின் அழகின் சிரிப்பில்,

"காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்
கடல்பரப்பில், ஒளிப்புனலில் கண்டேன்! அந்தச்
சோலையிலே, மலர்களிலே, தளிர்கள் தம்மில்..."[92]

அழகு என்பவள் கவிதை தந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

பார்த்திபன் கனவில், தோணித்துறை, உறையூர், சித்திரமண்டபம், போர், காவிரிநதி, மாமல்லபுரம், பொன்னிநதி, காதல் போன்ற

வருணனைகள் காணப்படுகின்றன. இப்புதினத்தின் தொடக்கம் காவிரிக் கரையில் அமைந்துள்ளது.

**காவிரி**

அகத்தியரின் கமண்டலத்து நீர் காகத்தால் கொட்டப் பெற்றதால் விரிந்து காவிரியாயிற்று என்பது கர்ண பரம்பரைக் கதை. “காவிரி தீரம் அமைதி கொண்டு விளங்கிற்று. உதயசூரியனின் செம்பொற் கிரணங்களால் நதியின் செந்நீர்ப்பிரவாகம் பொன்னிறம் பெற்றுத் திகழ்ந்தது. அந்தப் புண்ணிய நதிக்கு ‘பொன்னி’ என்னும் பெயர் அந்த வேளையில் மிகப் பொருத்தமாய்த் தோன்றியது.”[93] சுழிகள், சுழல்களுடனே விரைந்து சென்றுகொண்டிருந்த அந்தப் பிரவாகத்தின் மீது காலை இளங்காற்று தவழ்ந்து விளையாடி இந்திர ஜால வித்தைகள் காட்டிக்கொண்டிருந்தது. “சின்னஞ்சிறு அலைகள் ஒன்றோடொன்று லேசாக மோதியபோது சிதறி விழுந்த ஆயிரமாயிரம் நீர்த்துளிகள் ஜாஜ்வல்யமான ரத்தினங்களாகவும் கோமேகங்களாகவும், வைரங்களாகவும், மரகதங்களாகவும் பிரகாசித்துக் காவேரி நதியை ஒரு மாயாபுரியாக ஆக்கிக் கொண்டிருந்தன”[94] என காவிரியின் வருணனையும், பொன்னிநதி பற்றியும் எடுத்துரைக்கப்படுகிறது.

**உறையூர்**

உறையூர் இராஜபாட்டையின் இருபுறமும் பார்த்தால் சோழநாட்டின் நீர்வளத்தை அறிந்துகொள்ள முடியும். ஒருபுறம் கம்பீரமாய்ச் சென்றது காவேரி. “ஆற்றுக்கு அக்கரையில் தென்னைமரத் தோப்பு. இந்தப் புறம் கண்ணுக்கெட்டிய தூரம் பசுமை. கழனிகளெல்லாம் பெரும்பாலும் நடவு ஆயிருந்தன. இளம் நெற்பயிர்கள் கரும் பசுமை அடைந்துகொண்டிருந்த காலம். நெல் வயல்களுக்கு மத்தியில் ஆங்காங்கே சில வாழைத் தோட்டங்களும், தென்னந் தோப்புகளும், கரும்புக் கொல்லைகளும் காணப்பட்டன”[95] என்றுள்ளது.

**சித்திரமண்டபம்**

உறையூர் சித்திர மண்டபம் தெற்கு இராஜவீதியிலிருந்து அந்தக் காலத்தில் தென்னாடெங்கும் புகழ் வாய்ந்திருந்தது. "காஞ்சியிலுள்ள மகேந்திர சக்கரவர்த்தியின் பேர்பெற்ற சித்திர மண்டபம்கூட உறையூர்ச் சித்திர மண்டபத்துக்கு நிகராகாது"[96] என்று சித்திரமண்டபம் பற்றி வருணிக்கப்படுகிறது.

**போர்**

நதியின் மேற்குக் கரையில் கண்ணுக்கெட்டிய தூரம், கொடும் போர் நடந்த ரணகளத்தின் கோரமான காட்சிதான். "ஆயிரக்கணக்கான வீரர்களின் உடல்கள் சிதறிக் கிடந்தன. சில உடல்கள் கைவேறு, கால்வேறாகச் சிதைவுண்டு கிடந்தன. மனிதர்களைப் போல, குதிரைகளும், யானைகளும் விழுந்துகிடந்தன. கழுகுகளும், பருந்துகளும், நாலாபக்கமும் வட்டமிட்டன"[97] என போரின் வருணனை விளக்கப்படுகிறது.

**மாமல்லபுரம்**

கடற்கரைப் பட்டினமான மாமல்லபுரம் சிற்பப்புரி என்றும் கூறப்படுகிறது. எங்கு நோக்கினும் சிற்பமாகவே காணப்பட்டது. "இயற்கையாகப் பூமியிலெழுந்த சிறு குன்றுகளை அழகிய இரதங்களாகவும், விமானங்களாகவும் அமைத்திருந்தனர்."[98] இடைவிடாது, கல்லுளியின் சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது.

**காதல்**

குந்தவியும், விக்கிரமனும் காஞ்சிநகர வீதியில் முதல்முறை கண்டதும் காதல் வயப்பட்டனர். "அவர்கள் காதல் மூன்றாண்டு காலம் உள்ளத்தளவிலே வளர்ந்தது. மீண்டும் சந்தித்த பொழுது ஒருவரையொருவர் காதலை வெளிப்படுத்த, இறுதியில் நரசிம்மரால் அக்காதல் கல்யாணத்தில் முடிகிறது."[99] குந்தவி - விக்கிரமன் காதலைத் தமிழ்க் காதலாய்க் களவு வழிவந்த கற்புக் காதலாய்க் கல்கி காட்டியுள்ளார்.

சிக்கவீர இராஜேந்திராவில், குடகு வருணனை, அரண்மனை நகைகள் பற்றிய வருணனை, மடிக்கேரி அரண்மனை பற்றிய வருணனை போன்றவை நன்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளன.

**குடகு**

குடகின் மலை, காடு, நதி, கண்மாய், வயல், தோட்டம் இவை ஈடான் தோட்டத்திற்குச் சமமாக விளங்கின. "குடகின் அழகு ஸ்காட்லாந்து மலைப்பிரதேச அழகைவிட ஒருபடி மேல் என்று சொல்லும்படியாக இருந்தது."[100] இந்தக் குடகை விழுங்குவதற்குப் பல ஆங்கிலேயர்களின் வாயில் நீரூறிக் கொண்டிருந்தது என்பர்.

**அரண்மனை ஆபரணம்**

அரண்மனை ஆபரண மாளிகை அபூர்வமான இரத்னங்களுக்கு ஒரு கடல் போல இருந்துவந்துள்ளது. "ஹலேரி, ஹொரமலெ என்ற இரண்டு வசம்த்து அசரர்களும் தத்தம் ராணிகளுக்காக கொள்ளையடித்துச் சேர்த்த நூற்றுக்கணக்கான ஆபரணங்கள் அதில் இருந்தன."[101] முத்துமாலை, வைரம், வைடூரியம், மாணிக்கம், தங்கம் போன்றவற்றால் செய்த பல்வேறு ஆபரணங்கள் காணப்பட்டன. இதனை வெளிநாட்டினர் கண்டு மெச்சினர்.

**மடிக்கேரி அரண்மனை**

மடிக்கேரியிலிருந்த நால்குநாடு அரண்மனை கடல்போன்று காணப்படுகிறது. அரண்மனையின் உட்புறத்து மூலையிலுள்ள மூன்று அறைகளில் ஓர் அறையில் தேவம்மாஜி சிறைப்படுத்தப் பட்டிருக்கிறாள். அரண்மனைக்குரிய எல்லாச் சிறப்புக்களையும் பெற்று விளங்கியதால் இதனைக் கைப்பற்ற ஆங்கிலேயர்கள் விரும்பினர். "அரண்மனையின் அரசரின் படுக்கை அறையிலிருந்து பக்கத்திலுள்ள காட்டிற்கு ஒரு சுரங்கப்பாதை இருக்கிறது. ஆபத்துக் காலங்களில் அரசன் தப்பிச் செல்ல இது உதவுகிறது."[102] இவ்வாறு இரு புதினங்களிலும் வருணனை கையாளப்படுகிறது.

**முன் உணர்த்துதல்**

*முன் உணர்த்துதல் என்பது பின்னர் ஏற்படும் நிகழ்வுகளை முன்னரே குறிப்பால் உணர்த்துவது ஆகும். புதினப் போக்கிற்கும், கதையை முன்பே ஓரளவு அறிவதற்கும் இவ்வுத்தி பயன்படுத்தப் படுகிறது.*

*கல்கியின் புதினத்தில், போருக்குச் செல்லும் முன் பார்த்திபன், அருள்மொழியிடம், "நீ உன் மகனை வீரமகனாய் வளர்க்க வேண்டும் என்றும், ஒரு வாளினையும், திருக்குறளையும் கொடுத்து, எப்போது அவன் சின்னஞ்சிறு பிரதேசத்துக்காகவது சுதந்திர மன்னனாகிறானோ அப்போது இந்த வாளைத் தரித்து, குறளில் உள்ளபடி இராஜ்யம் செய்ய வேண்டும்"[103] என்று கூறி பொறுப்பை ஒப்படைக்கிறான்.*

*இதன் மூலம் போருக்குச் செல்லும் பார்த்திபன் தான் அங்கு இறந்துபடுவதை முன் உணர்த்துவதாகச் சொல்லப்படுகிறது.*

*"செண்பகத் தீவிலிருக்கும் விக்கிரமன் கனவில் ஒருநாள், அருள்மொழி ராணி தோன்றி, மகாராணிக்குரிய ஆடை, ஆபரணங்கள் ஒன்றுமில்லாமல், தூய வெள்ளைக் கலையுடுத்தி விபூதி ருத்திராட்சமணிந்து அவள் சிவபக்தியில் கனிந்த சிவவிரதையாக காட்சி தந்தாள்."[104]*

*பின்னர் அவனிடம், "சிவனடியாருக்கு வாக்குக் கொடுத்திருக்கிறேன், நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியின் மகளை நீ திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று, அதை நிறைவேற்றுவாயாக எனக் கூறி மறைகிறாள்."[105] இது அருள்மொழி துறவு மேற்கொள்கிறாள் என்பதையும், விக்கிரமன், குந்தவி திருமணம் நடைபெறப்போகிறது என்பதையும் முன் உணர்த்துவதாக அறிவுறுத்தப்படுகிறது.*

*சிக்கவீர இராஜேந்திராவில், இராணி வீரராஜனிடம் "உங்கள் ஜாதகம், கம்சன், தேவகி ஜாதகம் போலுள்ளது என தீட்சிதர் எச்சரிக்கிறார்."[106] எனவே தங்கையை அப்பங்கொளத்துக்கு அனுப்பிவிடுங்கள் எனக் கூறுகிறாள். இதன் மூலம், தங்கையின் நிமித்தம் போர் நிகழப் போகிறது என்பதை முன் உணர்த்துவதாகக் காணப்படுகிறது.*

*"லிங்கராஜன் அருகில் நிற்க, குழந்தை எதிரே அமர்ந்திருக்க யாரோ தன்னுடைய தலையிலிருந்த கிரீடத்தை அக்குழந்தையின் தலைமீது வைத்ததாகக் கனவு காண்கிறான் வீரராஜன்."[107] இது, அவன் பட்டத்திலிருந்து விலகப் போகிறான் என்பதை முன் உணர்த்துவதாகக் கூறப்படுகிறது.*

## கற்பனை உத்தி

*புதினங்களில் கற்பனையாகச் சில காட்சிகள் அரங்கேற்றம் செய்யப்பட்டிருக்கின்றன. கற்பனை என்பதற்கு இரஸ்கின், அடிசன் வில்லியம் தெய்லர், கோல்ரிட்ஜ், ஓர்ட்ஸ்வொர்த், ஐ.ஏ.ரிச்சர்ட்ஸ், வின்செஸ்டர் போன்றோர் பலவித கருத்துக்களைத் தெரிவித்திருக்கின்றனர். இவர்களில் வில்லியம் தெய்லர் புலன் உணர்ச்சியை மனக் கண்ணில் காணும் திறனே கற்பனை என்று விளக்கம் தருவது மனம் கொள்ளத் தக்கது. உணர்ச்சிகள் மனத்தில் காட்சியாவது கற்பனையாகிறது.*

*கல்கியின் புதினத்தில், "காட்டாற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட விக்கிரமனைக் காப்பாற்றிய பொன்னன், அவனை ஒரு மண்டபத்தில் வைத்திருந்தான். அப்போது, விக்கிரமனுக்கு கடும் காய்ச்சல் வரவே, அவன் வைத்தியரை அழைக்கச் சென்றுவிட்டான்."[108] திரும்பிவந்து பார்த்தபோது, அங்கு விக்கிரமன் இல்லாததைக் கண்டு, "இளவரசருக்கு ஜுரம் முற்றி ஜன்னியின் வேகத்தினால் எழுந்து ஓடிப் போயிருப்பாரோ?"[109] என்று பொன்னன் கற்பனை செய்கிறான்.*

*"நாடு கடத்தப்பட்ட விக்கிரமன் தான் தேவசேனன் என்னும் பெயரில் இரத்தின வியாபாரியாக தாய்நாட்டிற்கு வந்திருக்கிறான் என்பதை அறிந்த குந்தவி, தன் தந்தையிடம் கூறி, அவனை முன்னால் கப்பலில் அனுப்பிவிட்டு, பின் தந்தையின் அனுமதியுடன் தானும் விக்கிரமன் இருக்கும் இடத்திற்குச் செல்ல வேண்டுமென்றும், இல்லையேல், தந்தையின் சம்மதத்துடன் விக்கிரமனைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனக் கற்பனை செய்துகொள்கிறாள்."[110] இவ்வாறு கற்பனை உத்தி இடம்பெற்றுள்ளது.*

*மாஸ்தியின் புதினத்தில், லிங்கராஜன், வீரராஜனின் கெட்ட நடத்தைகளினால், அவனை அயோக்கியன், துஷ்டன் என்றெல்லாம் திட்டுவான். சில சமயம், "பார் அவரை அரண்மனையில் பிறந்தவரல்ல மருமகப்பிள்ளை. ஆனாலும் எவ்வளவு கம்பீரமாக நடந்து கொள்கிறார்"[111] என சென்ன பசவனை உயர்த்திப் பேசி வீரராஜனைத் திட்டுவான். இப்படிப்பட்டப் பேச்சுக்களால் தன் மாமனார் ஒருவேளை தன்னை மன்னராக்கி விடுவாரோ எனக் கற்பனை செய்து கொள்ளுவான்.*

*பல்வேறு கெட்ட பழக்கங்களினால், மந்திரிகளிடமும், மக்களிடமும், கெட்ட பெயர் பெற்றிருந்தான் வீரராஜன். "மது, மாது, மாமிசம் போன்றவற்றால் முப்பதே வயதான அரசனின் உடல் வெம்பிக் காணப்பட்டது."[112] மன்னன் சருக்கு மரத்தில் சருக்கிக் கொண்டிருக்கிறான். உடன் தன்னையும் கட்டிக் கொண்டு சருக்குகிறான். இதனால், என்ன ஆபத்து ஏற்படப் போகிறதோ எனப் பசவன் கற்பனை செய்வதாகக் கருதுகிறான்.*

**பழமொழி**

*தொன்று தொட்டு ஒரே மாதிரியான சூழ்நிலைகளுக்குப் பயன்படுத்தப்படும் சொல்லாட்சி பழமொழி ஆகும். "ஏது நுதலிய முது மொழியான"[113] என்று தொல்காப்பியம் பழமொழியை முதுசொல், முதுமொழி என்று குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. நர்மதாவின் தமிழகராதி பழமொழி என்ற சொல்லிற்கு, "வெகுகாலமாக மக்களிடையே வழங்கிவருவதும், பேச்சில் ஆதாரமாக அல்லது உதாரணமாகக் காட்டப்படுவதுமான கருத்துத் தொடர்"[114] என்று பொருள் விளக்கம் தருகிறது.*

*பழமொழி; மூதுரை, முதுமொழி, இன்சொல், முதுசொல், பழஞ்சொல் என்ற பொருள்களைத் தருவது என்று சேந்தன் திவாகரம் சுட்டுகின்றது.*

*கல்கியின் புதினத்தில், வள்ளி தன் தாத்தாவிடம், தன் கணவன் எந்நேரமும் போருக்குப் போக வேண்டும் எனப் புலம்பிக் கொண்டிருக்கிறார் எனக் கூற, அதற்குக் கிழவன், "துடுப்புப் பிடித்தக்*

கை வாளைப் பிடிக்குமா? பெண் மோகம் கொண்டவன் சண்டைக்குப் போவானா?"[115] என்னும் பழமொழியைக் கூறுகிறார். இதன் மூலம் பொன்னன் போருக்குப் போகமாட்டான் என்பதைக் குறிப்பிடுகிறார் கிழவன்.

சிவனடியார் அருள்மொழியிடம், விக்கிரமனும், குந்தவியும் விரும்புகின்றனர் எனக் கூறவே, அவள் உடனே கோபப்படுகிறாள். அதற்குள் சிவனடியார், அவசரப்படாதே அருள்மொழி அவர்கள் இருவரும் தூரத்திலிருந்து ஒருவரையொருவர் பார்த்தது தான்! அவர்களுக்குக் கல்யாணமே நிச்சயமாகிவிட்டதைப் போல் நீ கலக்கமடைய வேண்டாம்! என்கிறார்.

அதைக் கேட்ட அருள்மொழி நல்லவேலை "என் வயிற்றில் பாலை வார்த்தீர்கள்"[116] எனக் கூறுகிறாள். இது ஒரு பழமொழியாகக் கையாளப்படுகிறது.

தோணித்துறைக்கு வந்த நரசிம்மச் சக்கரவர்த்திப் பொன்னனை அழைத்து, "தனது மகள் அருள்மொழியைப் பார்க்க வரும் போது, அவளைப் பத்திரமாக படகில் அழைத்துச் செல்ல வேண்டும்"[117] எனக் கூறுகிறார். அதற்குப் பொன்னன் "சரி பிரபு!"[118] என்கிறான்.

இதைக் கேட்ட வள்ளியின் முகத்தில் "எள்ளும், கொள்ளும் வெடித்தது."[119] எதிராளிக்குப் பணிவு காட்டுகிறாயே எனப் பொன்னனுடன் சண்டைக்குப் போகிறாள்.

மாரப்பன் பொன்னனிடம், அரண்மனைத் தோட்டத்திலிருந்து எடுத்துவந்த பெட்டியை என்னிடம் கொடுத்துக் குற்றத்தை ஒப்புக்கொள்ளுங்கள், நான் உனக்கு உறுதுணையாக இருப்பேன். என்னாலும் உனக்கு ஏதாவது ஒத்தாசை வேண்டியதாயிருக்கும். "சிறு துரும்பும் பல்குத்த உதவும்"[120] எனச் சொல்கின்றான்.

சிக்கவீர இராஜேந்திராவில், வீரராஜன் திருமணமான புதிதில் நல்லவனாக நடந்துகொண்டாலும், விரைவிலேயே அவனின் தீய குணங்களைக் காட்ட ஆரம்பித்தான். இதனை, "சேர் சேராக அரிசியை

வாயில் அடைத்துக் கொண்டு தின்னும் யானை ஓர் எறும்பு சர்க்கரையை மெல்லுகிற மாதிரி தீனியை மெல்லாது"[121] என்னும் பழமொழியின் மூலம் விளக்குகிறார்.

லிங்கராஜன் இருக்கும் வரை சற்று நிதானமாக இருந்த வீரராஜன், தன் தந்தை இறந்த பிறகு அரசனாகி, "கண்டதே காட்சி கொண்டதே கோலம்"[122] என்று என்றைக்கும்விட அதிக அக்கிரமங்கள் புரியத் தொடங்கினான்.

விருந்துண்ண வரும் ஆங்கிலேயர்கள் தம் கடிதத்தில், போனமுறை கீழ்நிலைப் பெண்களையே கண்டு களித்தோம். எனவே இம்முறை குலப்பெண்கள், பார்ப்பனப்பெண்கள், குடகப்பெண்கள் என இப்படி வரவழைத்தால் நல்லது என எழுதியிருந்தனர்.

இதனைப் பார்த்த வீரராஜன், "தர்மம் கொடுத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்த்தானாம்" எனும் பழமொழியைக் கூறி ஆங்கிலேயர்களைத்திட்டுகிறான். இவ்வாறு பழமொழி உத்திகள் இடம்பெற்றுள்ளன.

**நடை**

இலக்கியத்தில் இன்றியமையாத பகுதியாக விளங்குவது நடையாகும். புதின ஆசிரியரின் தனித்தன்மையை அவருடைய நடைதான் இனங்காட்டுகிறது.

"கார்லைல் என்பவர் நடை எழுத்தாளரின் சட்டையாகாது என்றும் அஃது அவர்தம் மேனியில் தோல்போன்றது என்றும் நடையைப் பற்றிக் குறிப்பிடுவது பொருத்தமுடையதாகும். ஏனெனில் கருத்தனின்றும் நடையைப் பிரிக்க முடியாது."[123]

ஆசிரியர் தான் வெளியிட விரும்பும் உணர்ச்சிகளையும், சிந்தனைகளையும், தெளிவாகவும், முழுமையாகவும், கச்சிதமாகவும் வெளியிடும்போது, சிறந்த நடை பிறக்கிறது.

ஆசிரியரின் நடை என்பது அவர் கையாளும் மொழியின் அமைப்பும் முறையும் ஆகும். இது அவரமைக்கும் சொற்களாலும், தொடர்களாலும் உருவாக்கப்படுவதாகும். அவரை நடை இனங்காட்டும்.

ஜே.எம்.முர்ரே என்பவர் 'நடை' என்ற சொல்லை மூன்று வழிகளில் பார்க்கிறார்.

1. நடை தனித்தன்மையை வெளிப்படுத்தவல்லதாக அமைவது.
   (Style, as personal Iciosyncrasy)
2. நடை, ஒரு வெளிப்பாட்டு உத்தியாக அமைவது.
   (Style, as technique of exposition)
3. நடை, இலக்கியத்தின் மிக உயர்ந்த சாதனையாக அமைவது.
   (Style, as the highest achievement of literature)

நடை என்பது ஆசிரியர் ஒருவரின் தனிப்பட்ட எழுத்துமுறை அல்லது பார்வையாகும்.

"நீங்கள் ஒரு கலைஞர் ; உங்கள் பார்வை நுட்பமானது ; உங்கள் உணர்ச்சி ஆழமானது ; ஒரு பொருளைப் பற்றி நீங்கள் எழுதுகையில், அந்தப் பொருளையே மனக் கண்ணால் பார்த்துக் கைகளால் தொட்டு உணர்ந்து எழுதுகிறீர்கள். அந்த எழுத்தே உண்மையான எழுத்தாகும்"[124] என்று இரா.மோகன் கூறுகிறார்.

தனிப்பட்ட உணர்வும், பார்வையும் ஒரு தனிப்பட்ட மொழிநடையைத் தோற்றுவிக்கும். இதே கருத்தை 'ஒரு தூய்மையான நடை உறுதியாகத் தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கும்' என்றும் கூறலாம்.

**நடை ஆராய்ச்சி**

டிக்கன்ஸின் நடையை ஆராய்ந்துள்ள ப்ரூக் (G.L.Brook) ஒரு புதின ஆசிரியரின் நடையை ஆராய்வதினால் இரண்டு குறிக்கோள்கள் நிறைவேறும் என்கிறார்.

1. புதின ஆசிரியரின் நடையை ஆராய்வதன் வாயிலாக, அந்த ஆசிரியரின் இலக்கியத் திறனை நாம் முழுமையாக அறியலாம்

2. மேலும், அந்த ஆராய்ச்சி, ஆசிரியர் காலத்து மொழி வரலாற்று ஆய்வுக்கும் பொருள் நல்க வல்லதாய் அமையும்

என்று கூறுகிறார்.

கல்கி, மாஸ்தி ஆகிய இருவரின் புதினங்களிலும், அழகான நடை, பிறமொழிக் கலப்பு, உரையாடல், கொச்சைச் சொற்கள், பாடல் நடை, அடுக்குத்தொடர் போன்ற பல்வேறு உத்திகள் காணப்படுகின்றன.

**அழகான நடை**

ஒரு நடையை மேலும் செயல், இயைபு, நனி போன்றவற்றைக் கூட்டி அழகுபடக் கூறுவது அழகான நடை ஆகும். பார்த்திபன் கனவில் பார்த்திபன் "புரட்டாசிப் பௌர்ணமியில் வெண்ணாற்றங் கரையில் சந்திப்போம்"[125] என்று விடையளித்தார். உடனே சபையோர் அனைவரும் 'வெற்றிவேல்! வீரவேல்!' என்று வீர கர்ஜனைப் புரிந்தார்கள் என்று கூறப்படுகிறது. இது பார்த்திபனிடம், நரசிம்மர் ஆட்கள் கப்பம்கேட்க, மறுத்த பார்த்திபன் இவ்வாறு பேசினான்.

"சோழர் குல செல்வத்தையும், புகழையும் உன்னிடம் ஒப்புவிக்கிறேன். வீரபத்தினியாயிருந்து என் கோரிக்கையை நிறைவேற்ற வேண்டும்"[126] என பார்த்திபன் போருக்குச் செல்லும் முன் அருள்மொழியிடம் கூறுகிறான். இது அழகான நடையாகக் காட்சியளிக்கிறது.

சிக்கவீர இராஜேந்திராவில், இராணி கௌரம்மாஜி பற்றிக் கூறும்போது, "நேராகப் பார்ப்பாள், நேராக நிற்பாள், பேச்சு அதிகமில்லை. அவள் மனதில் என்னென்ன ஓடிக்கொண்டிருக்கின்றன என்று சுலபத்தில் அறிந்துகொள்ள முடியாது. மிகவும் தீவிரமான சந்தர்ப்பங்களில் மட்டுமே அவளுடையக் கண்கள் ஒரு புது ஒளியால் மகிழ்ச்சியையோ, அலுப்பையோ, கோபத்தையோ காட்டும். அடுத்த கணம் மீண்டும் அதைக் கம்பீரம் மறைத்துவிடும்"[127] எனக் கூறப்படும் இந்நடை அழகான நடை என்பதற்கு உதாரணமாகக் காட்டப்படுகிறது.

**பிறமொழிக் கலப்பு**

பிறமொழிக் கலப்பினை இரு ஆசிரியர்களும் தத்தம் புதினங்களில் கூறியிருக்கின்றனர். கல்கியின் புதினத்தில், கப்பம் கட்டாதது தொடர்பாகப் பார்த்திபனிடம் பேசவந்த பல்லவத் தூதர்கள் தங்களை அறிமுகப்படுத்தும்போது, "திரிலோக சக்ரவர்த்தி காஞ்சி மண்டலாபதி 'சத்ரு சம்ஹாரி' நரசிம்ம பல்லவராயருடைய தூதர்கள் நாங்கள் எனக் கூறியபோது, அரண்மனை விதூஷகன் குறிக்கிட்டு, எந்த திரிலோகத்துக்குச் சக்கரவர்த்தி! 'அதள ஸுதல பாதாளத்திற்கா,' இந்திரலோக, சந்திரலோக, யமலோகத்திற்கா"[128] எனக் கேட்கிறான்.

அதேபோல, பொன்னனிடம் மக்கள் நீயும் போருக்குப் போவாயா என்று கேட்கும்போது, வள்ளி எரிச்சலடைந்து அது என் 'இஷ்டம்,' மகாராஜாவின் இஷ்டம் எனக் கூறுகிறாள்.

அஸ்தமம், ஜனங்கள், வருஷம், விஜயம், ஜோசியம், மனஸ்தாபம், விஷயம், வேஷம், ஸ்திரீ, சம்பாஷணை, ஈனஸ்வரம், பிக்ஷி, நமஸ்கரித்து, ஸ்திரீகளும், புருஷர்களும், ஜயபேரிகை, ரிஷபம், மனுஷி, தேஜஸ், பிரதிஷ்டை, துரதிர்ஷ்டம், பூஜை, கம்ஸன், கோஷம், விஷேஷம், விஸ்தாரமான, ஸ்தபதி, நிமிஷம், ராஜலக்ஷணம், வாஸ்தவம், துஷ்ட, வேஷதாரி, அந்த க்ஷணத்திலே, ஸ்நானம், ஜகஜ்ஜோதி, போஷாக்கு, மானஸ்கம், ஸ்தலம், சிசுருஷை, ஜுரம், ஜில்லிட்டு, ஜாலம், சம்பாஷணை, சாஷாத், ராட்சஸ ரூபம் போன்ற வடமொழிச் சொற்கள் இடம்பெற்றுள்ளன.

மாஸ்தியின் புதினத்தில், வீரராஜன் பற்றி "வீரராஜன் பிறவி 'துஷ்டன்' அல்ல. ஆனால் அவன் வாழ்ந்த முப்பத்து மூன்று வருடங்களில் தன்னைவிட 'துஷ்டன்' இன்னொருவன் இருக்கமுடியாது என்ற அபிப்ராயத்தை பல பேர்களுக்கு உண்டாக்கிவிட்டான்"[129] என பிறமொழி கலந்து வருணிக்கப்படுகிறது. இது மொழிபெயர்ப்புப் புதினம் என்பதால் பெரும்பாலான இடங்களில் பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஸ்திரீ, ஜாதகம், ஜாக்கிரதை, விவஸ்தை, சரஸம், ரகஸ்யம், பூஜை, ஜீவன், அவியவஸ்தை, ஸ்தானம், விஷயம், கமிஷனர், பொக்கிஷம், சந்தோஷம், ஜோசியம், கஷ்டம், ஜனங்கள், நிஷ்டை, ரிஷி, ஜாடை, ஷேமம், ஜென்மம், துவேஷம், கம்ஸன், சாஸ்திரம், ஜெயித்து, புஷ்பம், வருஷம், ஜ்வாலை, எஜமானன், கலெக்டர், ரெஸிடெண்ட், பிரேசர், நஷ்டம், ராஜபார்ட், சம்பாஜெ, கவர்னர், குமாஸ்தா, அதிருஷ்டம், நமஸ்காரம், ஷேத்திரம் போன்ற பிறமொழிச் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

இடையிடையே, ஆங்கில உரையாடல்களும் நிகழ்த்தப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக உத்தய்யத் தக்கன் புலியை அடக்குவதைப் பார்த்த ஆங்கிலேயர்கள், "The man is wonderful!"130 என்று கூறுகின்றனர்.

**உரையாடல்**

சங்க அக இலக்கியங்களை ஒருபாற் கூற்று நாடகம் என்பர். அதுபோல புதினத்தில் இருவர் பேசிக் கொள்ளும்படி நடையை அமைப்பது உரையாடல் ஆகும். புதினம் சிறுகதைகளில் வரும் நல்ல உரையாடல், கருவின் வளர்ச்சி, கதைமாந்தரின் பண்பு, விளக்கம், கதையின் இயக்கம் முதலிய வெற்றிக்குக் காரணமாகிறது எனலாம் என்கிறார் இரா.மகாலிங்கம்.

பார்த்திபன் கனவில், நரசிம்மப் பல்லவரும், மகள் குந்தவியும் பேசிக்கொள்ளும் உரையாடல் பின்வருமாறு அமைந்துள்ளது.

"அப்பா! சபையில் ஏதேனும் விசேஷம் உண்டா?"[131]

"ஆமாம் ; உண்டு இலங்கையிலிருந்து இன்றைக்குச் செய்தி வந்தது. அங்கே நடந்தப் போரில் நமது சைன்யங்கள் வெற்றியடைந்தனவாம். இலங்கை மன்னன் சமாதானம் கோருகிறான். என்ன செய்யட்டும்? என்று உன் தமையன் ஓலை அனுப்பியிருக்கிறான்."[132]

என்னும் விதத்தில் உரையாடல் அமைந்திருக்கிறது.

சிக்கவீர இராஜேந்திராவில், இராணி கௌரம்மாஜிக்கும், வீரராஜனுக்குமான உரையாடல் பின்வருமாறு அமைந்துள்ளது.

இராணி : "ஜாதகம், யோகம் சரியாக இல்லை. கம்சன், தேவகி கதைைப் போல இருக்கிறது. ஜாக்கிரதை என்று தீட்சிதர் எச்சரித்தார்.

வீரராஜன் : ஆமாம், உன் தீட்சிதன் ரொம்பத்தான் கண்டுவிட்டான். அந்தக் கிழம் சொன்னானாம், இவள் கேட்டாளாம். என்னைக் கேட்காமல் நீ இதையெல்லாம் செய்திருக்கிறாய்"[133]

என்னும் விதத்தில் உரையாடல் அமைந்திருக்கிறது.

**பாடல்**

கதையின் போக்கில் இடையிடையே பாடல் வரிகளைக் கொண்டு வருவதற்குப் பாடல் நடை என்று பெயர்.

பார்த்திபன் கனவில், பார்த்திபன் விக்கிரமனுக்குப் போதிக்க வேண்டும் என்று பின்வரும் குறளைக் கூறுகிறான்.

"எண்ணித் துணிக கருமம் ; துணிந்தபின்
எண்ணுவம் என்ப(து) இழுக்கு"[134]

என்று கூறப்பட்டுள்ளது. மேலும்,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்டதாய்"[135]

என்றும்,

"குனித்த புருவமும், கொவ்வைச் செவ்
வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியில் பால் வெண்ணீரும்
இனித்த முடைய எடுத்த பொற்
பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே!"[136]

என்றும், "அன்பும் சிவனும் இரண்டென்பர் அறிவலார்"[137] என்றும்,

"அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர் விளக்கேற்றினேன்"[138]

என்றும், பாடல்கள் இடம்பெறும் நடை பார்த்திபன் கனவில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால், சிக்கவீர இராஜேந்திராவில் இத்தகைய நடை இடம்பெறவில்லை.

**அடுக்குத் தொடர்**

இந்தத் தொடரைப் பிரித்தால் பொருள் தரும். இதனை ஒரு சொல்லின் கூறோ, ஒரு சொல்லோ அடுக்கி வரலாம். தொடரில் வரும் சொல்லை அடுக்கப்படுவது என்றும் இரண்டாவது வரும் சொல்லை அடுக்கு என்றும் இரண்டும் சேர்ந்த தொடரை அடுக்குத் தொடர் என்றும் கூறுவர்.

பார்த்திபன் கனவில், "காவிரியின் கரையில், காலை வேளையில், தாய்ப் பறவைகள் குஞ்சுகளிடம், 'கொஞ்சிக் கொஞ்சி' விடைபெற்றுக் கொண்டிருந்தன"[139] எனக் கூறப்படுகிறது.

பொன்னனும், வள்ளியும் பேசிக் கொண்டிருக்கையில் "குதிரை வருகிறது. உடனே வள்ளி பொன்னனிடம், 'இரு இரு' குதிரை வருகிற சத்தம் கேட்கிறது"[140] எனக் கூறுகிறாள்.

மேலும், பொன்னன் வள்ளியிடம் "யுத்தம் வரப்போகிறது என்கிறான். அதற்கு வள்ளி, 'யுத்தம் யுத்தம்' என்றுதான் பேச்சு நடக்கிறது. ஆனால் என்னத்துக்காக யுத்தம் என்றுதான் தெரியவில்லை என்கிறாள்."[141]

சிக்கவீர இராஜேந்திராவில், சிக்கண்ண செட்டியின் மருமகளை அரசனின் ஆட்கள் கடத்திச் செல்லப் போகின்றனர் என்பதை அறிந்த செட்டி, அவளை ஊருக்கு அனுப்பிவிடுகிறான். இதனால் கோபம் கொண்ட அரசன், அரண்மனைச் சேவகத்திற்கு வரச்சொன்ன பெண்ணை ஏன் ஊருக்கு அனுப்பினாய் என்று கேட்கிறான்.

அதற்குச் செட்டி, "அரண்மணைக்கு வருகிற பருவத்துப் பெண் அரசரின் மகளாக வாழ முடியுமானால் தான் 'ஊர் ஊராகும்,' 'அரண்மனை அரண்மனையாகும்,' 'செட்டி செட்டி'யாக இருப்பான்,

‘அரசர் அரசராக’ இருப்பார். அப்படி இல்லையென்றால் எதுவும் இல்லை”[142] என்று கூறி அனுப்ப மறுக்கிறார்.

வீரராஜனின் பல்வேறு கெட்ட பழக்கவழக்கங்களினால் விரக்தியுற்ற லிங்கராஜன் “இவனுக்காகத் ‘தான் தான்’ அரசபதவியைக் காப்பாற்றப் போராடுகிறேன்”[143] இவனோ இப்படிச் சீரழிந்து கிடக்கிறானே எனக் கூறுகிறான். இவ்வாறு அடுக்குத்தொடர் நடையில் சொல்லப்பட்டுள்ளது.

**கொச்சைச் சொற்கள்**

புதினத்தின் போக்கில் கொச்சைச் சொற்களைப் பயன்படுத்தி எழுதும் நடைக்கு ‘கொச்சை நடை’ என்று பெயர். கொச்சைச் சொற்களைக் கல்கி, மாஸ்தி இருவரும் தத்தம் புதினங்களில் கையாண்டிருக்கின்றனர்.

பார்த்திபன் கனவில், வள்ளியின் தாத்தா, அவளிடம் “வள்ளி, மாரப்பனின் விஷயத்தில் ஜாக்கிரதையாய் இரு” என்கிறான். அதற்கு வள்ளி, “இந்த கரிமூஞ்சியிடம் எனக்கென்ன பயம்” “அவன் தலையிலே இடிவிழ”[144] எனச் சொல்கிறாள்.

அண்ணாந்து, குக்கூ, கக் கக், கதவண்டை, வீட்டண்ட, சோ வென்றமழை, ஓவென்ற இறைச்சல், ஊங், ஹோ என்ற பேரிரைச்சல், ஊ என்ற ஆந்தை அலறல், கொடக் போன்ற கொச்சைச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன.

சிக்கவீர இராஜேந்திராவில், தேவம்மாஜியைக் காணச் சென்ற மனைவியை வீரராஜன், “என் பேச்சைக் கேட்காமல் நடக்கும் நீ என் பெண்ஜாதி அல்ல ‘தாசி’”[145] என்கிறான்.

அதே போல, தேவம்மாஜி வீரராஜனிடம், முறை கெட்டு நடக்க நான் என் அண்ணாவைப் போன்றவள் அல்ல என்கிறாள். அதற்கு வீரராஜன், “என்னைப் பற்றிப் பேசாதே வேசி நாயே”[146] எனக் கூறுகிறான்.

வேசி, தாசி, கம்னாட்டி, வேசி மவனே, நாய் மவன், பேடிப்பயலே, தேவடியா, தேவடியாள் மவனே, அம்பட்டச்சி மவன், நாய்ப் பயல், விபச்சாரி, நாசமாய் போக, விளங்காமல் போக போன்ற கொச்சைச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாறு இரு புதினங்களிலும் நடை என்பது எடுத்துரைக்கப்படுகிறது.

## ஒப்பீடு

1. கல்கி, மாஸ்தி ஆகிய இருவரும், உவமை, உருவகம், புராணக் குறிப்பு, கடிதம், கிளைக்கதை, கனவு, நனவோடை, வருணனை, முன் உணர்த்துதல், கற்பனை, பழமொழி போன்ற உத்திகளைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.
2. இருவரும் புராணக் குறிப்பில் 'கம்சன்' என்பவனைக் குறிப்பிட்டிருக்கின்றனர். சீதை பற்றிய குறிப்புகள் இரண்டு புதினங்களிலும் இடம்பெற்றுள்ளன.
3. கடிதம் பற்றிய குறிப்பு பார்த்திபன் கனவில், குறைந்த அளவிலும், சிக்கவீர இராஜேந்திராவில் அதிக அளவிலும் கூறப்பட்டுள்ளது.
4. கனவு பற்றிய செய்தி பார்த்திபன் கனவில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளது.
5. வடமொழிச்சொற்கள் இரண்டு புதினங்களிலும் இடம்பெற்றுள்ளன. ஆங்கில மொழிக் கலப்பு சிக்கவீர இராஜேந்திராவில் மட்டும் உள்ளது.
6. உரையாடலில், பார்த்திபன் கனவில், கேள்வி கேட்டுச் சொல்வது போலவும், சிக்கவீர இராஜேந்திராவில், அடுத்தடுத்துப் பேசுவது போலவும் கையாளப்பட்டுள்ளது.
7. பாடல் நடை என்பது பார்த்திபன் கனவில் மட்டும் உள்ளது. சிக்கவீர இராஜேந்திராவில் அந்நடை இடம்பெறவில்லை.
8. கொச்சைச் சொற்களைக் கல்கியைவிட, மாஸ்தி அதிகளவினில் கையாண்டிருக்கின்றார்.

## தொகுப்புரை

- கதைகளில் ஒரு கருத்தைச் சுவைபடக் கூறவேண்டுமாயின் தகுந்த உத்திகளையும், நடையையும் பயன்படுத்த வேண்டும்.
- உத்தி என்பது ஆங்கிலத்தில் Technique எனவும், நடை style எனவும் வழங்கப்படுகிறது.
- உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டுமுறை உத்தி ஆகும். நூல்களில் திரட்டிக் கூறியவற்றை விவரித்துக் கூறி அதனால் ஒரு பயன் உண்டென அறிதற்கு உத்திகள் இன்றியமையாதன.
- பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியமும், நன்னூலும் உத்திகள் பற்றிக் கூறுகின்றன.
- உத்திகள் பற்றி, இரா, குருநாதன், ச.வே.சுப்பிரமணியன், இரா.தண்டாயுதபாணி, கு.வெ.பாலசுப்பிரமணியன், இ.மறைமலை, ந.பிச்சமுத்து, சி.சு.செல்லப்பன், இரா.பாலசுப்பிரமணியன் போன்றோரின் கருத்துக்களுடன் விளக்கப்பட்டுள்ளன.
- பார்த்திபன் கனவிலும், சிக்கவீர இராஜேந்திராவிலும், உவமை, உருவகம், புராணக் குறிப்பு, கடிதம், கிளைக்கதை, கனவு, நனவோடை, வருணனை, முன் உணர்த்துதல், கற்பனை, பழமொழி போன்ற உத்திகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.
- இலக்கியத்தின் இன்றியமையா பகுதியாக விளங்கும் நடை பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.
- இவ்விரு புதினங்களிலும், அழகான நடை, பிறமொழிக்கலப்பு, உரையாடல், கொச்சைச் சொற்கள், பாடல், அடுக்குத் தொடர் போன்ற நடைகள் காணப்படுகின்றன.

## சான்றெண் விளக்கம்


1. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-4, ப.862
2. நர்மதாவின் தமிழகராதி, ப.403
3. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்-பொருள், நூ.எ.112
4. சிவஞான முனிவர் (உ.ஆ.), நன், நூ.எ.14
5. இரா.குருநாதன், கரந்தை மலர் - 4, ப.211

*6. ச.வே.சுப்பிரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், ப.5*

*7. இரா.தண்டாயுதம், தமிழ் சிறுகதை முன்னோடிகள், ப.20*

*8. கு.வெ.பாலசுப்பிரமணயின், ஆய்வியல் நெறிகள், ப.100*

*9. இ.மறைமலை, புதுக்கவிதை முப்பெரும் உத்தி, ப.61*

*10. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப.4*

*11. சி.சு.செல்லப்பன், வளரும் தமிழ், பக்.19, 20*

*12. இரா.பாலசுப்பிரமணியன், நாவல் கலையியல், ப.22*

*13. சி.வ.மாதவன், கதைக் கலைஞர் பாரதியார், ப.92*

*14. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்.பொருள். உவமை, ப.35*

*15. கல்கி, பார்த்திபன் கனவு, ப.20*

*16. மேலது, ப.51*

*17. மேலது, ப.52*

*18. மேலது, ப.52*

*19. மேலது, ப.106*

*20. மேலது, ப.117*

*21. மேலது, ப.142*

*22. மேலது, ப.184*

*23. மேலது, ப.35*

*24. மேலது, ப.177*

*25. மேலது, ப.179*

*26. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.192*

*27. சுப்பிரமணிய தேசிகர் (உ.ஆ.), தண்டி. உரை, ப.61*

*28. கல்கி, பார்த்திபன் கனவு, ப.50*

*29. மேலது, ப.68*

*30. மேலது, ப.119*

*31. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.41*

*32. மேலது, ப.297*

*33. மேலது, ப.16*

*34. மேலது, ப.17*

*35. கல்கி, பார்த்திபன் கனவு, ப.68*

36. மேலது, ப.70
37. மேலது, ப.70
38. மேலது, ப.74
39. மேலது,74
40. மேலது, ப.305
41. மேலது, ப.305
42. மேலது, ப.306
43. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.8
44. மேலது, ப.9
45. மேலது, ப.83
46. மேலது, ப.83
47. மேலது, ப.138
48. மேலது, ப.138
49. கல்கி, பார்த்திபன் கனவு, ப.75
50. மேலது, ப.76
51. மேலது, ப.76
52. மேலது, ப.89
53. மேலது, ப.144
54. மேலது, ப.145
55. மேலது, ப.145
56. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.33
57. மேலது, ப.141
58. மேலது, ப.223
59. நா.ஜான்சிராணி, கம்பராமாயணக் கிளைக் கதைகள் - ஓர் ஆய்வு (பாலகாண்டம்), பக்.4,5
60. கல்வி, பார்த்திபன் கனவு, ப.205
61. மேலது, ப.206
62. மேலது, ப.207
63. மேலது, ப.349
64. மேலது, ப.351

65. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.30
66. மேலது, ப.30
67. மேலது, ப.31
68. மேலது, ப.162
69. மேலது, ப.163
70. கவிஞர் மித்ரா, தமிழ் ஹைக்கூ, நேற்றும் இன்றும், ப.143
71. கல்கி, பார்த்திபன் கனவு, ப.94
72. மேலது, ப.94
73. மேலது, ப.95
74. மேலது, ப.276
75. மேலது, ப.277
76. மேலது, ப.277
77. மேலது, ப.278
78. மேலது, ப.387
79. மேலது, ப.388
80. மேலது, ப.388
81. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.320
82. கல்கி, பார்த்திபன் கனவு, ப.34
83. மேலது, ப.35
84. மேலது, ப.21
85. மேலது, ப.22
86. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.48
87. மேலது, ப.48
88. மேலது, ப.49
89. மேலது, ப.118
90. மேலது, ப.120
91. கவிஞர் மித்ரா, தமிழ் ஹைக்கூ, நேற்றும் இன்றும, ப.22
92. பாரதிதாசன், அழகின் சிரிப்பு, ப.5
93. கல்கி, பார்த்திபன் கனவு, ப.1
94. மேலது, ப.2

95. மேலது, ப.21

96. மேலது, ப.39

97. மேலது, ப.50

98. மேலது, ப.72

99. மேலது, ப.85

100. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.101

101. மேலது, ப.261

102. மேலது, ப.446

103. கல்கி, பார்த்திபன் கனவு, ப.38

104. மேலது, ப.179

105. மேலது, ப.179

106. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.9

107. மேலது, ப.388

108. கல்கி, பார்த்திபன் கனவு, ப.257

109. மேலது, ப.261

110. மேலது, ப.355

111. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.49

112. மேலது, ப.51

113. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள், செய். 115

114. நர்மதாவின் தமிழ் அகராதி, ப.602

115. கல்கி, பார்த்திபன் கனவு, ப.21

116. மேலது, ப.111

117. மேலது, ப.132

118. மேலது, ப.132

119. மேலது, ப.133

120. மேலது, ப.156

121. மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.41

122. மேலது, ப.41

123. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.183

124. இரா.மோகன், மு.வ.வின் நாவல்கள், ப.94

*125.* கல்கி, பார்த்திபன் கனவு, ப.17

*126.* மேலது, ப.50

*127.* மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.39

*128.* கல்கி, பார்த்திபன் கனவு, ப.17

*129.* மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.35

*130.* மேலது, ப.255

*131.* கல்கி, பார்த்திபன் கனவு, ப.89

*132.* மேலது, ப.89

*133.* மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.9

*134.* கல்கி, பார்த்திபன் கனவு, ப.63

*135.* மேலது, ப.106

*136.* மேலது, ப.114

*137.* மேலது, ப.350

*138.* மேலது, ப.350

*139.* மேலது, ப.6

*140.* மேலது, ப.8

*141.* மேலது, ப.10

*142.* மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.73

*143.* மேலது, ப.37

*144.* கல்கி, பார்த்திபன் கனவு, ப.30

*145.* மாஸ்தி, சிக்கவீர இராஜேந்திரன், ப.8

*146.* மேலது, ப.8.

# முடிவுரை

ஆங்கிலேயர் வருகையால் தமிழ் இலக்கிய வகைகளில் ஒன்றாகக் கிடைத்தப் புதுவரவு புதின இலக்கியம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கிய இவ்வடிவம் பல்வேறு வகைகளாகக் கிளைபரப்பி, வளர்ந்து கொண்டே இருக்கிறது.

கல்கி - மாஸ்தி இருவரின் இலக்கியச் சேவையைப் பற்றி பலர் அவ்வப்பொழுது நினைவு கூர்ந்துள்ளனர். தமிழிலும், கன்னடத்திலும் ஏராளமான வரலாற்றுப் புதினாசிரியர்கள் இருந்தாலும், அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் தமிழில் கல்கி இரா.கிருஷ்ணமூர்த்தியும், கன்னடத்தில் மாஸ்தி வெங்கடேஷ ஐயங்காரும் ஆவர்.

இவ்விருவர் பற்றியும், இவர்களின் படைப்புக்களான பார்த்திபன் கனவு, சிக்கவீர இராஜேந்திரா பற்றியுமான தனித்தன்மைகளைப் பற்றிக் கூறும் விதமாக இம்முடிவுரைப் பகுதிஅமைகின்றது.

- முதன்முதலாகத் தமிழில் தோன்றிய வரலாற்றுப் புதினம் சரவணமுத்துப்பிள்ளை எழுதிய மோகனாங்கி (1895).
- இந்திய மக்கள், புதினம் என்ற இலக்கிய வடிவினை ஆங்கிலப் புதினங்களைக் கற்றுணர்ந்த பின்னர் அறிந்தனர்.
- தமிழ் வரலாற்றுப் புதினம் எனின் உடன் நினைவிற்கு வருபவர் கல்கி. அவரைத் தொடர்ந்துப் பல வரலாற்றுப் புதின ஆசிரியர்கள் தோன்றி எழுதி வருகின்றனர்.
- கன்னடப் புதினத்திற்கு ஏறக்குறைய நூற்றைம்பதாண்டு கால வரலாறு உண்டு. முதல் புதினம் எம்.எஸ்.புட்டண்ணா அவர்களின் 'மாடித்துண்ணோ மகாராய' (1915) என்பதாகும்.
- கல்கி - மாஸ்தி இருவரும் சிறுகதைகள், நெடுங்கதைகள், புதினங்கள், வரலாற்றுப் புதினங்கள், நாடகங்கள் எனப் பலவற்றையும் எழுதியுள்ளனர்.
- இரு புதின ஆசிரியர்களும் 19, 20 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர்களாகவும், இரு புதினங்களும் 20 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகவும் காணப்படுகின்றன.
- மாஸ்தி 95 வயது வரையிலும், கல்கி 55 வயது வரையிலும் வாழ்ந்து படைப்புக்களைப் படைத்துள்ளனர்.

♦ இரு புதின ஆசிரியர்களும் தமிழர்கள். இவர்கள் ஒன்றுபட்ட சென்னை இராசதானியில் ஒரே காலக்கட்டத்தில் வாழ்ந்திருக்கின்றனர்.

♦ கல்கி சோழர், பல்லவர்களின் ஆட்சிமுறைப் பற்றியும், மாஸ்தி குடவ அரசமுறைப் பற்றியும் தத்தம் புதினங்களில் கூறியிருக்கின்றனர்.

♦ கல்கி மூன்று வரலாற்று நிகழ்வுகளையும், மாஸ்தி ஏழு வரலாற்று நிகழ்வுகளையும் எடுத்துக்காட்டியுள்ளனர்.

♦ கல்கி சுதந்திரப் போராட்ட வீரர். மாஸ்தி ஆங்கிலேயர்களைப் பற்றியும், கல்கி சீனப் பயணி பற்றியும் சுட்டிக்காட்டியுள்ளனர். மாஸ்தி மத்திய அரசுப் பணியிலும், கல்கி பத்திரிகைத் துறையிலும் பணியாற்றினர்.

♦ மாஸ்தி முனைவர்பட்டம் பெற்றவர். கல்கி உயர்நிலைப் பள்ளிப் படிப்பைப் பாதியில் விட்டவர்.

♦ சமூகத்தின் நிறுவனங்களில் தனிமனிதன், குடும்பம், சாதி, சமயம், அரசியல், தொழில்கள், தெய்வங்கள், வழிபாடுகள், விழாக்கள், உணவுமுறை, கால்நடைகள், கருவிகள், புழங்குபொருட்கள், அணிகலன்கள் போன்றவை இடம்பெறுகின்றன.

♦ பார்த்திபன் கனவில் தந்தை - மகன் ; தந்தை - மகள் ; தாய் - மகன்; கணவன் - மனைவி போன்ற உறவுமுறைகள் சிறப்பானதாகவும், தாய்-மகள் உறவுமுறை குறையுடையதாகவும் படைக்கப்பட்டுள்ளன.

♦ சிக்கவீர இராஜேந்திராவில் தந்தை - மகள் ; தாய் - மகன் ; தாய் - மகள் உறவுமுறைகள் சிறப்பானதாகவும், தந்தை - மகன் ; கணவன்-மனைவி உறவுமுறைகள் குறையுடையதாகவும் படைக்கப் பெற்றுள்ளன.

♦ மக்கள் சமுதாயத்தில் இருக்கும் குறைகள், நிறைகள், அவர்தம் வாழ்க்கை நிலை என்ற எதையும் கல்கி - மாஸ்தியின் வரலாற்றுப் புதினங்களில் காணமுடியவில்லை. பெரும்பாலும் அரச குடும்பத்தினரையும், அவர்தம் அரசியல் நிலைகளையும், நிருவாகம், சூழ்ச்சி, பாதுகாப்பு, அறிவாற்றல் போன்றவற்றையும் வெளிப் படுத்தியுள்ளனர்.

♦ அக்காலச் சுரங்கப் பாதைகள் நகர்ப்புறத்துக்கும், நிலவறைக்கும், பாதாளச் சிறைக்கும், அரண்மனைக்கும் வழியமைப்பனவாக

இருந்தன. அரசியல் சிக்கலில் மற்றவர்களுக்குத் தெரியாமல், ஒருவரை மறைத்து வைக்கப் பாதாளச் சிறைகள் துணைநின்றன. அரசியல் கருவூலத்தைப் பாதுகாக்க நிலவறைகள் உதவின.

♦ கல்கியின் புதினத்தில் சிவன், பார்வதி, விநாயகர், முருகன், விஷ்ணு, காளி ஆகிய தெய்வங்களும், சிக்கவீர இராஜேந்திராவில் கருங்காளி, ஓங்காரேசுவரர், விசுவேசுவரர், அம்பிகை போன்ற தெய்வங்களும் இடம்பெற்றுள்ளன.

♦ உணவுமுறைகளில் கம்பு, கீரைக்குழம்பு பார்த்திபன் கனவிலும், மோர்க்குழம்பு, நெய்ச்சோறு சிக்கவீர இராஜேந்திராவிலும் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

♦ பட்டத்து யானை, குதிரைகள் பற்றிய செய்திகளும், பல்வேறு அரண்மனைக் கருவிகள், அணிகலன்கள் பற்றிய செய்திகளும் இரண்டு புதினங்களிலும் இடம்பெற்றுள்ளன.

♦ வரலாற்றை அப்படியே கூறுவது வரலாற்றுப் புதினம் அன்று. வரலாற்று ஆசிரியனுக்கும் வேண்டியது கற்பனை, வருணனை என வரலாற்று வல்லுநர் குறிக்கும் கற்பனையை வரலாற்றில் இடம்பெற்ற முக்கிய நிகழ்வுகளுடன் பின்னும் பொழுதுதான் வரலாற்றுப் புதினம் உருவாகிறது.

♦ வரலாறு என்பது யார், என்ன, எப்பொழுது, எங்கே, ஏன், எப்படி என்ற ஆறு கேள்விகளுக்கு விடையளிக்கும் வகையில் இருக்க வேண்டும்.

♦ இத்தகைய வரலாற்றுப் புதினத்தின் வரலாற்றுக் கூறுகளாக வரலாற்று மாந்தர்கள், நிகழ்வுகள், இடம், காலம் போன்றவை அமைகின்றன.

♦ கல்கியின் புதினத்தில், நரசிம்ம பல்லவரின் வாதாபி வெற்றி, நரசிம்மர் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம், சீன வழிப் போக்கர் யுவான் சுவாங் காஞ்சி வருகை போன்றவை வரலாற்று நிகழ்வுகளாக இடம்பெற்றுள்ளன.

♦ மாஸ்தியின் புதினத்தில், தேவம்மாஜி, சென்னபசவன் கம்பெனியாரிடம் அடைக்கலம் வேண்டியது, இருவரும் பெங்களூரில் தஞ்சமானது, சென்னை ஆளுநர் பெண்டிங்க் துரைக்குக் கடிதம் எழுதியது. கருணாகரமேனனை வீரராஜன் கைது செய்தது, போபண்ணா கர்னல் பிரேசரிடம் சேர்ந்தது, வீரராஜன் கைதானது இங்கிலாந்து சென்றது,

*அவனது மகள் கிறித்தவ மதத்தைத் தழுவியது போன்றவை வரலாற்று நிகழ்வுகளாகக் காணப்படுகின்றன.*

- *நிகழ்ச்சி நடந்த களங்களாகக் கல்கியின் புதினத்தில் உறையூர், காஞ்சி, மாமல்லபுரம், திருச்சி, திருவரங்கம் ஆகிய இடங்களும், மாஸ்தியின் புதினத்தில் மடிக்கேரி, பாகமண்டலம், பெங்களூர், மங்களூர், மைசூர், அப்பங்கொளம், இங்கிலாந்து போன்ற இடங்களும் சுட்டப்பட்டுள்ளன.*
- *கல்கியின் புதினம் பத்தாண்டுகால நிகழ்வுகளையும், மாஸ்தியின் புதினம் அறுபது ஆண்டுகளுக்கும் மேலான நிகழ்வுகளையும் சிறப்புற எடுத்து இயம்புகின்றன.*
- *புதினம் சிறந்து விளங்க அடித்தளமாக அமைவது மாந்தர் படைப்பு. கருத்துப் பொருளாக இருக்கும் ஒன்றைக் காட்சிப் பொருளாகக் காட்டுபவர்கள் அதில் உலாவரும் மாந்தர்கள்.*
- *மாந்தர்கள் முன்புல மாந்தர்கள், பின்புல மாந்தர்கள் எனப் பிரிக்கப்பட்டுக் கொடுக்கப்பட்டுள்ளனர். முன்புல மாந்தர்களாகப் பார்த்திபன் கனவில் 21 மாந்தர்களும், பின்புல மாந்தர்களாக 11 மாந்தர்களும் காணப்படுகின்றனர்.*
- *சிக்கவீர இராஜேந்திராவில் முன்புல மாந்தர்களாக 41 மாந்தர்களும், பின்புல மாந்தர்களாக 9 மாந்தர்களும் சிறப்பான முறையினில் சுட்டப்பட்டுள்ளனர்.*
- *மாந்தர்களைத் தலைமை மாந்தர்கள், இணை மாந்தர்கள், துணை மாந்தர்கள், அயல்நாட்டு மாந்தர்கள், அஃறிணை மாந்தர்கள், பிற மாந்தர்கள் எனப் பிரித்து விளக்கப்பட்டுள்ளன.*
- *தலைமை மாந்தராகப் பார்த்திபன் கனவில் பார்த்திபச் சோழரும், நரசிம்மப் பல்லவச் சக்கரவர்த்தியும், சிக்கவீர இராஜேந்திராவில் சிக்கவீர இராஜேந்திரனும் இடம்பெற்றுள்ளனர்.*
- *இணை மாந்தர்களாக விக்கிரமன், அருள்மொழி பார்த்திபன் கனவிலும், நொண்டி பசவன், கௌரம்மாஜி சிக்கவீர இராஜேந்திராவிலும், துணை மாந்தர்களாக, குந்தவிதேவி, மாரப்ப பூபதி, பொன்னன், வள்ளி, வீரபத்திர ஆசாரி, நீலகேசி போன்றோர் கல்கியின் புதினத்திலும், போபண்ணா, லட்சுமி நாராயணய்யா,*

இராஜகுமாரி, தேவம்மாஜி, சென்ன பசவன், பகவதி, தீட்சிதர் போன்றோர் மாஸ்தியின் புதினத்திலும் இடம்பெற்றுள்ளனர்.

- அயல்நாட்டு மாந்தர்களாக யுவான் சுவாங் கல்கியின் புதினத்திலும், ஆங்கில அதிகாரி, கேப்டன் துரை, பிரேசர்துரை, விக்டோரியா மகாராணி, எடித்சாது, லூஸி, ஹெலன், பாதிரி மேக்லிங் போன்றோர் மாஸ்தியின் புதினத்திலும் இடம்பெற்றுள்ளனர்.
- அஃறிணை மாந்தர்களாகப் பட்டத்து யானை, புஷ்பகம், பாரிஜாதம் போன்ற குதிரைகள் பார்த்திபன் கனவில் சுட்டப்பட்டுள்ளன. சிக்கவீர இராஜேந்திராவில் அஃறிணை மாந்தர்கள் இடம்பெறவில்லை.
- பிற மாந்தர்களாக கல்கியின் புதினத்தில் 21 மாந்தர்களும், மாஸ்தியின் புதினத்தில் 41 மாந்தர்களும் படைக்கப்பட்டுள்ளனர்.
- கதைகளில் ஒரு கருத்தைச் சுவைபடக் கூறவேண்டுமாயின் தகுந்த உத்திகளையும், நடையையும் பயன்படுத்த வேண்டும். உத்தி என்பதற்கு ஆங்கிலத்தில் Technique என்றும், நடை என்பதற்கு Style என்றும் பொருள் வழங்கப்படுகிறது.
- கல்கி - மாஸ்தியின் புதினங்களில், உவமை, உருவகம், புராணக் குறிப்பு, கடிதம், கிளைக்கதை, கனவு, நனவோடை, வருணனை, முன் உணர்த்துதல், கற்பனை, பழமொழி போன்ற உத்திகள் பயன்படுத்தப் பட்டுள்ளன.
- இவ்விரு புதினங்களிலும், அழகான நடை, பிறமொழிக்கலப்பு, உரையாடல், கொச்சைச் சொற்கள், பாடல், அடுக்குத்தொடர் போன்ற நடைகள் காணப்படுகின்றன.

இவ்வாறு கல்கி - மாஸ்தி இருவரின் படைப்புக்களும் பல்வேறு தனித்தன்மைகளைப் பெற்று சிறப்புற விளங்குகின்றன. வரலாற்றுப் புதினத்திற்குப் பெருமை சேர்த்த இவ்விருவரையும் வரலாற்றுப் புதின உலகின் வல்லுநர்கள் என்று கூறலாம். இருவரும் தமிழகம், கன்னடம் பற்றி அறிந்துகொள்ளப் புதினங்கள் வழித் துணைபுரிந்துள்ளனர்.

# துணைநூற் பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள் :**

| | |
|---|---|
| *1. கல்கி* | *பார்த்திபன் கனவு, சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை - 14, முதற்பதிப்பு - 2000.* |
| *2. சீனிவாசா* | *சிக்கவீர இராஜேந்திரா, மாஸ்தி வெங்கடேஷ அய்யங்கார் சாலை, கவிபுரத விஸ்தரணா, பெங்களூரு - 560 019, முதற்பதிப்பு - 1956.* |
| *3. மாஸ்தி வெங்கடேஷ அய்யங்கார் ஹேமாஆனந்த தீர்த்தன் (தமிழாக்கம்)* | *சிக்கவீர இராஜேந்திரன், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, முதற்பதிப்பு - 1974.* |

**துணைமைச் சான்றாதாரங்கள் :**

| | |
|---|---|
| *1. அகிலன்* | *எனது நாவல்களில் சமுதாயச் செய்தி (கட்டுரை), ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு - 1985.* |
| *2. அதியமான் நெடுமானஞ்சி* | *புறநானூறு, ஔவை துரைசாமிப் பிள்ளை விளக்க உரை, கழக வெளியீடு, சென்னை - 1, மறுபதிப்பு - 1970.* |

*3. அறவாணன், க.பா.* — *மரபு வழிபாடு,*
*திராவிட ஆப்பிரிக்கா ஒப்பீடு,*
*பாரி நிலையம்,*
*சென்னை - 1,*
*முதற் பதிப்பு - 1984.*

*4. ஆனந்தன், பா.* — *இந்திய ஒப்பிலக்கியம்,*
*(சூசன் பாசுனெட்டை முன் வைத்து),*
*மீனாட்சி புத்தக நிலையம்,*
*48, தானப்ப முதலியார் தெரு,*
*மதுரை - 625 001,*
*முதற் பதிப்பு - 2003.*

*5. இரத்தினம், கா.பொ.* — *எழுத்தாளர் கல்கி,*
*(மலாய்ப் பல்கலைக் கழகக்*
*கருத்தரங்கில் தமிழறிஞர் ஐவர்*
*வழங்கிய உரைகள்),*
*பழனியப்பா பிரதர்ஸ்,*
*சென்னை - 14,*
*முதற்பதிப்பு - 1984.*

*6. இராசமாணிக்கனார், மா. (உ.ஆ.)* — *கலித்தொகை,*
*வள்ளுவர் பண்ணை,*
*சென்னை - 1,*
*முதற் பதிப்பு - 1958.*

*7. இராமலிங்கம், மா.* — *இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்*
*இலக்கியம்,*
*தமிழ்ப் புத்தகாலயம்,*
*சென்னை - 1,*
*முதற் பதிப்பு - 1973.*

*8. இராமலிங்கம், மா.* — *நாவல் இலக்கியம்,*
*தமிழ்ப் புத்தகாலயம்,*
*சென்னை,*
*முதற் பதிப்பு - 1976.*

9. இளம்பூரணர் (உரை.) தொல்காப்பியம்-பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
சென்னை,
இரண்டாம் பதிப்பு - 1997.

10. கருணாணந்தன், அ. வரலாறு என்றால் என்ன?
பாரதி புத்தகாலயம்,
சென்னை - 5,
முதற்பதிப்பு - 2011.

11. கல்கி அலை ஓசை,
பாரதி பதிப்பகம்,
சென்னை - 17,
முதற் பதிப்பு - 1955.

12. கல்கி ராஜேந்திரன் அது ஒரு பொற்காலம்,
வானதி பதிப்பகம்,
23, தீனதயாளு தெரு,
தி.நகர்,
சென்னை - 17,
முதற்பதிப்பு - 2009.

13. கனகசுந்தரம், வெ. ஜெகசிற்பியின் சமூகப் புதினங்கள்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1985.

14. கீதா, கோ.வெ. தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம்,
அணியகம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1979.

15. குருநாதன், வ. சங்க கால அரச வரலாறு,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர் - 5,
முதற்பதிப்பு - 1993.

16. குழந்தைசாமி, அ. — இருபதாம் நூற்றாண்டு தமிழப் புதினங்களில் மனித விடுதலை, தி பார்க்கர், சென்னை - 14, முதற் பதிப்பு - 2004.

17. சக்திவேல், சு. — நாட்டுப்புறவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு - 1983.

18. சண்முகம், ர. — 200 புகழ்பெற்ற உலக மேதைகள், சிறுவர் நூற்பதிப்புக் கழகம், சென்னை - 14, முதற் பதிப்பு - 1992.

19. சதாசிவப் பண்டாரத்தார், தி.வை. — பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலை நகர், முதற் பதிப்பு - 1975.

20. சந்திரா, யாழ்.சு. — ஒப்பிலக்கியக் கட்டுரைகள், யாழகம், வடக்காவணி மூலவீதி, மதுரை - 625 001, முதற் பதிப்பு - 2005.

21. சாமிநாத ஐயர், உ.வே. (உ.ஆ.) — புறநானூறு, கழக வெளியீடு, சென்னை, முதற் பதிப்பு - 1977.

22. சிதம்பரநாத செட்டியார் அ., — English - Tamil Dictionary, சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, மறு பதிப்பு - 1981.

23. சிவஞான முனிவர் (உ.ஆ.) நன்னூல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 108,
மறுபதிப்பு - 1992.

24. சுந்தரராஜன் (சிட்டி), பொ.கோ.
தமிழ் நாவல் நூறாண்டு,
வரலாறும் வளர்ச்சியும்,
கிறித்துவ இலக்கியச் சங்கம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1977.

25. சுப்பிரமணிய தேசிகர்
தண்டியலங்காரம்,
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
திருநெல்வேலி,
முதற்பதிப்பு - 1938.

26. சுப்ரமணியம், க.நா.
இலக்கியச் சாதனையாளர்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 001,
முதற்பதிப்பு - 1984.

27. சுப்ரமணியன், ச.வே.
இளங்கோவின் இலக்கிய உத்திகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 13,
முதற்பதிப்பு - 1984.

28. மேலது
தொல்காப்பியம் தெளிவுரை,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 108,
முதற் பதிப்பு - 1998.

29. செல்லப்பன், தி.சு.
வளரும் தமிழ்,
அருணோதயா பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1987.

30. செல்லம், வே.தி. தமிழக வரலாறு புதிய பார்வை,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 2006.

31. செல்வம், வி.டி. தமிழக வரலாறும் பண்பாடும்,
மதுரை பப்ளிஷிங் ஹவுஸ்,
மதுரை,
முதற்பதிப்பு - 1976.

32. செல்வராசன், மா. பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர்,
வண்ணமலர் வெளியீடு,
சென்னை,
முதற் பதிப்பு - 1979.

33. ஞானசம்பந்தன், அ.ச. திரு.வி.க.
(கல்கி நினைவுச் சொற்பொழிவுகள்),
பாரி நிலையம்,
சென்னை - 1,
முதற் பதிப்பு - 1968.

34. ஞானசம்பந்தன், அ.ச. இலக்கியக் கலை,
கழக வெளியீடு,
சென்னை - 18,
முதற் பதிப்பு - 1999.

35. ஞானமூர்த்தி, தா.ஏ. இலக்கியத் திறனாய்வியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1976.

36. தண்டாயுதம், இரா. தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 5,
முதற் பதிப்பு - 1975.

37. மேலது — நாவல் வளம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 1982,
முதற்பதிப்பு - 1994.

38. தண்டியாசிரியர் — தண்டியலங்காரம்,
கழக வெளியீடு,
சென்னை - 1,
முதற் பதிப்பு - 1982.

39. தமிழண்ணல் — தமிழ் இலக்கிய வரலாறு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை - 625 001,
இருபத்தைந்தாம் பதிப்பு - 2009.

40. தாக்கர், கலா.கே. — கல்கி-முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 600 005,
முதற் பதிப்பு - 1988.

41. தாயம்மாள் அறவாணன் — தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 13,
முதற்பதிப்பு - 1993.

42. திருவள்ளுவர் — திருக்குறள் பரிமேலழகர் உரை,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை - 600 108,
ஐந்தாம் பதிப்பு - 1991.

43. திரு.வி.க. — திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள் (பகுதி-1),
கழக வெளியீடு,
சென்னை - 1,
பதிப்பு - 1973.

44. தொல்காப்பியர் — தொல்காப்பியம்,
பேராசிரியர் உரை,
கழக வெளியீடு,
சென்னை - 1,
மறு பதிப்பு - 1969.

45. நாற்கவிராச நம்பி — அகப்பொருள் விளக்கம்,
கழக வெளியீடு,
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
திருநெல்வேலி,
முதற் பதிப்பு - 1963.

46. பாரதிதாசன் — பாரதிதாசன் கவிதைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 18,
முதற் பதிப்பு - 1998.

47. பாரதியார் — பாரதியார் கவிதைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
முதற் பதிப்பு - 1992.

48. பாலசுப்பிரமணியன் இரா. — நாவல் களங்கள்,
சத்யா வெளியீடு,
மதுரை,
முதற்பதிப்பு - 1995.

49. மேலது — நாவல் கலையியல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 113,
முதற் பதிப்பு - 2004.

50. பாலசுப்பிரமணியன், கு.வெ. — ஆய்வியல் நெறிகள்,
உமாநூல் வெளியீட்டகம்,
தஞ்சாவூர் - 613 004,
மூன்றாம் பதிப்பு - 2004.

51. பாலுசாமி, நா. வாழ்வியற் களஞ்சியம்,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்,
முதற் பதிப்பு - 1991.

52. பாஸ்கல் கிஸ்பர்ட், எக்.ஜே. சமூகவியலின் அடிப்படைக்
கோட்பாடுகள்,
நாராயணன் (மொ.பெ.ஆ.),
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
தமிழ்நாடு அரசாங்கம்,
முதற் பதிப்பு - 1964.

53. பிச்சமுத்து, ந. மு.வ.வின் நாவல்களில் சமுதாய
மறுமலர்ச்சியின் தாக்கம்,
சக்தி புத்தக நிலையம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1988.

54. மேலது திறனாய்வும் தமிழ் இலக்கியக்
கொள்கைகளும்,
சக்தி வெளியீடு,
சென்னை,
மறுபதிப்பு - 1998.

55. பிச்சை, அ.
ஆனந்தகுமார், பா. ஒப்பியல் நோக்கில் பாரதியும் பக்தி
இலக்கியமும்,
பாரதி ஆய்வகம் - பதிப்புத்துறை,
கிராமியப் பல்கலைக்கழகம்,
காந்தி கிராமம் - 624 302,
முதற் பதிப்பு - 2004.

56. மறைமலை, சி.இ. புதுக்கவிதை முப்பெரும் உத்தி,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 108,
முதற் பதிப்பு - 1985.

57. மேலது — இலக்கியமும் சமூகவியலும்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1991.

58. மாவினகெரெ
இரங்கநாதன் — சீனிவாசா,
(மாஸ்தி வெங்கடேஷ ஐயங்கார்),
புரோகாமி சாகித்ய சங்கா,
மல்லேஷ்வரம்,
பெங்களூர் - 3,
முதற்பதிப்பு - 1972.

59. முத்தையா, கரு. — செயகாந்தன் நாவல்களில் பாத்திரப் படைப்பு,
முத்துமீனாள் பதிப்பகம்,
தேவகோட்டை,
முதற் பதிப்பு - 1980.

60. மோகன், இரா.
மணிவேல், மு.
நாச்சிமுத்து, கி.
சேதுபாண்டியன், தூ.
(ப.ஆ.) — ஆய்வுக் கோவை (2007),
இந்தியப் பல்கலைக் கழகத்
தமிழாசிரியர் மன்றம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021,
முதற்பதிப்பு - 2007.

61. மோகன், இரா. — மு.வ.வின் நாவல்கள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
முதற் பதிப்பு - 1972.

62. மேலது — கல்கி கட்டுரைகள் (தொகுதி - 3),
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 108,
முதற் பதிப்பு - 1999.

63. மைதிலி சிவராமன் சமூகம் ஒரு மறுபக்கம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை - 600 017,
முதற் பதிப்பு - 1998.

64. வரதராசன், மு. தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்ய அகாதெமி,
முதற் பதிப்பு - 1972.

65. வல்லிக்கண்ணன் புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை,
மூன்றாம் பதிப்பு - 1992.

66. வீராசாமி, தா.வே. தமிழ்ச் சமூக நாவல்கள்,
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு - 1998.

67. வேங்கடசாமி, மயிலை.சீனி. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்,
சாந்தி நூலகம்,
சென்னை - 1,
முதற் பதிப்பு - 1956.

**அகராதிகள் :**

1. இராமநாதன், பி. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி (2),
இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இண்டியன் ஸ்டடீஸ்,
6, நல்லதம்பி தெரு, எல்லீஸ் ரோடு,
சென்னை - 600 002,
முதற்பதிப்பு - 1984.

2. பவானந்தம் பிள்ளை, எஸ். திவான் பகதூர் — பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098, முதற் பதிப்பு - 1925.

3. மாணிக்க முதலியார், கோ. அங்கமுத்து, என். கலைவாணி, என். பத்மாவதி, எஸ். — நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், நல்லநூல் வெளியீட்டாளர்கள், 16/7, ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தியாகராய நகர், சென்னை-600 017, முதற்பதிப்பு - ஆகஸ்ட் 2002.

4. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி நான்கு) — தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 5, முதற்பதிப்பு - 1988.

**இதழ் :**

1. குருநாதன், இரா. — கரந்தை மலர், மருதம் பதிப்பகம், தஞ்சாவூர், முதற் பதிப்பு - 2002.

**ஆய்வேடுகள் :**

1. கண்ணாத்தாள், கே. — விக்கிரமனின் வரலாற்று நாவல்களில் பெண்கள், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2004.

2. தேவகி, பெ. — சிவசங்கரி-வாசந்தி நாவல்களில் பெண்கள் ஓர் ஒப்பாய்வு, முனைவர்பட்ட ஆய்வேடு, பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர், 2003.

3. தென்றல், பா. — யயாதி, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2007.

4. பழனிமுத்து, சு. — சு.சமுத்திரம் சிறுகதைகள், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2008.

**ஆங்கில நூல்கள் :**

1. Elizabeth Fisher, Women's sexual evoluation and the shaping of society, Archor press, Neyork, F.E. 1979.
2. Maren Edwood, Characters make your story, (இரா.மோகனின் மு.வ.வின் நாவல்கள் நூலில் மேற்கோளாக வந்துள்ளது, ப.58, மு.ப.1972).

அட்டவணை - 1

## இரு புதினங்களில் மாந்தர் படைப்புக்களின் எண்ணிக்கை

| வ. எண். | புதினம் பெயர்கள் | முன்புல மாந்தர் | | | | | பின்புல மாந்தர் | | | | | மொத்தம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | வரலாற்று மாந்தர் | | கற்பனை மாந்தர் | | அஃறிணை மாந்தர் | வரலாற்று மாந்தர் | | கற்பனை மாந்தர் | | அஃறிணை மாந்தர் | | | |
| | | ஆண் | பெண் | ஆண் | பெண் | | ஆண் | பெண் | ஆண் | பெண் | | ஆண் | பெண் | மொத்தம் |
| 1. | பார்த்திபன் கனவு | 6 | 1 | 19 | 7 | --- | 7 | --- | 4 | 1 | 3 | 36 | 9 | 48 |
| 2. | சிக்கவீர இராஜேந்திரா | 10 | 5 | 39 | 7 | --- | 6 | --- | 2 | 1 | --- | 57 | 13 | 70 |

அட்டவணை - 2

# மாந்தர்கள் - பட்டியல்

| வ. எண். | முன்புல மாந்தர்கள் | பார்த்திபன் கனவு | | சிக்கவீர இராஜேந்திரா | |
|---|---|---|---|---|---|
| | | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 1. | வரலாற்று மாந்தர்கள் | 1. சீராளன்<br>2. திருநாவுக்கரசர்<br>3. நரசிம்ம பல்லவன் (சிவனடியார், போர்வீரன், வீரசேனன்)<br>4. பரஞ்சோதி (சிறுத் தொண்டர்)<br>5. மகேந்திரன்<br>6. யுவான் சுவாங்<br><br>ஆண் - 6 : பெண் - 1 | 1. திருவெண்காட்டு நங்கை | 1. லிங்கராஜன்<br>2. சிக்கவீர இராஜேந்திரன்<br>3. நொண்டி பசவன்<br>4. சென்ன பசவன்<br>5. போபண்ணா (மந்திரி)<br>6. கேப்டன் துரை<br>7. மங்களூர் கலெக்டர்<br>8. மைசூர் ரெஸிடெண்ட்<br>9. மதராஸ் கவர்னர்<br>10. பிரேசர் துரை<br><br>ஆண் - 10 : பெண் - 5 | 1. மேவம்மாஜி<br>2. ளெரம்மாஜி<br>3. இராஜகுமாரி<br>4. விக்டோரியா மகாராணி<br>5. எடித் சாது |

| வ. எண். | முன்புல மாந்தர்கள் | பார்த்திபன் கனவு | | சிக்கவீர இராஜேந்திரா | |
|---|---|---|---|---|---|
| | | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 2. | கற்பனை மாந்தர்கள் | 1. அச்சுத பல்லவராயன் தூதன்<br>2. அச்சுத வர்மர்<br>3. அர்ச்சகர்<br>4. ஆசாரிய ஸ்தபதி<br>5. உதய வர்மர்<br>6. உதய வர்மரின் ஆள்<br>7. கப்பல் தலைவன்<br>8. குமரப்பன்<br>9. சித்தார்த்தன்<br>10. சித்திரகுப்தன் (குள்ளன்) | 1. அருள்மொழி<br>2. கிழவி<br>3. குந்தவி (மாதவி, ரோகிணி)<br>4. தங்கம்<br>5. மரகதம்<br>6. வள்ளியின் பாட்டி | 1. அரண்மனைச் சேவகன்<br>2. அப்பாஜி<br>3. வீரண்ணா<br>4. லஷ்மிநாராயணய்யா<br>5. சூரிய நாராயணன்<br>6. பாணே புரோகிதன்<br>7. உத்தய்ய தக்கன்<br>8. சேவகன் பித்தய்யா<br>9. தீட்சிதர்<br>10. சென்னவீரன்<br>11. உத்தய்யன்<br>12. அபரம்பரர் | 1. பகவதி<br>2. சாவித்ரம்மா<br>3. நாகம்மா<br>4. லூஸி<br>5. ஹெலன்<br>6. கொக்கன் மனைவி<br>7. அப்பங்கொளத்து அரண்மனை வேலைக்காரி. |

| வ. எண். | முன்புல மாந்தர்கள் | பார்த்திபன் கனவு | | சிக்கவீர இராஜேந்திரா | |
|---|---|---|---|---|---|
| | | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| | | 11. நீலகேசி (ஒற்றை கை மனிதன் கால ருத்திர பைரவன்)<br>12. பார்த்திபச் சோழன்<br>13. பொன்னன்<br>14. மாரப்ப பூபதி<br>15. விக்கிரமன் (தேவசேனன்)<br>16. விஷ்ணு சர்மர்<br>17. வேலப்பன்<br>18. வைத்தியன் | | 13. பார்சண்ணா<br>14. ராமப்பா<br>15. சூரப்பா<br>16. மோகலிங்கம்<br>17. சிக்கண்ண செட்டியார்<br>18. சிக்கராம செட்டி<br>19. பொன்னப்பா<br>20. காரியப்பா<br>21. அபரம்பரசுவாமி<br>22. நாராயணன்<br>23. ராமசெப்பு<br>24. முத்தன்<br>25. விசுவம்<br>26. மாசன்<br>27. பெரிய அதிகாரி<br>28. பார்க்கர் | |

| வ. எண். | முன்புல மாந்தர்கள் | பார்த்திபன் கனவு | | சிக்கவீர இராஜேந்திரா | |
|---|---|---|---|---|---|
| | | அஃறிணை | பெண் | ஆண் | பெண் |
| | | 1. பாரிஜாதம் (குதிரை)<br>2. புஷ்பகம் (குதிரை)<br>3. பட்டத்து யானை | | 29. இராஜபார்ட்<br>30. சோமன்<br>31. லக்கன்<br>32. துக்ரன்<br>33. உக்ரி<br>34. மணியக்காரர்<br>35. கொக்கன்<br>36. போபண்ணாவின் கணக்கப்பிள்ளை<br>37. மாதப்பன்<br>38. பாதிரி மேக்லிங் | |
| | | ஆண் - 19; பெண் - 7, அஃறிணை - 3 | | ஆண்-39; பெண் - 7, | |
| | | மொத்தம் - ஆண் = 25; பெண் - 8<br>அஃறிணை - 3 | | மொத்தம் = ஆண் -49, பெண் - 12 | |

| வ. எண். | பின்புல மாந்தர்கள் | பார்த்திபன் கனவு | | சிக்கவீர இராஜேந்திரா | |
|---|---|---|---|---|---|
| | | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 1. | வரலாற்று மாந்தர்கள் | 1. இராஜராஜன்<br>2. இராஜேந்திரன்<br>3. கரிகாலன்<br>4. ஞானசம்பந்தர்<br>5. நெடுமுடிக்கிள்ளி<br>6. மகேந்திர வர்மன்<br>7. புலிகேசி | --- | 1. திப்புசுல்தான்<br>2. ஹைதர் அலி<br>3. நிஜாம்<br>4. மராட்டியர் அரசன்<br>5. மாக்லி மாட்<br>6. தொட்டவீர இராஜேந்திரன் | --- |
| | | ஆண் - 7 ; பெண் - இல்லை | | மொத்தம் - ஆண் - 6; பெண் - இல்லை | |

| வ. எண். | பின்புல மாந்தர்கள் | பார்த்திபன் கனவு | | சிக்கவீர இராஜேந்திரா | |
|---|---|---|---|---|---|
| | | **ஆண்** | **பெண்** | **ஆண்** | **பெண்** |
| 2. | கற்பனை மாந்தர்கள் | 1. ஆயனர்<br>2. பார்த்திபன் தந்தை<br>3. விதூஷகன்<br>4. விஷ்ணுவர்த்தன மகாராஜா | 1. சிவகாமி | 1. காஸாமேஜர்<br>2. ஹாகர் | 1. தேவக்கா |
| | | ஆண் - 4 ; பெண் - இல்லை | | மொத்தம் - ஆண் - 2 ; பெண் - 1 | |
| | | மொத்தம் - ஆண் - 11; பெண் - 1<br>மொத்தப் பாத்திரங்கள் - 36+9+3=48 | | | |